பொள்ளாச்சி தமிழிசைச் சங்கம்
பதினெட்டாம் ஆண்டு விழா மலர்
நாள் : 8-12-1988






# பொள்ளாச்சி தமிழிசைச் சங்கம்

135, கடைவீதி, பொள்ளாச்சி
642 001

# பதினெட்டாம் ஆண்டு விழா மலர்

நாள்
8-12-1988






# பொள்ளாச்சி தமிழிசைச் சங்கம்

135, கடைவீதி, பொள்ளாச்சி 642 001

## பதினெட்டாம் ஆண்டு விழா

**நாள் : 8—12—1988 வியாழன் மாலை 5-30 மணி**
**இடம் : மகாத்மா காந்தி மண்டபம், பொள்ளாச்சி**

| | | |
|---|---|---|
| தலைமை ஏற்று தொடங்கி வைப்பவர் | : | **உயர்திரு T. T. வாசு அவர்கள்**<br>(இயக்குநர், T. T. K. சார்பு நிறுவனங்கள் & தலைவர், மியூசிக் அகாடமி சென்னை) |
| ஆண்டு மலர் வெளியிட்டு, கலைமாமணி திரு. V. S. ராகவன் அவர்கட்குப் பொன்னாடை போர்த்தி பரிசு வழங்குபவர் | } | **அருட்செல்வர், சங்கப் புரவலர்**<br>**டாக்டர் திரு. நா. மகாலிங்கம் அவர்கள்**<br>(தலைவர், சக்தி நிறுவனங்கள்) |
| முதல் மலரைப் பெற்றுப் பாராட்டுபவர் | : | **MJF. Lion S. V. S. சிவநாத் அவர்கள்**<br>(முன்னாள் அரிமா சங்க ஆளுநர்)<br>(மூத்த செயல் அலுவலர்<br>TV சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் மதுரை) |
| வாழ்த்துரை வழங்குபவர் | : | **டாக்டர் ஔவை து. நடராசன் அவர்கள்**<br>(இயக்குநர், தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை) |
| ஏற்புரை | : | **கலைமாமணி நடிகர் V. S. ராகவன் அவர்கள்**<br>(செயலாளர், தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம்) |
| நாட்டிய நாடகம் | : | பொன்விழா கண்ட சென்னை சரஸ்வதி கான நிலையம் வழங்கும் திரைப்படப் புகழ் **ரேவதி & 15 மாணவிகள்** பங்குபெறும் **'லலித ப்ரபாவம்'** |
| 9-12-88 வெள்ளி மாலை 5-30 மணி | : | தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றமும் பொள்ளாச்சி தமிழிசைச் சங்கமும் இணைந்து நடத்தும் **சுவாமி சங்கரதாஸ் கலை விழா** |
| தலைமை | : | **திரு. என். கோவிந்தன் I. A. S. அவர்கள்**<br>(கோவை மாவட்ட ஆட்சித் தலைவர்) |

| | | |
|---|---|---|
| நலிந்த கலைஞர்கட்கு பணமுடிப்பு வழங்குபவர் | } | டாக்டர் ஔவை து. நடராசன் |
| சுவாமி சங்கரதாஸ் படத் திறப்பு | : | திரு. B. K. கிருஷ்ணராஜ் வாணவராயர் (தலைவர், பொள்ளாச்சி தமிழிசைச் சங்கம்) |
| வாழ்த்துரை | : | திருமதி விஜயலட்சுமி நவநீதகிருஷ்ணன் & திரு. டி. என். சிவதாணு |
| வரலாற்று நாடகம் | : | கலைமாமணி திரு. S. M. இராமனாதன் & குழுவினர் பங்குபெறும் சென்னை வைரம் நாடக சபா வழங்கும் **'வள்ளல் சீதக்காதி'** (வரலாற்று நாடகம்) (By. ரவீந்திரன்) |
| இசைப் பேருரை | : | பள்ளத்தூர் சீதாலட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரி தமிழ்ப் பேராசிரியை |

**டாக்டர் சரஸ்வதி ராமனாதன்**
கம்பராமாயணம் — இசைப் பேருரை

தினசரி மாலை 6-30 மணிக்கு

10—12—88 சனி : **போகமும் யோகமும்**
11—12—88 ஞாயிறு : **வரமும் வனமும்**
12—12—88 திங்கள் : **அடியும் முடியும்**
13—12—88 செவ்வாய் : **கள்ளனும் கவடியும்**

தமிழ்நாடு இயல் இசை நாடக மன்ற
நிதி உதவியுடன் நடைபெறும் கலை நிகழ்ச்சி

14—12—88 புதன் : **திருமதி ஸ்ரீகலா பரத்**
— பரத நாட்டியம்

**ஆசிரியை : கலைமாமணி திருமதி K. J. சரசா**

டாக்டர் சரஸ்வதி ராமனாதன் இசைப் பேருரை
தொடர்ச்சி

15—12—88 வியாழன் : **தருமமும் பெருமையும்**
16—12—88 வெள்ளி : **கற்பும் காவலும்**
17—12—88 சனி : **அறமும் மறமும்**
18—12—88 ஞாயிறு : **புனைந்தான் மவுலி**



# மலர் சிந்தும் தேன்துளிகள்





| நாள் | விழா | தலைமை | மலர் வெளியிட்டவர் | பாராட்டு பெற்றவர் | சிறப்புரை & வாழ்த்துரை வழங்கியவர் |
|---|---|---|---|---|---|
| 15-10-70 | தொடக்க விழா | திரு. N. மகாலிங்கம் | — | — | — |
| 10-10-71 | முதல் ஆண்டு விழா | டாக்டர் ராஜாசர் M.A. முத்தையா செட்டியார் | திரு. N. மகாலிங்கம் | — | திரு. T. K. பகவதி & திருமதி சௌந்தரம் கைலாசம் |
| 27-10-72 | 2ஆம் ஆண்டு விழா | அமைச்சர் மாண்புமிகு க. இராசாராம் | திரு. G. R. கோவிந்தராஜுலு | மதுரை திரு. S. சோமசுந்தரம் | கவியரசு கண்ணதாசன் |
| 19-10-73 | 3ஆம் ஆண்டு விழா | சபாநாயகர் புலவர் கா. கோவிந்தன் | கவிஞர் திரு.S.D.சுந்தரம் | — | திருக்குறள் திரு. V. முனிசாமி |
| 2-12-74 | 4ஆம் ஆண்டு விழா | தலைமை நீதிபதி மாண்புமிகு K. வீராசாமி | திருமதி சந்திரகாந்தி கோவிந்தராஜுலு | — | திரு N. மகாலிங்கம் |
| 30-11-75 | 5ஆம் ஆண்டு விழா | மாண்புமிகு நீதிபதி திரு. P. R. கோகுலகிருஷ்ணன் | திரு P. R. ராமகிருஷ்ணன் | செம்மங்குடி திரு R. சீனிவாசன் | — |
| 6-11-76 | 6ஆம் ஆண்டு விழா | மாண்புமிகு நீதிபதி M. M. இஸ்மாயில் | தவத்திரு சுந்தர சுவாமிகள் | டாக்டர் சீர்காழி கோவிந்தராஜன் | திரு. N. மகாலிங்கம் |
| 1-10-77 | 7ஆம் ஆண்டு விழா | கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் | உடுமலை திரு. V.வித்தியாசாகர் | மகாராஜபுரம் திரு. V. சந்தானம் | திரு. க.கு. கோதண்ட ராமசாமி கவுண்டர் |
| 14-10-78 | 8ஆம் ஆண்டு விழா | முன்னாள் நீதிபதி மாண்புமிகு S. மகராஜன் | திரு D.V.நாராயணசாமி | நாமகிரிப்பேட்டை திரு K. கிருஷ்ணன் | திரு. A. சுன்னு சாகிப் |
| 1-12-79 | 9ஆம் ஆண்டு விழா | டாக்டர் ம. பொ. சிவஞானம் | மாண்புமிகு நீதிபதி திரு. R.செங்கோட்டுவேலன் | டாக்டர் பத்மா சுப்பிரமணியம் | திரு. N. மகாலிங்கம் |
| 19-12-80 | 10ஆம் ஆண்டு விழா | நீதிபதி திரு. P. வேணுகோபால் | குன்றக்குடி அடிகளார் | திரு. அகிலன் | கலெக்டர் திரு. T. S. சிவப்பிரகாசம் |
| 19-12-81 | 11ஆம் ஆண்டு விழா | நீதிபதி திரு. S. மோகன் | DIG திரு. K. கந்தசாமி | வீணை திரு. சிட்டிபாபு | கலெக்டர் K. மலைச்சாமி |
| 28-11-82 | 12ஆம் ஆண்டு விழா | திரு. G. கருப்பையா மூப்பனார் | திரு. கோ. செல்வம் | டாக்டர் M.L. வசந்தகுமாரி | — |
| 18-11-83 | 13ஆம் ஆண்டு விழா | திரு. T. V. வெங்கட்ராமன் IAS | Dr. G. லெட்சுமிபதி | டாக்டர் M. பாலமுரளி கிருஷ்ணா | திரு. M. வெங்கட கிருஷ்ணன் |
| 15-12-84 | 14ஆம் ஆண்டு விழா | மாண்புமிகு நீதிபதி S. நடராஜன் | திரு. N. மகாலிங்கம் | திரு. S. V. சகஸ்ரநாமம் | — |
| 1- 3-86 | 15ஆம் ஆண்டு விழா | மத்திய அமைச்சர் மாண்புமிகு ப. சிதம்பரம் | ரோட்டரி கவர்னர் திரு. P. N. கோபால் | இசை பேரறிஞர் திரு. மீ.ப. சோமசுந்தரம் | — |
| 25- 4-87 | 16ஆம் ஆண்டு விழா | சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி மாண்புமிகு K. வெங்கடசாமி | அருட்செல்வர் டாக்டர் N. மகாலிங்கம் | இலக்கிய பேரறிஞர் திரு. M. வைத்தியலிங்கம் | திரு. பகீரதன் |
| 15- 4-88 | 17ஆம் ஆண்டு விழா | Rtn. திரு. G. வரதராஜ் M.P. | திரு. P. லட்சுமணன் | திருமதி மணி கிருஷ்ணசாமி | திரு. A. S. சுப்பையன் |
| 8-12-88 | 18ஆம் ஆண்டு விழா | திரு. T. T. வாசு | திரு. N. மகாலிங்கம் | திரு. V. S. ராகவன் | அரிமா MJF / S.V.S. சிவநாத் & திரு. ஔவை து. நடராஜன் |




# காணிக்கை



வாகீச கலாநிதி, கலைமகள் ஆசிரியர், ஐம்பதாண்டுகளுக்கு மேலாக பத்திரிகைத் தொழிலில் தன்னேரில்லாத மாமேதை, தமிழுலகம் மறக்க முடியாத இலக்கியப் பேரறிஞர், பழமைக்கும் புதுமைக்கும் பாலமாக விளங்கியவர்

**அமரர் கி. வா. ஜகந்நாதன் அவர்களுக்கு**

இம்மலரை காணிக்கை ஆக்குகிறோம்.

# நேருவுக்கு நூறு ஆண்டு



இளைய பாரதத்தை நெஞ்சுக்குள் சுமந்து பிறப்பித்த தாயும்ஆன தலைவர்தான் ஜவஹர்லால் நேரு அவர்கள் ■ தேசப்பிதா காந்தியடிகளாலேயே தமது அரசியல் வாரிசு என்று அறிவிக்கப் பட்டவர் ■ பாரதத்தின் முதல் பிரதமராகி 1947 முதல் 1964ம் ஆண்டு மறையும் வரை 17 ஆண்டுகள் பொறுப்பு வகித்தவர் ■ சமாதானச் சகவாழ்வுக்கான பஞ்சசீலக் கொள்கைகளை உருவாக்கி அணிசேரா நாடுகளின் அமைப்புக்கு அஸ்திவாரமிட்டவர் ■ திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி என்கிற திசை வழி காட்டிய மாமேதை ■ ஆக்கவேலைக்கே அணுசக்தி என்ற லட்சியத்தை அன்றைக்கே அறிவித்தவர் ■ ஜனநாயகத்தை சுதந்திர பாரதத்தின் சுவாச மூச்சாகக் கருதியவர் ■ சமதர்மத்தை பாரதத்தின் சத்தியப்பாதையாக தேர்ந்தெடுத்தவர் ■ நேருவும், காந்தியும் நிலத்தடி நீராக நீடிப்பதால்தான் பாரதம் இன்னும் பாலையாகாமல் இருந்து வருகிறது ■



தமிழ் நாடகத் தந்தை
**சங்கரதாஸ் சுவாமிகள்**

# சங்க அமைப்புக் குழு

### கணக்குக் குழு

திரு. கே. ஆறுமுகம்,
பி.எஸ்ஸி. (அமைப்பாளர்)
திரு. கே. பார்த்தசாரதி செட்டியார்
திரு. எம். அழகப்பன்
திரு. பி. மன்னார்ராமுடு செட்டியார்
திரு. ஆர். பாலசண்முகம்

### வரவேற்பு & இடமளிப்புக் குழு

திரு. என். அழகிரிசாமி
(அமைப்பாளர்)
திரு. கே. பழனிசாமி
திரு. ஏ. கே. எஸ். பழனிச்சாமி
திரு. பி. சி. வாசுதேவன்
திரு. என். கோவிந்தராஜு
திரு. எம் வேலுசாமி,
பி.எஸ்ஸி., பி.டி.
திரு. எஸ். கே. ஜி. சம்பந்தம்
திரு. பொ. வ. ராதா
திரு. வி. பிரகதீஸ்வரன்

### நிகழ்ச்சி நிரல் குழு

திரு. பி. வெங்கட்ராமன்
(அமைப்பாளர்)
திரு. எல். ஏஎல். அழகப்ப செட்டியார்
திரு. வி. ஆறுமுகம், எம். ஏ.
திரு. ஜி. டி. கோபாலகிருஷ்ணன்
பி.எஸ்ஸி., பி. எல்.

### நுழைவுக் குழு

திரு. எம். விஜயராகவன்
(அமைப்பாளர்)
திரு. சி. வி. இராமசாமி, பி.ஏ.
திரு. எஸ். எம். தண்ணீர்மலே
திரு. ஏ. கணபதி
திரு. பி. வெங்கடேஸ்வரன்
திரு. கே. மாணிக்கசுந்தரம்

### மேடைக் குழு

திரு. பி. எஸ். கந்தசாமி
(அமைப்பாளர்)
திரு. எம். சொக்கலிங்கம்
திரு. கே. சண்முகசுந்தரம்

### தமிழிசைப் பள்ளிக் குழு

திரு. பி. எஸ். கந்தசாமி
(அமைப்பாளர்)
திரு. ரா. சேஷாத்திரி, பி. எஸ்ஸி.
செல்வி. வி. திரிபுரசுந்தரி
எம்.ஏ.பி.டி.

எல்லாக் குழுக்களுக்கும் *Ex. Officio :*

சங்கத் தலைவர்

**திரு. பி. கே. கிருஷ்ணராஜ் வாணவராயர்** பி. காம்., பி. எல்.

சங்கச் செயலாளர்

**திரு. ஆர்எம். வி. வெள்ளையப்பன்** பி. டெக்.





வாழ்த்துக்கள் வழங்கிய
சான்றோர்கள், கதை – கட்டுரை – கவிதைகள்
அனுப்பிய ஆன்றோர்கள், விளம்பரங்கள் கொடுத்து உதவிய
அன்பர்கள் ■ ஊதியம் பெருமல் ஓவியங்கள் வரைந்து
கொடுக்கும் திரு. K. ராதா ராம்நாத் ■ சென்னை
பாலாஜி பைன் ஆர்ட்ஸ் திரு. C. S. ராஜு
அழகுற உரிய காலத்தில் மலரை அச்சிட்டுக்
கொடுத்த கோயமுத்தூர் பாண்டியன்
பிரிண்டிங் ஒர்க்ஸ் அச்சகத்தார் ■
பிளாக்குகள் செய்து கொடுத்த G. K. S.
பிராஸஸ் ■ சென்னை ஜெயம் அன் கோ
உரிமையாளர் திரு. N. அண்ணுமலை ■
நாட்டிய விழா நடத்த நிதி உதவி
செய்த சக்தி பைனன்ஸ் லிமிடெட்
நிர்வாகத் தலைவர் திரு. எஸ். என். பை
அண்டு 'டயனோரா' T.V. உரிமையாளர்
திரு. P. ஓபுல் ரெட்டி ■ அனைத்து
ஒத்துழைப்பும் தந்து வரும் உறுப்பினர்
பெருமக்கள் மற்றும் கலைஞர் பெருமக்கள்
ஆகியோர்க்கு எங்களின் இதயம்கனிந்த
நன்றி! — மலர்க் குழுவினர்







உ
முருகா

கிருபானந்தவாரி

வேலூர்

நாள் : 17—11—88

# வாழ்த்து

## நேரிசை வெண்பா

*தகைமை பொள்ளாச்சி தமிழிசைச் சங்கம்*
*புகழுடனே என்றும் பொலிக - குகனருளால்*
*அன்பரெலாம் கூடி அரியதிருத் தொண்டியற்றி*
*இன்பமுடன் வாழ்க இனிது.*

அன்பன்

*(ஒப்பம்) கிருபானந்தவாரி*




தொலைபேசி : 414545
தந்தி : ANNATECH
தொலை எழுதி : 041-21077 ANNU-IN

# அண்ணா பல்கலைக் கழகம்

Dr. வா. செ. குழந்தைசாமி
Ph.D., D.Litt., F.I.E., F.N.A.Sc., F.N.A.E.
துணைவேந்தர்

சென்னை 600 025
தேதி 17-11-1988

அன்புள்ள திரு. வெள்ளையப்பன் அவர்களுக்கு,

வணக்கம்.

பொள்ளாச்சி தமிழிசைச் சங்கத்தின் 18-ஆம் ஆண்டு விழா அடுத்து வரும் திங்களில் நடக்க இருப்பது கேட்டுப் பெருமகிழ்ச்சி அடைந்தேன். சங்கத்தில் 1200 உறுப்பினர்கள் இருப்பது பெருமைப்படத்தக்க ஒன்றாகும். கொங்கு நாட்டில் இது போன்ற நிறுவனங்கள் மிகவும் குறைவு. பொள்ளாச்சி தமிழிசைச் சங்கம் இந்த வகையில் ஒரு முன்னோடி என்று கூறினாலும் மிகையாகாது. தரத்துடனும் தொடர்ந்தும் தமிழிசைக்குத் தொண்டாற்றி வரும் இந்நிறுவனத்தின் தலைவர், செயற்குழு உறுப்பினர்கள் ஆகியோர் தமிழகத்தின் நன்றிக்கும் பாராட்டுதலுக்கும் உரியவர் ஆவர். வரவிருக்கும் 18-ஆம் ஆண்டு விழா சிறப்பாக நடக்க எனது வாழ்த்துக்கள்.

வணக்கம்.

தங்கள் அன்புள்ள,

(ஒப்பம்) வா. செ. குழந்தைசாமி

Telephone : 837871 837349 Telegram : "STATESANG"

TAMILNADU EYAL ISAI NATAKA MANRAM

(State Academy for Music, Dance, Drama, Films and Folk Arts)
'Thendral', GREENWAYS ROAD,
MADRAS 600 028

நாள் : 21—11—1988

அன்புடையீர்,

மொழி, இனம், நாட்டொருமை ஆகிய தூய
உணர்வுகளையும் தொண்டுள்ளங்களையும் கலைமெருகோடு வளர்த்த
வண்ணம் பொதுநல உணர்வுடன் விளங்கும் பொள்ளாச்சி
தமிழிசைச் சங்கம் இன்றுவரை எல்லாக் கலைஞர்களையும் வரவேற்று
வாழ்வளிக்கும் தாய்வீடாகத் திகழ்வது போல், என்றென்றும்
வாழ்வாங்கு வாழ எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

இசையென்றால் புகழ் என்றும் பொருளுண்டு அல்லவா!

பொள்ளாச்சி தமிழ்ப் புகழ் மன்றமாக விளங்கும்
தங்கள் சங்கம் என்றென்றும் திகழ என்னால் இயன்ற பணிகளைத்
தயக்கமின்றி செய்வேன் என்று தனிப்பட்ட முறையிலும்
உறுதி கூறி, தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தின் செயலாளர்
என்ற முறையில் மன்றத்தின் வாழ்த்துக்களையும் தெரிவிக்கிறேன்.

வாழ்க தமிழ்! வாழ்க வையகம்!

அன்பன்

*(ஒப்பம்) வி. எஸ். இராகவன்*

செயலாளர்





Office : 35461 - 35468 Resi : 22826
Telex : 0855 - 212

G K SUNDARAM
**Chairman & Managing Director.**
**The Lakshmi Mills Co. Ltd., Coimbatore 641 037**

*Date : 18th November 1988*

## THE VALUE OF VALUES

*A value is valuable only if the value has a value-says Swamy Dayananda.*

*While dealing with the traditional values Rajaji says.*

*"What go by the name of traditional values are values prevailing all over the world, but differing in degrees from nation to nation. Where secular forces and institutions have come to cover the same values, the traditional character of some of them may have got blurred or forgotten. If the practice of scepticism develops about these traditional values and the movement to discard them should succeed man will go back to the conditions he emerge from by the grace of accidents and he will be a poor but feeble wild beast and probably disappear from the face of the earth. I do not agree with Darwin in the evolution theory. I believe there is design of some inscrutable kind in the origin of man. These values are therefore part of man's divinely designed being. They will not be given up by mankind, although some men may discard them and suffer for it.*

*Secularly enforced laws can never adequately take the place of traditionally inherited values. We are safe as long as the mass of our people are loyal to these values. The civilisation and culture from which we derive whatever happiness we get in our life is one knitted fabric and to what a sorry state the knitting will be reduced when the yarn that runs through and holds all the loops comes out in one of the corners. To that same state will our civilisation and culture be reduced and disappear if our traditional values are discarded by the mass of our people."*

*The public of Pollachi do derive pleasure through this cultural activity.*

*Yours Sincerely*

(Sd.) G. K. Sundaram

கி. ஆ. பெ. விசுவநாதம்
திருச்சிராப்பள்ளி-8
1—12—1988

அன்புள்ள ஐயா,

வணக்கம்

அழைப்பு வரப்பெற்று மகிழ்ந்தேன்.
பொள்ளாச்சி தமிழிசைச் சங்கத்தின் 18-ம்
ஆண்டு விழா இனிது நடைபெற வேண்டுமென
பெரிதும் விரும்பி வாழ்த்துகிறேன்.

விழாவில் பங்குபெறும் அறிஞர் பெருமக்களுக்
கெல்லாம் என் வணக்கம் கூறவும்
வேண்டுகிறேன்.

அன்புள்ள

(ஒப்பம்) கி. ஆ. பெ. விசுவநாதம்





**இராம. வீரப்பன்**
9, திருமலை சாலை, தியாகராயநகர்
சென்னை-600 017
தொலைபேசி : 865619

நாள் : 26—11—1988

பேரன்புடையீர்,

வணக்கம்

தாங்கள் அனுப்பிய கடிதம் கிடைக்கப்பெற்றேன். நன்றி!

''தமிழிசைச் சங்கம்'' ஆண்டுதோறும் மலர் வெளியிடுவது பற்றியும், 1986-ம் ஆண்டு 'சிறந்த சங்கமாக' தேர்ந்தெடுக்கப்பட்டது பற்றியும் மகிழ்ச்சியடைகின்றேன்.

பதினெட்டாம் ஆண்டு விழா சிறப்புற நடைபெற நல்வாழ்த்துக்கள்

அன்புள்ள,

(ஒப்பம்) இராம. வீரப்பன்




உ
குருவே துணை

**தவத்திரு சுந்தர சுவாமிகள்**
ஆதீனகர்த்தர்
கௌமார மடாலயம்

சின்னவேடம்பட்டி அஞ்சல்
கோவை-641 006
தொலைபேசி எண்: 85025

## பொள்ளாச்சி தமிழிசைச் சங்கம் 18-ம் ஆண்டு

## வாழ்த்து - வெண்பா

*தன்னேர்பொள் ளாச்சித் தமிழிசைச் சங்கத்தின்*
*மன்னும் பணிகள் வளர்கவே - பன்னும்*
*பதினெட்டாம் ஆண்டுவிழாப் பாங்குடனே*
*செய்வோர்*
*அதிநலங்கள் எய்திவாழ் க!*

அன்புள்ள

*(ஒப்பம்) சுந்தரசுவாமிகள்*






Office
67 C P Rama Swamy Road
Abiramapuram
MADRAS 600 018

Residence
12 Srinivasa Avenue
MADRAS 600 028
Phone 416653

Camp
HYDERABAD

8 –12—1988

அன்பு நண்பர் வெள்ளையப்பன் அவர்களுக்கு,

வணக்கம்.

தங்களது ஆண்டு விழா அழைப்பிதழ் கிடைக்கப்பெற்றேன்.
நேற்றுதான் இசைமணி சீர்காழி கோவிந்தராஜன் இன்னிசையுடன்
துவக்க விழா நடந்ததுபோல் இருக்கின்றது.
ஓட்டு போடும் வயதுக்கு வளர்ந்துவிட்டீர்கள்.
எங்கோ இருந்துகொண்டு நீர்க்குமிழிபோல
சபைகள் வந்து போகும் இந்த காலத்திலே சங்கம்
தரத்திலும் தராதரம் கண்டு கொள்வதிலும்
இச்சபைக்கும் எச்சபையும் ஈடு இணை காணாது.

வாழ்க ! வளர்க.

இவ்வமயம் சங்கரதாசு சுவாமிகளுக்கு விழா எடுக்கும்
பேரறிஞர்களுக்கும் இயல் இசை நாடக மன்ற செயலர்
திரு. ராகவன் அவர்களுக்கும்
என் வணக்கங்கள்.

என்றும் தங்கள் அன்பன்,

மௌலி




# பொள்ளாச்சி தமிழிசைச் சங்கம்
# பதினெட்டாம் ஆண்டுவிழா வரவேற்புரை

பேரன்புடைய பெரியோர்களே ! தாய்மார்களே !

பொள்ளாச்சி தமிழிசைச் சங்கத்தின் பதினெட்டாம் ஆண்டு விழாவிற்கு வருகை புரிந்து பெருமை சேர்க்கும் உங்கள் அனைவரையும் வருக வருக என்று வரவேற்பதில் பெருமகிழ்வு எய்துகிறேன்.

பதினெட்டு ஆண்டுகள் தமிழிசைக்கும். தமிழ் கலைகளுக்கும் செவ்வனே தொண்டாற்றி பதினெட்டாம் ஆண்டு விழாவை இன்று சீரோடும் சிறப்போடும் கொண்டாடிக்கொண்டிருக் கிறது.

இந்த ஆண்டு விழாவிற்குத் தலைமை தாங்கிச் சிறப்பிக்க வருகை புரிந்திருப்பவர் **தொழிலதிபர் திரு. T. T. வாசு** அவர்களாவார். அவர் சென்னை 'மியூசிக் அகாடமி' யின் தலைவ ராக இருப்பவர்; T. T. K. சார்பு நிறுவனங்களின் இயக்குநராகத் திகழ்பவர். 'இண்டியன் எக்ஸ்பிரஸ்' செய்தித்தாளின் உதவியாசிரியராக இருந்தவர். தமிழ்நாடு அரசின் தொழில் ஆலோசனைக் குழுவின் முக்கிய உறுப்பினர். T. T. K. 'அறக்கட்டளையின் அறங்காவலர்' வெளிநாட்டுத் தொழில் மையங்களில் அங்கத்தினர். அன்னார் இந்த ஆண்டு விழாவிற்கு வருகை புரிந்து தலைமை தாங்க இசைந்தது நமக்குப் பெருமை சேர்க்கிறது. அன்னாரை நான் இதயங்கனிந்து நல்வரவு கூறுகிறேன்.

பதினெட்டாம் ஆண்டு விழா மலரை வெளியிடுபவர் நமது சங்கத்தை தொடங்கி வைத்த சங்கப் புரவலர் **அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம்** அவர்களாவர். தொழில் விற்பன்னர். இராமலிங்க அடிகளாரின் ஆன்ம நேய ஒருமைப்பாட்டில் உளம் பறிகொடுத்து சன்மார்க்க நெறி நிற்கும் சான்றோர். கல்வி நலம் காக்கும் கருணா மூர்த்தி. கலை, அறிவியல், தொழில் கல்லூரிகள்

பலகண்ட அருளாளர். புதுமை நோக்கும் நுண்மாண் நுழைபுலமும் கொண்டவர். சக்தி சார்புநிறுவனங்களின் தலைவர். பாரதியார் மற்றும் பாரதிதாசன் பல்கலைக் கழகங்களின் உயர்ந்த கௌரவமான டாக்டர் பட்டங்களைப் பெற்றவர். நாடு புகழ் நாயகர். அவர்கள் மலர் வெளியிடுவது நாம் பெற்ற பெரும் பேறு ஆகும். மேலும் அவர்கள் கலைமாமணி திரு. V. S. ராகவன் அவர்களைப் பாராட்டிப் பொன்னாடை போர்த்தி பரிசு வழங்க உள்ளார். அவர்களை இருகரம் கூப்பி வருக வருக என்று வரவேற்கிறேன்.

ஆண்டு விழாவின் முதல் மலரைப் பெறுபவர் **அரிமா திரு. S. V. S. சிவநாத்** அவர்கள் இவர் மதுரையில் BSc BE பட்டங்களையும், ஹைதராபாத்தில் நிர்வாகப் படிப்பில் தனிப் பயிற்சியும் பெற்றவர், சிறு வயதிலிருந்தே அரிமாத் துறையில் ஈடுபட்டு அரும்பணிகள் ஆற்றி வருபவர். இவரது அயராத சேவையாலும் நீங்காத ஈடுபாட்டாலும் 1987—88ஆம் அரிமா ஆளுநராக ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் ''அன்பும் சேவையுமே அரிமா'' என்பது இவரது குறிக்கோள். மதுரையம்பதிக்கும், அம்மாவட்டத்திற்கும் நிலையான பல சேவைகள் செய்தவர். மதுரை TVS சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் நிர்வாகி. இத்தகு வித்தகர் முதல் மலரைப் பெறுகிறார். அன்னார்க்கு எனது நெஞ்சார்ந்த நல்வரவு.

கலைஞர் பெருமக்களைப் பாராட்டிக் கௌரவிப்பதைத் தனது தலையாய கடமையாகக் கொண்டது நமது சங்கம். இந்த ஆண்டு பாராட்டுப் பெறுபவர் **கலைமாமணி திரு. V. S. ராகவன்** அவர்கள். இவர் குணச்சித்திர நடிகர் என்று பாராட்டப் பெறுபவர். பத்திரிகையாளராகத் தம் பணியைத் தொடங்கியவர். படிப்படியாக நாடகத்திலும், திரைப்படங்களிலும் நடித்துப் பெரும் புகழ் கொண்டவர். I N A தியேட்டர்ஸ் என்ற நாடகக் குழு அமைத்து கலைச் சேவை புரிந்து வருபவர். தமிழக அரசால் மிக உயர்ந்த கலைமாமணி பட்டம் சூட்டப்பட்டவர். தற்போது தமிழக அரசின் இயல் இசை நாடக மன்றத்தின் செயலாளராகத் திகழ்பவர். அவரது கலைச் சேவையைப் பாராட்டி நம் சங்கம் பொன்னாடை போர்த்திப் பரிசு வழங்குகிறது. அன்னாரை வரவேற்பதில் இச்சங்கம் பெருமை கொள்கிறது.

தமிழக அரசின் இயல் இசை நாடக மன்றம் ஆண்டுதோறும் தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகளின் பிறந்தநாள் விழாவைச் சென்னையில்தான் கொண்டாடி வருகிறது. இவ்வாண்டு முதன் முறையாக நம் பொள்ளாச்சி நகரில் நம் சங்கத்தோடு இணைந்து நாளை நடத்த உள்ளது. அதுசமயம் நலிவுற்ற கலைஞர்களுக்கு இசைக் கருவிகளையும் ஆடைஅணிகலன்கள் வாங்குவதற்கு பண முடிப்பும் வழங்குகிறது. அந்த விழாவை முன்னிட்டு வருகை புரியும் கோவை மாவட்ட ஆட்சித் தலைவர் **திரு. என். கோவிந்தன், இ.ஆ.ப.** அவர்களையும் தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை, அரசுச் செயலாளர் **டாக்டர் ஔவை து. நடராசன்** அவர்களையும், சிறப்புரையாற்ற உள்ள மதுரை காமராசர் பல்கலைக் கழகப் பேராசிரியை **டாக்டர் விசயலக்குமி நவநீதகிருட்டிணன்** அவர்களையும், **கலைமாமணி திரு. டி. என். சிவதாணு** அவர்களையும், மற்றும் வருகை புரியும் பெரியோர்களையும், கலைஞர்களையும் இச்சங்கம் வரவேற்பதில் இறும்பூது எய்துகிறது.

ஆண்டு விழாவை முன்னிட்டு இன்று நாட்டிய நாடகத்தில் பங்குபெறும் அபிநயதிலகம் **திரைப்பட நடிகை ரேவதி** மற்றும் நாட்டியமணிகளையும், பொன் விழா கண்ட ஸ்ரீ சரஸ்வதி கான நிலைய நிறுவனர் திருமதி லலிதா, ஆசிரியை திருமதி ரெங்கநாயகி ஜெயராமன் அவர்களையும், தொடர்ந்து எட்டு நாட்கள் கம்பராமாயண இசைப் பேருரை வழங்க வர உள்ள **டாக்டர் சரஸ்வதி ராமநாதன்** அவர்களையும், சங்கரதாஸ் நாடக விழாவில் நாடகம் நடத்த

இருக்கும் **கலைமாமணி S. M. ராமனாதன்** குழுவினரின் வைரம் நாடக சபாவின் 'வள்ளல் சீதக்காதி' வரலாற்று நாடகத்தில் நடிக்க இருக்கும் கலைஞர் பெருமக்களையும், தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தின் ஆதரவில் பரதமாடி பரவசமூட்ட இருக்கும் **திருமதி ஸ்ரீகலா பரத்** (கிரிக்கெட் வீரர் ஸ்ரீகாந்தின் சகோதரி) அவர்களையும் அவரது ஆசிரியையும் அண்மையில் நம்மால் பாராட்டப்பெற்ற **கலைமாமணி திருமதி K. J. சரசா** அவர்களையும் மற்றும் ஆண்டு விழாவில் பங்குபெறும் கலைஞர் பெருமக்கள், அறிஞர் அனைவரையும் வரவேற்பதில் பெரு மகிழ்ச்சி அடைகிறேன்.

நமது சங்கம் 1986ஆம் ஆண்டு காந்தியடிகளின் திருஉருவச் சிலையை பொதுமக்கட்கு அர்ப்பணித்துக் குட முழுக்கு விழாப் போல பெருவிழாக் கொண்டாடியது. ஊரின் மையத்தில் அமைத்து பிரதானமிக்கதோர் இடமாக அந்தப்பகுதி திகழ்கிறது.

நமது சங்கம் ஆற்றும் கலைப் பணிகளைப் பாராட்டுகின்ற முகத்தான் தமிழக அரசின், தமிழ்நாடு இயல், இசை, நாடக மன்றம், 1986ல் சிறந்த சபாவிற்கான கேடய விருது வழங்கிச் சிறப்பு சேர்த்துள்ளது. நமது சங்கம் பதினெட்டு ஆண்டு காலமாகச் சாதனைகள் பல சாதித்து வருவதற்கு அங்கீகாரமாக அமைந்த இச்செயல் நம் சங்க வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய சிறப்பு நிகழ்ச்சி ஆகும்.

நமது சங்கம் இவ்வாண்டும் ''நாட்டிய விழா'' என்று ஒரு வார காலம் தொடர்ந்து தமிழகத்துச் சிறப்புமிகு நாட்டியக் கலைஞர்களைக் கொண்டு மூன்றும் பெருவிழா நடத்தியுள்ளது. இந்த நாட்டிய விழா நடத்த நிதி உதவி செய்த சக்தி பைனான்ஸ் லிமிடெட் நிர்வாகத் தலைவர் திரு. எஸ். என். பை மற்றும் 'டயனோரா' TV உரிமையாளர் திரு. P. ஒபுல் ரெட்டி அவர்களுக்கும் எங்கள் நன்றியைக் காணிக்கை ஆக்குகிறேன். வருகிற ஆண்டுகளிலும் தொடர் நிகழ்ச்சியாக இரு நாட்டிய விழா நடத்த உள்ளோம் என்று பெருமையுடன் கூறிக்கொள்கிறேன்.

தமிழ்நாடு இயல், இசை, நாடக மன்றம் இவ்வாண்டு பாட்டு, புல்லாங்குழல் மற்றும் பரத நாட்டியம் முதலிய 8 நிகழ்ச்சிகளை வழங்கியுள்ளது.

இளங்கலைஞர்களை உருவாக்கும் நோக்கில் தமிழிசைப் பள்ளி ஒன்று நடத்தி வருகிறோம். தகுதி மிக்க ஆசிரியர்களைக் கொண்டு வீணை, வயலின், வாய்ப்பாட்டு, ஹார்மோனியம், பரத நாட்டியம் ஆகியவை கற்பிக்கப்படுகின்றன. தற்போது 90 மாணவ மாணவியர் கலை பயில்கின்றனர். இசைப் போட்டியில் வெற்றி பெற்ற மாணவ மாணவிகட்கும் ஆண்டு விழாவில் பாராட்டுப்பெறும் கலைஞர்கட்கும் பரிசு வழங்குவதை கோவை கஸ்தூரி ஜுவெல்லரி உரிமையாளர் திரு வி. சண்முகம் ஏற்றுள்ளார். அவர்கட்கு நன்றியறிதல்களை தெரிவித்துக் கொள்கிறேன்.

இச்சங்கத்தின் வழித்தோன்றலாக **பொள்ளாச்சி இலக்கியக் கழகமும், பொள்ளாச்சி திரைப்படக் கழகமும்** தோன்றி மாதந்தோறும் பேரறிஞர்களின் இலக்கியச் சொற்பொழிவுகளையும் பரிசு பெற்ற தரமான கலை அம்சம் பொருந்திய திரைப்படங்களையும் திரையிட்டு வருகிறது.

இவ்வாண்டு நமது சங்கம் 27 கலைநிகழ்ச்சிகளை நடத்தியுள்ளது. அவை 10 நாடகங்கள் 6 இன்னிசைக் கச்சேரிகள் 10 நாட்டியங்கள் 1 கலந்துரையாடல் ஆகும்.

காகித விலை, அச்சுக் கூலி முதலியன நினைக்க முடியாத அளவிற்கு மிக உயர்ந்திருக்கும் இந்த நாளிலும், ஆண்டுதோறும் தவறாமல் 'ஆண்டுவிழா மலரை' வெளியிட்டு வரும் பெரும் சாதனையைப் பாராட்டாதவர்கள் எவருமில்லை. அதற்கு விளம்பரங்கள் தந்து பேருதவி புரிபவர்களுக்கும், வாழ்த்து, கவிதை, கட்டுரை முதலியன வழங்கும் அறிஞர்களுக்கும் நன்றி கலந்த வணக்கத்தைக் காணிக்கை ஆக்குகிறேன்.

ஆண்டுதோறும் பஞ்சாங்கக் குறிப்புகளுடன் கூடிய கவின்மிக்க நாட்காட்டியை உறுப்பினர்களுக்கும். விளம்பரதாரர்களுக்கும் வழங்கி வருவதும் யாவரும் அறிந்ததே.

நமது சங்கத்தில் இப்பொழுது 500 இரட்டை உறுப்பினர்கள் (அதாவது 1000 உறுப்பினர்கள்) இருந்து வருகிறார்கள்.

இவ்வாறு அரும்பெரும் சாதனைகள் பல புரிந்து சங்கத்தை மென்மேலும் வளர்த்து சிறப்புற்று விளங்க சகல ஒத்துழைப்பும் நல்கும் செயற்குழுவினர்க்கும், உறுப்பினர் பெருமக்களுக்கும். கலைஞர்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றி உரியதாகும்.

உங்கள் அனைவருக்கும் மீண்டும் நல்வரவு கூறித் தொடர்ந்து ஒத்துழைப்பும், ஆசியும் நல்க வேண்டுகிறேன்.

வணக்கம்.

பொள்ளாச்சி
8—12—1988

பி. கே. கிருஷ்ணராஜ் வாணவராயர்
தலைவர்





பதினெட்டாம் ஆண்டு விழாத் தலைவர்

**திரு. T. T. வாசு அவர்கள்**

(தலைவர்: மியூசிக் அகாடமி, சென்னை & இயக்குநர் T. T. K சார்பு நிறுவனங்கள்)



பதினெட்டாம் ஆண்டு விழா மலரை வெளியிட்டு, கலைமாமணி திரு. V. S. ராகவன் அவர்களைப் பாராட்டிப் பொன்னுடை போர்த்திப் பரிசு வழங்குபவர்

**அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள்**

சங்கப் புரவலர்

(தலைவர் : சக்தி சார்பு நிறுவனங்கள்)



அபிநய திலகம்

**திரைப்பட நடிகை திருமதி ரேவதி**

(ஆஷா S. மேனன்)

**'லலித ப்ரபாவம்'** நாட்டிய நாடகத்தில்
முக்கிய பங்கு பெறுபவர்



சனிப்பெயர்ச்சி நாளில் பரதமாடி தனிப் பெயர் பெற்ற

**குமாரி வித்யா ராஜன்**

**(11—2—88)**

**(தமிழ்நாடு இயல், இசை நாடக மன்ற நிதி உதவி நிகழ்ச்சி)**



ஸ்ரீ சரஸ்வதி கான நிலையம் ஆசிரியை

**திருமதி ரெங்கநாயகி ஜெயராமன்**



"லலித ப்ரபாவம்"
நாட்டிய நாடகத்தில் ஒரு காட்சி



18ஆம் ஆண்டுவிழாவில் கம்பராமாயணம் இசைப்பேருரை வழங்குபவர்

**டாக்டர் திருமதி சரஸ்வதி இராமனுதன் அவர்கள்**

10—12—1988 முதல் 13—12—1988 வரை

15—12—1988 முதல் 18—12—1988 வரை

8 நாட்கள்

## தமிழ்நாடு இயல் இசை நாடக மன்ற நிதி உதவியுடன்



திருமதி ஸ்ரீகலா பரத் — பரத நாட்டியம்
ஆசிரியை: திருமதி K. J. சரசா
14—12—1988



'வள்ளல் சீதக்காதி' — நாடகம்
9—12—1988



சோனல் மான்சிங் (ஒடிசி)



குமாரி சவிதா சுப்ரமணியம்
— பரத நாட்டியம்
ஆசிரியர்: தனஞ்சயன் தம்பதிகள்




# பொள்ளாச்சி தமிழிசைச் சங்கம் பதினெட்டாம் ஆண்டு நடத்திய நிகழ்ச்சிகள்

## 1—10—1987 முதல் 30—9—1988 முடிய தமிழ் இசைச் சங்க நிகழ்ச்சி விபரம்

| நிகழ்ச்சி எண். | தேதி | நிகழ்ச்சி |
|---|---|---|
| 478 | 09–10–87 | இரண்டாம் நாட்டிய விழா:<br>தலைமை: வி. சந்திரகிஷோர், ஐ.பி.எஸ். (DIG)<br>பிரபல நாட்டியமணி ஆர். ராதா குழுவினரின்<br>''நௌகா சரித்திரம்'' (நாட்டிய நாடகம்) & பரத நாட்டியம் |
| 479 | 10—10—87 | அபிநய நாட்டியாலயா மாணவி<br>''குமாரி இந்துமதி தோத்தாத்ரி'' — பரத நாட்டியம். |
| 480 | 11—10–87 | மைசூர் திருமதி வசுந்தரா துரைசாமி — பரத நாட்டியம். |
| 481 | 12–10—87 | சென்னை வாதினி நாட்டியாலயா 7 மாணவிகள் பங்கு பெறும் பரத நாட்டியம் & குற்றாலக் குறவஞ்சி. (நாட்டிய நாடகம்) |
| 482 | 13—10—87 | சென்னை கீதாஞ்சலி வழங்கும் டைப்பிஸ்ட் கோபு, ஐ.எஸ். ஆர்., ஷீலா நடிக்கும் ''யார் வீட்டு ரோஜா'' நாடகம் (By ரமணி) |
| 483 | 17—11—87 | சென்னை பங்கஜ் கிரியேசன்ஸ் வழங்கும் ஜூனியர் பாலையா, ஆர். ராம்தாஸ், லட்சுமி, காவேரி நடித்த ''கனவுப் பூக்கள்'' (By சௌந்தர்யன்). |
| 484 | 18—12–87 | ''சோனல் மான்சிங்'' ஒடிசி நடனம். |
| 485 | 26—01—88 | குமாரி சவிதா சுப்ரமணியம் (பரத நாட்டியம்)<br>ஆசிரியர் : தனஞ்சயன் |
| 486 | 27—01—88 | சென்னை நாடகப் பண்ணை வழங்கும் கலைமாமணி<br>இரா. பழனிச்சாமியின் சரித்திர நாடகம் ''காவிய நாயகி''. |

| நிகழ்ச்சி எண். | தேதி | நிகழ்ச்சி |
|---|---|---|
| | | **தமிழ்நாடு இயல் இசை நாடக மன்ற நிதி உதவி நிகழ்ச்சிகள்** |
| 487 | 08—02—88<br>மாலை 5-00 மணி | சென்னை பி. சிவக்குமார்—வீணை; நெரூர் வி. சுரேஸ்—மிருதங்கம் |
| 488 | 08—02—88<br>இரவு 7-00 மணி | குமாரிகள் சுமித்ரா & சுனந்தா — பரத நாட்டியம்<br>பதம்: அனந்தலட்சுமி சடகோபன் &<br>திருமதி சுஜாதா விஜயராகவன்<br>ஆசிரியர்: கலைமாமணி எஸ். கே. காமேஸ்வரன் |
| 489 | 09—02—88<br>மாலை 5-00 மணி | செல்வி லதாங்கி ராமனுதன் — வாய்ப்பாட்டு,<br>குமாரி எம். கே. பத்மினி—வயலின், ஜே. நந்தகுமார்—மிருதங்கம் |
| 490 | இரவு 7-00 மணி | செல்வி ஜோல்சனு. ஜி. மேனுேன் — பரத நாட்டியம்<br>ஆசிரியை: திருமதி என். எஸ். ஜெயலட்சுமி |
| 491 | 10—02—88 | குமாரி பி. ஷகீலா - பரத நாட்டியம்.<br>ஆசிரியை: திருமதி சந்திரா தண்டாயுதபாணி. |
| 492 | 11—02—88 | குமாரி வித்யாராஜன் — பரத நாட்டியம்.<br>ஆசிரியை: கலைமாமணி கே. ஜே. சரசா |
| | | ★★★ |
| 493 | 28—02—88 | திரைப்பட இயக்குனர் & நடிகர் திரு. விசு, டி. பி. கஜேந்திரன்<br>கலந்துரையாடல் நிகழ்ச்சி. |
| 494 | 17—03—88 | சென்னை நாடக மந்திர் வழங்கும் ''தில்லைராஜன்'' சத்யா<br>அடேடே மனேகர், சத்யா நடித்த ''வச்ச குறி தப்பாது'' நாடகம் |
| | | ★★★ |
| | | **தமிழ்நாடு இயல் இசை நாடக மன்ற நிதி உதவி நிகழ்ச்சிகள்** |
| 495 | 19—03—88<br>மாலை 5-00 மணி | குமாரி எஸ். சௌமியா—பாட்டு; வி. எல். குமார்—வயலின்,<br>திரு. கே. பாலாஜி—மிருதங்கம் & எஸ். கார்த்திக்—கடம். |
| 496 | இரவு 7-30 மணி | ஸ்ரீராம் கங்காதரன்—புல்லாங்குழல் &<br>எஸ். கிருஷ்ணராஜ்—மிருதங்கம் |
| | | **பதினேழாம் ஆண்டு விழா** |
| 497 | 14—04—88<br>மாலை 6-30 மணி | திவ்யகான பிரவீணு<br>திருமதி மணி கிருஷ்ணசாமி குழுவினர்—இன்னிசை. |

| நிகழ்ச்சி எண். | தேதி | நிகழ்ச்சி |
|---|---|---|
| 498 | 15—04—88<br>மாலை 5-30 மணி | (1) டாக்டர் சீர்காழி ஜி. சிவசிதம்பரம், எம்.பி.பி.எஸ்., குழுவினர் இன்னிசை. தொடர்ந்து 17வது ஆண்டு விழா தலைமை ஏற்று டாக்டர் சீர்காழி கோவிந்தராஜன் படம் திறப்பு விழா - திரு. ரொட்டேரியன் ஜி. வரதராஜ், எம். பி.<br>(2) மலர் வெளியிட்டு & திருமதி மணி கிருஷ்ணசாமி அவர்களை பாராட்டி பொன்னுடை போர்த்தியவர் : திரு. பி. லெட்சுமணன் (நிர்வாக இயக்குநர், ஸ்ரீ கற்பகாம்பாள் மில்ஸ், ராஜபாளையம் & ஆசிரியர் - ''இலக்கிய சிந்தனை'')<br>(3) முதல் மலரைப் பெற்று வாழ்த்துரை : திரு. லைன் எம்ஜேஎப். ஏ. எஸ். சுப்பையன் (சோமனூர் ஸ்ரீ கருணாம்பிகை மில்ஸ், நிர்வாக இயக்குநர்) |
| 499 | 21—04—88 | சென்னை, ஓம் கணேஷ் கிரியேசன்ஸ் வழங்கிய டெல்லி கணேஷ் ஸ்ரீ லேகா நடித்த ''மாங்கல்யம் மனசுபோல'' (By ரமணி) தலைமையுரை : திரு. பி. நமச்சிவாயம், எம்.ஏ. (தமிழ்த்துறை தலைவர், திருப்பத்தூர்) |
| 500 | 23—05—88 | சென்னை அனுஷா கிரியேசன்ஸ் வழங்கிய திரைப்படப் புகழ் செந்தாமரை, கஜேந்திரகுமார், கண்ணன், சுமதி, லட்சுமி நடித்த ''புகையே இல்லாத நெருப்பு'' நாடகம். (By எஸ். கஜேந்திரகுமார்) |
| 501 | 21—06—88 | சென்னை, அம்மன் ஆர்ட்ஸ் வழங்கிய ஜெமினி மகாலிங்கம், தயிர்வடை தேசிகன், டி. வி. வி. ராமானுஜம், லட்சுமி, வத்சலா நடித்த ''சார் போஸ்ட்'' (By கோவை அனுராதா) |
| 502 | 18—07—88 | சென்னை கலாபாரதி கிரியேசன்ஸ் வழங்கிய ஜான்சி ராணி, வடிவு, முரளி, சுந்தர்ராமன் நடித்த ''பிறந்த கதை சொல்லவா'' நாடகம் (By சௌந்தர்யன்) டைரக்ஷன் : மாலி. |
| 503 | 16—08—88 | சென்னை கோபி தியேட்டர்ஸ் வழங்கிய திரைப்பட புகழ் கலைமாமணி வி. கோபாலகிருஷ்ணன், ஏ. கே. வீராசாமி, லதா & வந்தனா நடித்த ''வெள்ளைக் குயில்'' நாடகம் (By கௌசிக்) |
| 504 | 19—09—88 | சென்னை சௌம்யா வழங்கிய மணிபாரதி, ராம்கி, சுந்தர் ஒ. எஸ் ஆர். டிவி. ஆர். கோவை காமாட்சி & காவேரி நடித்த ''குடும்பம் ஒரு சிலம்பம்'' நாடகம் (By வெங்கட்) |

# பதினெட்டாம் ஆண்டு விழாவில் கலந்து கொள்ளும் அறிஞர், கலைஞர் வாழ்க்கைக் குறிப்பு



8—12—1988

பதினெட்டாம் ஆண்டு விழாத் தலைவர்

## தொழிலதிபர் திரு. T. T. வாசு அவர்கள்

1929ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 24ஆம் தேதி திரு. T. T. வாசு அவர்கள் பிறந்தார். சென்னை P. S. உயர்நிலைப் பள்ளியிலும், சென்னை லயோலா கல்லூரியிலும் கற்றார். இன்று ''இண்டியன் எக்ஸ்பிரஸ்'' என்று அழைக்கப்படும் அன்றைய ''டெல்லி எக்ஸ்பிரஸ்'' என்ற தினத்தாளின் உதவி ஆசிரியராக 1952-54ல் பணியாற்றினார்.

இவர் T. T. K. குருப் கம்பெனிகளின் 'டைரக்டர்'. அடையாறு கேட் ஹோட்டல் லிமிடெட் மற்றும் T. T. டிராவல்ஸ் (P) லிமிடெட் ஆகியவற்றின் தலைவர். லண்டன் ரப்பர் கம்பெனி (இந்தியா) லிமிடெட்டின் இணை மேலாளர் இயக்குநர் (Jt. M. D.)

பம்பாய் இந்தோ — அமெரிக்கன் சேம்பர் ஆப் காமர்ஸ் (All India President 1976) உறுப்பினர். தென் மண்டல இந்தோ — அமெரிக்கன் சேம்பர்ஆப் காமர்ஸ் உறுப்பினர். விளம்பரதாரர்களின்இந்தியச் சங்க உறுப்பினர். தமிழ்நாடு அரசின் இண்டஸ்டிரியல் ஆலோசனைக் குழுவின் உறுப்பினர். பாண்டிச்சேரி பல்கலைக் கழகப் பள்ளி நிர்வாக ஆளுநர் வாரியத்தில் ஓர் அங்கத்தினர். சென்னை பொது சுகாதாரம் மற்றும் பொதுநலக் குழு அறங்காவலர்.

T.T K. அறக்கட்டளை மற்றும் பாலமந்திர் காமராஜ் அறக்கட்டளை ஆகியவற்றின் அறப் பாதுகாவலர்.

சென்னை சங்கீத அகாதமியின் தலைவர், கலாச்சாரத் தொடர்புக்கான இந்தியக் கவுன்சிலின் பொதுச் சபையின் உறுப்பினர். தென் பிராந்திய கலாச்சார மையத்தின் அங்கத்தினர் நியூயார்க்கின் அனைத்துலக நடன அலையன்ஸ் லிமிடெட்டின் ஆலோசனைக் குழு உறுப்பினர்.



பதினெட்டாம் ஆண்டு விழா மலர் வெளியிடுபவர்

## அருட்செல்வர் திரு. நா. மகாலிங்கம் அவர்கள்

பொள்ளாச்சியின் தவப்புதல்வர் அருட்செல்வர் நா. மகாலிங்கம் அவர்கள் பல்கலைச் செல்வர். தொழில் விற்பன்னராகத் துவங்கும் தூயார். இராமலிங்க அடிகளாரின் ஆன்மநேய ஒருமைப்பாட்டில் உளம் பறிகொடுத்து சன்மார்க்கச் செந்நெறி நிற்கும் சான்றோர்.

கல்வி நலம் காக்கும் கருணைமனம் கொண்டதனால் கங்கையாய்க் காவிரியாய்ப் பொங்கிப்பெருகும் கலை, அறிவியல், தொழிற் கல்லூரிகள் பல கண்ட அருளாளர்.

புதுமை நோக்கு அவர் உள்ளத்தில் பூத்துக் குலுங்குவதால் தமிழர் வரலாற்றை ஆய்வு நோக்கில் நுணுகிக் கண்டு கடலாழத்தில்

மறைந்த தமிழர் நாகரிகத்தைக் கரை சேர்க்கும் அதிசய நுட்பம் வல்ல ஆய்வாளர்.

துறைதோறும் விரிந்த சிந்தனைப் பூக்களைத் தொகுத்து எண்ணங்கள் மலர்ந்த இனிய நூல்கள் பல தந்த நூலாசிரியர்.

காந்தியமும் வடலூர்க் கருணைத் தத்துவமும் குழைத்து, பொருளியலும் அருளியலும் தழைத்து, தொழில் திறனும் கல்வி நலமும் இணைத்து விசால உள்ளத்தால் உலகையே வளைக்கும் அறிவின் ஊற்று அருட் செல்வர் அவர்கள்.

அண்மையில் அணிதிகழ் மணிவிழாக் கண்ட அருட்செல்வர் அவர்கள் பாரதியார் பல்கலைக் கழகத்தின் உயர்ந்த கௌரவமான டாக்டர் பட்டம் பெற்றுள்ளார்கள்.

நாடு புகழும் நாயகரான அருட்செல்வர் தமிழகத்தின் தனிப் பெரும் செல்வம்.



பதினெட்டாம் ஆண்டு விழாவின் முதல் மலரைப் பெறுபவர்

## அரிமா S. V. S. சிவநாத், B. Sc., B. E. அவர்கள்

48 வயதுடைய அரிமா S. V. S. சிவநாத் அவர்கள் மதுரையில் படித்து B. Sc., மற்றும் B. E. பட்டங்கள் பெற்றவர். ஹைதரா பாத்தில் நிர்வாகப்படிப்பில் தனிப்பயிற்சி கொண்டவர். மதுரை சுந்தரம் இண்டஸ் டிரீஸ் லிமிடெட்டின் மூத்த செயல் அலுவலராக இருப்பவர். மதுரை ''சென்ட்ரல் சினிமா'' வின் பங்குதாரர்.

1966ஆம் வருடத்திலேயே அரிமாத்துறை யில் சேர்ந்து சங்கச் சேவை ஆற்றி வருபவர். மதுரை மாநகர்க்கும், மதுரை மாவட்டத் திற்கும் அரும்பணிகள் பல புரிந்தவர். இவருடைய அயராத சேவையாலும், நீங்காத ஈடுபாட்டாலும் இவர் 1987-88 ஆண்டின் கவர்னராக ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார்.

இவருடைய ஆட்சிக் காலத்தில், மாவட் டத்தில் மிகச்சிறந்த பாரம்பரியத்தைத் தொடர்ந்து பொலிவு பெறச்செய்து வருகிறார். இயன்ற வகைகளிலெல்லாம் சங்கத்தின் நோக் கங்களைச் செயல்படுத்தி வருகிறார்.

''அன்பும் சேவையுமே அரிமா'' என்பது அவரது குறிக்கோள்.



பாராட்டுப் பெறுபவர்

### குணச்சித்திர நடிகர்

## கலைமாமணி திரு. V. S. ராகவன் அவர்கள்

திரு. V. S. ராகவன் 8—2—1925ல் பிறந்தார். தாம்பரம் கிறிஸ்டியன் கல்லூரியில் 'இன்டர்மீடியட்' வரை படித்தார். இவர் தம் வாழ்வைப் பத்திரிகையாளராகத் தொடங்கி னார். ஆனந்த விகடன் முதலிய பல பத்திரிகை களில் சிறு கதைகள், கட்டுரைகள் எழுதி னார். பிரபல நகைச்சுவை எழுத்தாளர் அமரர் துமிலனின் ''மாலதி'' என்ற மாதமிருமுறை இதழின் உதவி ஆசிரியராகப் பணியாற்றினார்.

சென்னை ''இந்திய இளைஞர் சங்க'' உறுப்பினராகி, சங்கம் நடத்திய தமிழ் நாடகங்

களில் நடிக்கலானார். அவர்களுடைய ஒரு நாடகம், திரைப்படமாக்கப்பட்ட போது, ஒரு பாத்திரம் ஏற்று நடித்தார். அந்த 1954 அவரை நடிகராக்கிவிட்டது. இன்று வரை 500க்கு மேலான படங்களில் நடித்து, மக்கள் உள்ளங்களில் குணச்சித்திர நடிகராகத் திகழ்கிறார். 1972ல் அவர் பல படங்களில் நடித்ததற்காக ''திரைப்பட ரசிகர் சங்கம்'' சேவாப் பதக்கம் வழங்கியது. மைசூர் காடுகளில் எடுக்கப்பட்ட MGMன் ''டார்ஜான் இந்தியா செல்கிறான்'' என்ற ஆங்கிலப் படத்தில் ஒரு சிறு பாத்திரத்தில் நடித்திருக்கிறார்.

1954ல் I.N A. தியேட்டர்ஸ் என்ற பெயரில் ஒரு நாடகக் குழு அமைத்தார். இன்று வரை பல நாடகங்களை வழங்கியும், இயக்கியும், அவற்றில் முக்கிய பாத்திரங்களில் நடித்தும் கலைப்பணி ஆற்றி வருகிறார். ஆங்கிலக் கலைஞர் எம்லின் வில்லியம்ஸ் எழுதிய ''ஒருவர் காத்திருக்கிறார்'' என்ற நாவலைத் தழுவி ''சதுரங்கம்'' என்ற நாடகமாக்கி, சென்னை நகரத்தில் ஓரங்க நாடகமாய்ப் புகுத்திய முன்னோடி இவர். 1980ல் I. N. A. தியேட்டர்ஸ் தனது வெள்ளி விழாவை விமரிசையாகக்கொண்டாடியது. தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் M. G. ராமச்சந்திரன் விழாவிற்குத் தலைமை வகித்தார். நாடகப் பள்ளியாம் சென்னை நாடகச் சங்கத்தின் இயக்குநராக ஓராண்டு விளங்கினார். சரத் சந்திரரின் ''பரிநீதா' என்ற நாவலை ''மாலையிட்டவள்'' என்ற நாடகமாக்கி, இயக்கி 1977ல் தொலைக் காட்சியில் படைத்திருக்கிறார். பிறகு 1979ல் தமிழ் நாடு அரசு நிதி உதவி பெற்று அதனை மேடை நாடகமாக்கி I. N. A. தியேட்டர்ஸ் மூலம் வழங்கினார்.

திரை மற்றும் தொலைக் காட்சி நிலையங்கள், நடிப்புக் கலைத் தேர்வில், 1986ல் தேர்வாளராக இவரை நியமித்தது; மேலும், 1987-88ல் தகுதியானவரைத் தேர்ந்தெடுக்கும் தேர்வுக் குழுவில் சேர்த்தது. மேலும், 1987-88ல் பாடத்திட்டம் மாறுதல் குழுவில் ஓர் உறுப்பினராக்கிப் பெருமை செய்தது. 1982-83, 1983-84 மற்றும் 1984-85 ஆண்டுகளில் தமிழக அரசு, சிறந்த திரைப்படங்களைத் தேர்வு செய்து விருது வழங்க அமைத்த குழுவில் ஒருவராக்கிச் சிறப்பித்தது. 1985ல் தமிழக அரசு சிறந்த நூல்களைத் தேர்ச்சி செய்யும் குழுவில் பணியாற்ற வைத்தது.

தமிழக அரசு 1980-81ல் மிக உயர்ந்த விருதான 'கலைமாமணி' பட்டத்தை இவருக்கு வழங்கியது. நுண்கலைகளின் அகாதமியான தமிழக அரசின் ''இயல் இசை நாடக மன்றத்தின்'' செயலாளராகத் தற்சமயம் திகழ்கிறார். இவர் ஹிந்தியில் ராஷ்டிர பாஷாவில் தேறியவர். தொலைக்காட்சியின் ''ஹம்லோக்'' நிகழ்ச்சிகள் பகுதி 59 முதலான பல பகுதிகளுக்குத் தமிழ் முன்னுரை வழங்கியிருக்கிறார். தட்டெழுத்துத் தேர்விலும் வெற்றி கண்ட இவர் எவ்விதத் தீய பழக்கத்திற்கும் ஆளாகாதவர். இவர் மனைவியையும் இரண்டு புதல்வர்களையும் உடையவர்.



சென்னை ஸ்ரீ சரஸ்வதி கான நிலையம் வழங்கும்
திரைத் தாரகை **ரேவதி** மற்றும் நிலையக் கலைஞர்கள் நடிக்கும்

## ''லலித ப்ரபாவம்'' – நாட்டிய நாடகம்

''லலிதா சகஸ்ரநாமம்'' என்பது சுலோக வடிவில் உள்ளது. இது ''லலித ப்ரபாவம்'' என்ற பெரிய காவியமாகும். இது அயக்ரீவ முனிவரால் அகத்திய முனிவருக்கு உபதேசிக்கப்பட்டதாகும். இக்காவியத்தை ஸ்ரீ சரஸ்வதி கான நிலையத் தலைவி **திருமதி லலிதா** அவர்கள் தம் சொந்தப் பாடல்களால் கதையாய் வடித்தார். அதனை திருமதி ரங்கநாயகி ஜெயராமன் அவர்கள் நாட்டிய

நாடகமாக அமைத்து, நிலையக் கலைஞர்கள் மூலம் உலகிற்குப் படைக்கிறார்.

## கதைச் சுருக்கம்

கைலாசத்தில் சிவனும், சக்தியும் நடனமாடும் வேளை. தேவர்கள் தட்சனின் யாகத்திற்குச் செல்லும் ஆரவாரம் கேட்கிறது. தாட்சாயிணி தானும் செல்ல அனுமதி கேட்கிறாள். ஈசன் தடுத்தும் தாட்சாயிணி யாகத்திற்கு செல்கிறாள். தன் தந்தை தன்னை வரவேற்காததால், இனியும் தட்சன் மகளாக இருக்க விரும்பாமல், யாகத்தீயில் வீழ்ந்து சோதி மயமாகி, பர்வத ராஜகுமாரியாய் மறு பிறவி கொள்கிறாள்.

செய்தி கேட்ட சிவபெருமான் வெகுண்டு தன் நெற்றி வியர்வையால் வீரபத்திரரை உண்டாக்கி, தட்சன் கொட்டத்தை அடக்கி, தானும் தவத்தை மேற்கொள்கிறார். அவருக்கு பர்வத ராஜகுமாரி பணிவிடை செய்கிறாள்.

அது சமயம் தாரகாசுரனால் கொடுமையுண்ட தேவர்கள், நாரதருடன் பிரம்மாவிடம் முறையிடுகின்றனர். ''ஈசன் தவம் செய்கிறார். பார்வதி பணிவிடை செய்கிறாள். அவர்களுக்கு பிறக்கும் குமாரக் கடவுளால்தான் அசுரனைக் கொல்லமுடியும்'' என்று பிரமன் கூறுகிறார். நாரதர் மன்மதனை ஈசன்மீது மலர் அம்புகளை தொடுக்கச் செய்ய, ஈசன் வெகுண்டு தன் நெற்றிக் கண்ணால் அவனை எரித்துச் சாம்பலாக்கினார். ரதி புலம்புகிறாள். ஈசன் அவளைத் தேற்றுகிறார். சித்திரகர்மா அச்சாம்பலை ஓர் மனித உருவாக்க, ஈசன் அதற்கு உயிரூட்ட, பண்டன் என்று பெயர் கொள்கிறான். சித்திரகர்மா பண்டனை ஈசனைக் குறித்துக் கடுந்தவம் செய்ய அனுப்புகிறார். தவம் செய்து பண்டாசுரன் ஈசனிடம் அறுபதாயிரம் ஆண்டுகள் அரசாளும் பேறும், வீரர்களால் அழிவில்லாத வாழ்வும் வரமாகப் பெறுகிறான்.

மேலும் பிரமனால் பண்டாசுரன் சகல போக பாக்கியங்களைப் பெறுகிறான். தேவர்களைப் பலவாறு துன்புறுத்துகிறான். நாரதர் மாயக் கன்னிகளால் பண்டாசுரனை மயங்க வைக்கிறார். இந்தத் தருணத்தைப் பயன் படுத்தி ஈசன் ஆணையின்படி, தேவர்கள் தேவியை வேண்டிக்கொள்கின்றனர். அதனால் பேரழகியாக ஸ்ரீ லலிதா தேவி தோன்றுகிறாள். உடனே, சிவனும் பேரழகனாக காமேஸ்வரராகத் தோன்றுகிறார். திருமால் இருவருக்கும் மணம் முடிக்கிறார்.

லலிதாம்பிகை தேவர்களுக்கு அபயம் அளிக்கிறார். காமேஸ்வரரிடம், ''ஏன் பண்டனை உண்டாக்கினீர்?'' என்று கேட்கிறாள்.

''நீ லலிதாம்பிகையாக உலகில் பெரும் புகழ் பெறவே இவனை உருவாக்கினேன்'' என்று ஈசன் கூறி, பல அஸ்திரங்களைக் கொடுத்து, ''நீ அங்க தேவதைகளோடு பண்டாசுரனை வதம் செய்க'' என்றருளுகிறார். பண்டாசுரன் அசுரப்படைகளைப் போருக்கு அனுப்பி வைக்கிறான். ஸ்ரீ லலிதா தேவி தன் பத்து விரல்களின் மூலம் மகா விஷ்ணுவைத் தசாவதாரம் எடுக்கச் செய்து, அந்த அசுரர்களையெல்லாம் அழிக்கும்படி செய்கிறாள்.

அங்க தேவதைகளில் ஒருத்தியான பாலா பண்டனின் புதல்வர்களையெல்லாம் அழிக்றாள். விநாயகப் பெருமான் எல்லாத் தடைகளையும் விலக்குகிறார். லலிதாதேவி பண்டாசுரனை சம்ஹாரம் செய்கிறாள்.

தேவி தேவர்களால் துதிக்கப்படுகிறாள். அதனுல் மகிழ்ந்த லலிதாம்பிகை மன்மதனை உயிர் பெறச்செய்கிறாள். ரதியையும் மகிழ்ச்சி கொள்ளச் செய்கிறாள்.

## நடிகையர்

| | |
|---|---|
| தாட்சாயிணி, பார்வதி & லலிதா தேவி | ஆஷா S. மேனன் (ரேவதி) |
| ஈசன் காமேஸ்வரன் | ஜெயந்தி |
| பண்டாசுரன் | சாந்தினி ராஜேஸ்வரி |
| மன்மதன் தேவமகள் | இந்துமதி |

| | |
|---|---|
| ரதி | கல்யாணி |
| அங்க தேவதைகள் | சந்தியா பத்மினி கல்யாணி விஜயா |
| பாலா | ரேணுகா |
| சித்திரகர்மா அமைச்சர் மஹாவிஷ்ணு | மஞ்சமாலா |
| நாரதர் கணபதி | பிரியா ஆத்ரேயி |
| தேவர்கள் தோழியர்கள் | துர்க்கா, சாரதா |
| பாடலாக்கம் | திருமதி K. லலிதா |
| இசையமைப்பு | திரு. C. R. ராமமூர்த்தி |

**பின்னணி இசை:**

| | |
|---|---|
| நாட்டிய நாடக அமைப்பு & நட்டுவாங்கம் | திருமதி ரங்கநாயகி ஜெயராமன் |
| வாய்ப்பாட்டு | திரு. மதுரை சேதுராமன் திருமதி கீதா நவனீதன் |
| மிருதங்கம் | திரு. கிருஷ்ணன் |
| ஹார்மோனியம் | திரு. C. R. ராமமூர்த்தி |
| புல்லாங்குழல் | திரு. லட்சுமணய்யா |
| வயலின் | திரு. தனபால் |
| தபலா | திரு. கார்த்திக் |
| மேடை | திரு. கணேஷ் & ரமேஷ் |
| உடை அலங்காரம் | M. L. டிரஸ் லாண்ட் |
| ஒப்பனை | திரு. கிருஷ்ணன் |
| ஒலி, ஒளி, அரங்க அமைப்பு | கோவை மாணிக்கம் [திருமுருகன் & கோ] |



9—12—1988

**திரு. எஸ். எம். இராமநாதனின் சென்னை வைரம் நாடக சபா**

வழங்கும்

**1987ஆம் ஆண்டில் தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தின் மானிய உதவி பெற்ற நாடகம்**

## "வள்ளல் சீதக்காதி" – வரலாற்று நாடகம்

(எழுதியது : ரவீந்தர்)

ஷேக் அப்துல் காதர் என்ற பெயர் ஷேக்காதியாக மருவி, சீதக்காதி என்று வழக்கத்தில் ஆனது. அவர் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர். அண்ணன் காயல்துறையில் முத்து மரைக்காயரிடம் பணிபுரிந்தார். சீதக்காதியின் திறனையும், தன்மையையும் பார்த்த முத்து மரைக்காயர், தன் மகள் பாத்திமுத்துவை மணமுடித்து கொடுத்தார்.

கோடீஸ்வரரான மாமனார் சொத்துக்களை வேண்டாமென்று உதறி விட்டு பாத்திமுத்துவை ஒரு ஏழைப் பெண்ணாகவே தன் வீட்டிற்கு அழைத்து வந்தார். பணக்காரப் பெண் ஏழ்மைக் கோலத்தில் குலமகளாக வந்ததை அண்ணி விரும்பவில்லை. பாத்திமா தான் தொழுகைக்காக கைகால் கழுவ ஒரு கல்லைப் பயன்படுத்தி வந்தார். அந்தக் கல்லை முத்து மரைக்காயர் மகளிடமே கொடுத்து அனுப்பினார். அது மரகதக்கல் என பிறகு தெரிந்தது. சீதக்காதி காயல்துறையிலிருந்து கீழக்கரை வந்து பல வணிகங்களை துவக்கி கோடீஸ்வரரானார் கொடை வள்ளலானார் படிகாசி புலவர் சீதக்காதியின் நண்பரானார். எதுவுமே கேளாமல் வாழ்ந்தார். சீதக்காதிக்கு எல்லா பாக்கியங்கள் இருந்தும் சந்தான பாக்கியமில்லை. படிகாசியின் இரண்டாவது மகளை தத்தெடுக்க இருந்தார். அந்தக் குழந்தை இறந்து விட தத்து எடுக்கும் ஆசையையும் விட்டார்.

ஒளரங்கசீப்பிடம் கணக்கு எழுதியும் வங்காளத்தை நிர்வகித்தும் மோதிரத்தைப் பரிசு பெற்ருர். சிவாஜி மன்னரைப் பார்த்து சமாதானம் பேசினுர்.

ராமனுதபுர மன்னர் ராமேஸ்வர கோயிலே செப்பனிடச் சொன்னுர். சீதக்காதி செய்தார். அதனல் அவர் ஜாதிப் பிரஷ்டம் செய்யப் படுகிருர்.

ராமேஸ்வரம் கோயில் செப்பனிட்டு முடித்த பிறகு கம்பராமாயணத்தைக் கேட்டு அதே சீருக்கு திருநபியின் வரலாற்றையும் இயற்ற நினைத்து உமறுப் புலவரிடம் ஒப்படைக்கிருர்.

சீருப்புராணம் அரங்கேற்றம் முடிந்ததும் மனைவி இறக்கிருர். பஞ்சம் தாண்டவமாடிய போதும் ஒரு சட்டிப் பொன்னுக்கு ஒரு சட்டி நெல் வாங்கித் தர்மம் செய்தார். படிகாசியின் மூத்த மகளின் திருமணச் செலவுக்கு பணம் வாங்கி வர அவர் மனைவி வற்புறுத்துகிருள். மனம் விரும்பாமல் படிகாசி சீதக்காதியிடம் வருகிருர். சீதக்காதி மரணமடைந்து விட்டார். என் மானத்தைக் காக்க நீ மரணமடைந்தாயா என்று கையைப் பிடித்து அழுகிருர். படிகாசி கையோடு மோதிரம் வருகிறது.

''செத்தும் கொடை கொடுத்தான் சீதக்காதி'' என்கிருர் படிகாசி.



**10—12—88 முதல் 13—12—88 வரை & 15—12—88 முதல் 18—12—88 வரை**

## கம்பராமாயண இசைப் பேருரை
## டாக்டர் சரசுவதி ராமநாதன் M. A., Ph.D. அவர்கள்

டாக்டர் சரஸ்வதி ராமநாதன் தேவகோட்டையில் பிறந்தவர். தமிழ் வித்வான் மற்றும் M. A. பட்டம் பெற்று, ஆராய்ச்சி செய்து Ph.D.வாங்கி டாக்டர் பட்டம் கொண்டவர். ஹிந்தியில் பிரவீண் படித்தவர். இசையில் வல்லமை பெற்றவர். சென்னை தமிழிசைச் சங்கத்தாரால் இசை மணி, இசைச் செல்வம் என்று பட்டம் சூட்டப்பட்டவர்.

கடந்த இருபதாண்டுக் காலமாக பள்ளத்தூர் சீதாலட்சுமி ஆச்சி கல்லூரியில் பேராசிரியையாகப் பணிபுரிந்து வருபவர். இருபத்து மூன்று ஆண்டுகளாக மேடை அனுபவம் பெற்றவர். பல பல்கலைக் கழகங்களில் தேர்வாளராகச் சிறப்புற பணியாற்றி வருபவர். இவர் ஒரு சிறந்த ஆராய்ச்சி வழிகாட்டி. பல முறை வெளிநாடுகளில் இசைப் பேருரைகள் ஆற்றி இசைகொண்டவர்

பட்டி மண்டபம், வழக்காடு மன்றம், இசையுரை, கவியரங்கு, தொடர் நிகழ்ச்சி எனப் பலதுறைகளிலும் செந்நாப் புலமையால் கேட்டாரைப் பிணித்து மெய்ம்மறக்கச் செய்பவர். இவரது இசை ஞானம் கலையை மணக்கச் செய்கிறது. ஐயம் திரிபு அற்ற தெளிவான விளக்கம் இவரது தனிச் சிறப்பு.

சொல்லின் செல்வி, காவியக் கலைமாமணி முத்தமிழ்ச் செல்வி, செந்தமிழ்த் திலகம், இன்னிசைச் செல்வி, அமுதத் தமிழ் அருவி போன்ற பல பட்டங்களைக் குவித்தவர்.

கம்பனடிப்பொடி சா. கணேசனார், தமிழ்க் கடல் ராய. சொக்கலிங்கனார் ஆகிய இவர்களின் மாணவி என்பதைச் சிறப்புத் தகுதியாகக் கருதுபவர்.

பேச்சாளர், இசையாளர் என்பவற்றோடு இவர் தன்னிகரற்ற எழுத்தாளருமாவார். வானதி பதிப்பகமாக வெளிவந்த ''கம்பன் கலைக்கோவிலுக்கு ஒரு கைவிளக்கு''. ''கம்பன் காவியம் — அன்றும் இன்றும் என்றும்'' என்ற

நூல்கள் கற்போர் இதயம் கவர்வன. ''கந்தர் *அனுபூதி — விளக்கம்*'' ''*திருப்பாவை — விளக்கம்*'' முதலியன பலர் புகழ் பெற்றவை. ''கம்பனில் வண்ணங்கள் 96'' என்ற நூலும் ''காவிய மேடையில் கம்ப தரிசனம்'' என்ற நூலும் அச்சில் உள்ளன. இவர் எழுதியுள்ள பல நூறு கட்டுரைகளும் என்றும் நினைவில் நிற்கத்தக்கவை.

## 8 நாள் தலைப்புகள்

10—12—88 — போகமும் யோகமும்
11—12—88 — வரமும் வனமும்
12—12—88 — அடியும் முடியும்
13—12—88 — கள்ளனும் கவடியும்
15—12—88 — தருமமும் பெருமையும்
16—12—88 — கற்பும் காவலும்
17—12—88 — அறமும் மறமும்
18—12—88 — புனைந்தான் மவுலி



## 14—12—1988

### பரத நாட்டியம்

## திருமதி ஸ்ரீகலா பரத் அவர்கள்

திருமதி ஸ்ரீகலா பரத் அவர்கள் சென்னையில் பிறந்து வளர்ந்தவர். இவர் கிரிக்கட் மாவீரர் ஸ்ரீகாந்த் அவர்களின் சகோதரி ஆவார். இவர் பொருளாதாரப் பட்டதாரி, கலைமாமணி *திருமதி K. J. சரசா அவர்களிடம் பரதம் பயின்ற மாணவி.*

1969ஆம் ஆண்டில் பரதம் பயிலத் தொடங்கி, 1972ஆம் ஆண்டில் அரங்கேற்றம் கொண்டவர். அன்றே முதிர்ந்த பரதக் *கலைஞர் என்று* பலராலும் பாராட்டப்பட்டவர் 1980ல் நடந்த கல்லூரிகளின் நாட்டிய விழாப் போட்டியில் முதற் பரிசைப் பெற்றவர்.

சென்னையிலும், தமிழ்நாட்டின் பல்வேறு நகரங்களிலும் பரத நாட்டியம் ஆடி, முதல் தரமான நடனமணி என்று அனைவராலும் போற்றிப் புகழப்படுபவர்.

*(1) 1987ல் சிதம்பரத்தில் நடைபெற்ற* நாட்டியாஞ்சலி *விழா* (2) 1986 டிசம்பரில் சென்னை தமிழிசைச் சங்கம் நடத்திய நாட்டிய *விழா* (3) 1987 ஆகஸ்டில் சென்னை கலாமந்திர் அறக்கட்டளை நடத்திய ''நாட்டியோற்சவம்'' *விழா*. (4) 1988 ஜனவரியில் சென்னை ஸ்ரீ கிருஷ்ண கான சபா நடத்திய ''பொங்கல் நாட்டிய *விழா*'' ஆகிய விழாக்களில் பங்கு கொண்டவை குறிப்பிடத் தக்கவையாகும்.

### பின்னணி இசை

நட்டுவாங்கம் — திருமதி K. J. சரசா
வாய்ப்பாட்டு — திருமதி கௌரி
மிருதங்கம் — திரு. பாலு
புல்லாங்குழல் — திரு. கோபி



# தண்புனலைத் தருமுகிலே....

கவிஞர் **அரிமா. பூபாளம். ப. முருகேச பாண்டியன்** – கரப்பாடி – சங்க உறுப்பினர்

*கண்ணொளியில் குடிகொண்ட கண்மணியைக் கனியமுதைக்*
*கருநீல மிடற்றானைக் கைத்தலத்தில் கொண்டாயை*
*விண்ணொளியில் கசிந்துருகும் விரிசுடரை இருகதிரை*
*விரலசைவில் ஏந்திநிதம் வியனாசி தருவாரைத்*
*தண்ணொளியில் தான்மலரும் தனிக்குமுத மலர்முகத்தைக்*
*தக்கார்க்கும் தகிப்பார்க்கும் தண்புனலைத் தருமுகிலைப்*
*பண்ணொளியில் பாடுபொருள் பாங்கமைந்த பெருந்தவத்தைப்*
*பொற்பதத்தைப் புனிதமிடும் அற்புதத்தை வரவேற்போம்!*

*வாயிரக்காநாடு காவடிக்காநாடு ஆனைமலைநாடு நல்லுருக்காநாடுஎனும்*
*வரலாற்றுப் 'பொழில்வாய்ச்சி' வந்தமைந்த தண்ணமுதைத்*
*தாயிரங்கும் தனிக்கருணை தரவந்த தவச்சுடரைத்*
*தேவமொழி வித்தகத்தை தேவியு பாசகரை*
*ஆயிரமாய் ஆயிரமாய் அருள்அள்ளி வழங்குகொடை*
*அருட்கடலை அடிமலரின் அன்பின் மணியூற்றைப்*
*பாயிரமாய்ப் பாப்புனைந்து பதகமலம் பணிந்தேற்றுப்*
*பவ்வியமாய் வரவேற்போம் பாங்கறிந்து வாழ்த்தேற்போம்!*

*காஞ்சிச்செஞ் சூரியனைக் கருணைமிகு மழைப்பொழிவை*
*கற்பனைக்கும் எட்டாத கனகமணி அற்புதத்தை*
*காஞ்சிச்செஞ் சந்திரனைக் கற்கண்டின் நறும்பொடியைக்*
*கவினார்ந்த ஞானக் கவின்விருட்சக் கதலியினை*
*காஞ்சித்தேன் தென்றலிதைக் கனிச்சாறைக் கழறவொணா*
*கனிந்தநற் தவப்பொலிவைக் கன்னலிதை ஜகத்குருவை*
*காஞ்சியருட் கடலென்ற காவியத்தைக் கற்பகத்தைக்*
*கன்னித் தமிழாலே கசிந்துருகி வாழ்த்திசைப்போம்!*

**பின்குறிப்பு :-**

- ★ **காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளுக்கு 17—11—88 மாலை பொள்ளாச்சி Dr. M. C. வேலுசாமி கல்யாண மண்டபத்தில் பேரன்புப் பெருக்குடன் வாசித்தளித்த வரவேற்பு வாழ்த்து அருளாசி வேண்டுமடல்!**
- ★ **கண்மணி, கனியமுது, விரிசுடர், இருகதிர், குமுதமலர்முகம், முகில், பெருந்தவம், பொற்பதம், அற்புதம், தண்ணமுது, தவச்சுடர், தேவமொழிவித்தகம், தேவியுபாசகர், அருட்கடல், அன்பின் மணியூற்று, செஞ்சூரியன், மழைப்பொழிவு, செஞ்சந்திரன், கற்கண்டின் நறும்பொடி, ஞானவிருட்சம், கதலி, தென்றல், கனிச்சாறு, தவப்பொலிவு, கன்னல், ஜகத்குரு, காவியம், கற்பகம், என இன்னோரன்ன கோணத்தில் ஸ்வாமிகள் இதன்மூலம் நமக்கு அருளாசி வழங்கு கின்றார்கள்!**



# சங்கரதாஸ் சுவாமிகளும் தமிழிசையும்

நகைச்சுவைச் செல்வன்
**டி. என். சிவதாணு**

தமிழ் நாடக உலகம் மாத்திரம் அல்ல தமிழிசை உலகமும் தமிழ் இலக்கிய உலகமும் ஒன்று சேர்ந்து ஒருமனதாகப் போற்றிப் பாராட்டத் தகுதி பெற்றவர் தமிழ் நாடகத் தந்தை சங்கரதாஸ் சுவாமிகள் என்று சொன்னால் மிகையாகாது.

சதுமறை யாரியம் வருமுன் சகமுழுதும் நினதாயின்
முதுமொழி நீ அநாதியென மொழிகுவதும் வியப்பாமே

என்று மனோன்மணியம் சுந்தரம் பிள்ளையவர்கள் தேன் தமிழ் மொழியின் சிறப்பை நாடக மூலமா பாமர மக்களுக்குப் பரவச் செய்தவர். சுவாமிகளிடத்தில் மாணவர்களாக இருந்த பலர் சிறந்த நடிகர்களாகவும், இசை மேதைகளாகவும், தமிழ் மொழியில் சிறந்தப் புலவர்களாகவும் இருந்து வந்திருக்கிறார்கள்.

தூத்துக்குடியில் உப்புப் பண்டகசாலையில் கணக்குப் பிள்ளையாகப் பணி செய்து வந்த சுவாமிகள் முதன்முதலாக ராமுடு அய்யர், கல்யாண ராமையயரின் நாடகக் குழுவில் தன் கலை வாழ்வை ஆரம்பித்தார். தன் புலமைத் திறனால் அந்தக் குழுவில் நடிகராகவும், நாடக ஆசிரியராகவும் இருந்து வந்தார்.

பிறகு சுவாமி நாயுடுவின் நாடகக் குழுவில் சூத்திரதாரியாக வந்து நாடக ஆரம்பத்தில் மேடையில் தோன்றி நாடகக் கலையின் சிறப்புகளையும், தமிழ் மொழியின் உயர்வையும், ரசிகப் பெருமக்களிடையே எடுத்துரைப்பார். ரசிக மக்கள் சுவாமியின் பேச்சைக் கேட்பதில் ஆர்வமாக இருப்பார்கள். அன்று சுவாமிகள் பல நாடகக் குழுக்களில் ஆசிரியராக இருந்து பல மாணவர்களை உற்பத்தி செய்திருக்கிறார்கள். அல்லி பரமேஸ்வர அய்யர், வள்ளி வைத்தியநாதய்யர், பி. எல். வேலு நாயரின் சண்முகானந்த சபா, K. S. செல்லப்பா, K. S. அனந்த நாராயண அய்யர் அவர்களின் ஆரிய கான சபா முதலிய நாடகக் குழுக்கள் குறிப்பிடத்தக்கது.

தமிழ்நாட்டில் மிகச் சிறந்து விளங்கிய நாடக நடிகப் பெரியார்கள் ஜி.எஸ். முனுசாமி நாயுடு, ஜெகநாதநாயுடு, V.S.சுந்தரேசஅய்யர் சாமிநாத முதலியார், சீனிவாச ஆழ்வார் C. S. சாமண்ணா T. S. கண்ணுசாமி பிள்ளை, பைரவ சுந்தரம் பிள்ளை, S. G. கிட்டப்பா, M. R. கோவிந்தசாமி பிள்ளை, கல்லிடைக் குறிச்சி மொவுதீன், ராஜ சண்முகதாஸ், S. S. சாப்ஜான், G. நம்மாழ்வார் ரெட்டி மனமோகன அரங்கசாமிநாயுடு, நடேசபத்தர், குற்றாலிங்கம் பிள்ளை, சுந்தரராவ், மாரியப்ப சுவாமிகள், ராஜா வி. எம். கோவிந்தசாமி பிள்ளை, M. G. நடராஜ பிள்ளை, சீனிவாச பிள்ளை, தர்மலிங்கம் பிள்ளை (ஆர்மோனியம் K. T. நடராஜ பிள்ளையின் தந்தை) மகா தேவய்யர், கிஞ்சின் தேவராஜுலு நாயுடு K.S. செல்லப்பா ஐயர், K.S. அனந்தநாராயண அய்யர், P. S. வேலு நாயர், இசக்கி முத்து வாத்தியார், சூரிய நாராயண பாகவதர், ஆதி மூல வாத்தியார், சுந்தரராவ், C. கன்னையா திருமதிகள், பாலாமணி அம்மையார், ரெங்க நாயகி, S. P. கமலாம்பாள், பாலாம்பாள்,

V. P. ஜானகி, T. தாயம்மாள், கோரங்கி மாணிக்கம் போன்றவர்கள் மற்றும் பல பெரிய வர்கள் சுவாமிகளின் மாணுக்கர்கள்.

மேலும் சுவாமிகள் சிறுவர் நாடகக் கம்பெனியில் ஜெகநாத அய்யரின் பால மீன ரஞ்சனி, பழனியா பிள்ளை அவர்களின் தத்துவ மீனலோசனி வித்துவ பாலசபா முதலிய சிறுவர் நாடகக் குழுவில் ஆசிரியராக இருந்ததோடு தானும் சமரச சன்மார்க்க சபா என்ற ஒரு நாடகக் குழுவையும் நிறுவினர். சிறுவர் நாடகக் குழுக்களில் சுவாமிகள் ஆசிரியராக இருந்த போது அவரிடம் பயிற்சி பெற்ற வர்கள் திருவாளர்கள் K. சாரங்கபாணி, S. V. வெங்கட்ராமன், P. D. சம்பந்தம் M. S. முத்துக்கிருஷ்ணன், M. V. மணி, D. பாலசுப்பிரமணியம் நவாப் டி. எஸ். இராஜ மாணிக்கம் பிள்ளை, T. P. பொன்னுசாமி பிள்ளை முதலியவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

இயலும், இசையும், சேர்ந்துதான் நாடகம் என்றபடியால் சுவாமிகளுடைய நாடகங்கள் ஒவ்வொன்றிலும் இயலையும், இசையையும், காணலாம். நாடக வசனங்களில் பழந்தமிழ் நூல்களில் இருந்து மக்களுக்கு அறிவுரை சொல்லக் கூடிய பல பாட்டுக் களையும் கேட்கலாம். திருக்குறள், விவேக சிந்தாமணி, நல்வழி மற்றும் புராண இதி காசங்களையும் அரிய முன்னோர்களின் கருத்துக் களை எல்லாம் சாதாரண மக்கள் புரிந்து கொள்ளக் கூடிய முறையில் நாடகங்களில் கையாண்டிருக்கிறர்.

இசை மேடைகளில் தெலுங்கு மொழி ஆதிக்கம் பெற்றிருந்த அந்தக் காலத்தில் சுவாமிகளின் நாடகப் பாடல்களை நல்ல இசை யுடன் பாடுவதற்கு ஏற்ப பல இராகங்களில் பாடல்களை அமைத்ததோடு இல்லாமல் தமிழில் நூற்றுக்கணக்கான தோத்திரப் பாடல்களை எழுதி தமிழிசை வளர்க்கப் பாடுபட்டிருக்கிறர்

தெருக்களிலே கூத்து என்ற பெயரில் வெறும் இசையாகவே நடித்து வந்தக் கதை களை மேடையிலும் வெறும் இசையாகவே பாடி நடித்து வந்த பிறகு வசனம் என்கிற பெயரில் நடிகர்கள் தனக்குத் தோன்றியபடியெல்லாம் பேசி வந்த காலத்தில் புராணக் கதைகளைப் பாடலோடும் வசனத்தோடும் நாடகங்களை எழுதி நாடகங்கள் நடத்த ஒரு நல்ல வழி முறையை வகுத்துக் கொடுத்தவர் சுவாமிகள். அவர் பாடல்கள் எழுதும் போது எதுகை, மோனையைத் தேடிப் போவதில்லை எதுகை, மோனை, சொல் நயம், பொருள் நயம் இவற் றுடன் சொற்கள் அவரைத் தேடித்தானே வரும். அவர் எழுத ஆரம்பித்தால் நடுவிலே நிறுத்த மாட்டார். ஒரு முறை எழுதி விட்டு அதை அடித்து திருத்தும் வழக்கம் அவரிடம் கிடையாது. எழுதும் போது சிந்தனை செய்ய வேண்டிய கட்டம் வந்தால் தொடர்ந்து முருகன் துணை, முருகன் துணை என்று எழுதிக் கொண்டேயிருப்பார் ஒரே நாள் இரவில் சுமார் 90 பாடல்கள் எழுதி அதற்கு இசையும் அமைத்து கற்பனை வளத்துடன் வசனமும் நிறைந்த அபிமன்யு சுந்தரி நாடகத்தை எழுதி முடித்தது சுவாமிகளின் புலமைக்கு ஓர் உதாரணமும் ஆகும்.





# கலையின் பொருள்

டாக்டர் T. B. சித்தலிங்கய்யா, MA., PhD.
சைவ சித்தாந்தத் துறை — தலைவர்
மதுரை காமராஜ் பல்கலைக் கழகம், மதுரை

"தேடிச் சோறு நிதம் தின்று" வாழ்வது மட்டும் வாழ்க்கை ஆகாது, உணவு உடலை வளர்க்கும். உணர்வு மனத்தில் தோன்றுவது, அன்றாட வாழ்க்கையில் தோன்றும் அச்சம், கோபம், விருப்பு வெறுப்புக்கள் முதலியன உணர்ச்சிகள் எனப்படும். இவைகளும் மனத்தில் தான் இடம் பெறுகின்றன. இவை சூழ்நிலை, உடல்நிலை முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு தோன்றுபவை. இவற்றால் உடலும் உள்ளமும் பாதிக்கப்படுகின்றன. அன்பு, இரக்கம், அழகுணர்ச்சி போன்ற மென்மையான உணர்வுகள் உள்ளத்துக்கு மகிழ்ச்சியும் உடலுக்கு நலமும் தருகின்றன. எனவே இத்தகைய மென்மையான உணர்வுகளை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

அழகைக் காணும் முயற்சியும் அந்த அழகு தரும் இன்பத்தை வெளிப்படுத்தும் முயற்சியும் தான் கலைகளின் அடிப்படையாக அமைகின்றன. இசை, ஓவியம், நடனம், நாடகம் முதலிய பல கலைகளாக ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளன. கலையின் பயன் இன்பம் தருவது தான். என்றும் குறையாத இன்பத்தை அளிப்பவன் இறைவன் மட்டுமே. ஏனெனில் அவன் இன்பமே வடிவமானவன் (ஆனந்தன்). எனவே தான் இன்பம் தரும் கலைகள் இன்ப வடிவாகிய இறைவனோடு தொடர்புபடுத்திப் பேசப்படுகின்றன. எல்லாப் பொருள்களும் அவனிடமிருந்தே தோன்றுகின்றன என்பதை ஒப்புக் கொண்டால், கலைகளும் அவனிடமிருந்துதானே தோன்றியிருக்க வேண்டும்? கடவுள் கலையின் வடிவம்; கலையின் பொருள். "கலைக்கெலாம் பொருளாய்," என்றும் "பல்கலையின் பொருளே" என்றும் பாடுகிறார் சுந்தரர். ஆடல்வல்ல நடராசனும் அவனே. அந்த ஆடல் ஆனந்தமா நடனம். அந்தக் கூத்து ஐந்து தொழில்களையும் (படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்) நிகழ்த்துவதாகச் சைவ சித்தாந்தம் கூறும். "தோற்றம் துடியதனில்" என்று தொடங்கும் வெண்பா (உண்மை விளக்கம்) இதனை விரிவாகக் கூறுகிறது, இந்தக் கூத்து இல்லையானால் உலகம் உலகமாக இராது; பேயும் காளியும் கூளியும் உலவும் சுடுகாடாக அமையும். "தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணிஎலாம், வான்புக்க வேல்காளிக் கூட்டாங்காண்" (திருவாசகம், திருச்சாழல், 14) என்று குறிப்பிடுகிறார் மாணிக்கவாசகர்.

கலையும் இறைவன்; அதன் வடிவம் இறைவன்; அதன் பொருளும் இறைவனே. இதையே, 'ஏழிசையாய், இசைப் பயனாய்' என்று சுந்தரர் கூறுகிறார். அந்த இசை, வழிபாட்டு முறைகளில் ஒன்று நாதோபாசனை என்று அது குறிப்பிடப்படுகிறது. "அர்ச்சனை பாட்டேயாகும். ஆதலால் நம்மை என்றும் சொற்றமிழ் பாடுக என்றார் தூமறை பாடும் வாயார்" (பெரிய புராணம், 5.70) என்று சுந்தரரிடம் சிவபெருமான் கூறியதாகச் சேக்கிழார் சொல்கிறார்.

இசைகொண்டு வழிபாடு செய்வதைக் திருமுறைகள் விரிவாகக் கூறுகின்றன.

"இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்,
இருக்கொடு
தோத்திரம் இயம்பினர் ஒருபால், துன்னிய
பிணைமலர்க் கையினர் ஒருபால், தொழுகையர்
அழுகையர் துவள்கையர் ஒருபால்"

என்று திருவாசகம் (திருப்பள்ளியெழுச்சி, 4) எடுத்துரைக்கிறது. ''பண்ணார் இசைகள் அவை கொண்டு பரவு ஏத்தும்'' [7.52.6] என்று சுந்தரரும், ''தொண்டர் இசைபாடியும் கூடிக் கண்டு துதி செய்பவன் ஊர்'' [1 38 6], ''முறைமுறையால் இசைபாடுபவர் ஆடி முன் தொண்டர்கள்'' [3.9.5], என்று சம்பந்தரும் குறிப்பிட்டிருக்கிறார்கள். ''தொண்டெலாம் இசை பாடத் தூமுறுவல் அருள் செய்யும் ஆரூரர்'' என்று பாடுகிறார் அப்பர். [4.5.4] 'தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்' [4.1.16] என்று தம்மைப்பற்றியும் அவர் குறிப்பிடுகிறார். இவ்வாறாக இசை ஒரு வழிபாட்டு முறையாகவே ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது பாடுவதற்கு குரல்வளம் வேண்டும் என்பதில்லை. உளம் கனிந்து பாடுவதே போதுமானது. இதைச் சம்பந்தர், 'கோழைமிடறாகக் கவி கோளுமிலவாக இசை கூடும் வகையால், ஏழையடியாரவர்கள் சொனசொல் மகிழுமீசன்' [1.71.1] என்று கூறுகிறார்.

கலையின் பொருளான இறைவனைக் கலையின் மூலம் வழிபடும் முயற்சிகள் அனைத்தும் வளர்க என்று வாழ்த்துவோம்!

---

தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகளிடம் தெய்வப் பற்றும், தேசப்பற்றும் இருந்தன. உலக இன்பங்களைத்துறந்த பின்னரே தமிழுக்குத் தலைக்காப்பியமாம் சிலப்பதிகாரத்தைத் தந்தார் இளங்கோவடிகள். அதுபோல, இவ்வாழ்க்கையைத் துறந்தவராகி, நாடகத் தமிழின் வாழ்வுக்கென்றே தொண்டு புரிந்தார் சுவாமிகள். தெய்வப் பற்றும் தேசப் பற்றும் கொண்ட நாடகப் பேராசிரியர் என்பதற்காகவே இன்றைய தமிழுலகம் சுவாமிகளைப் போற்றுகிறது.

— ம. பொ. சி.



## நாடக உலகில் இமயம்

நாடக உலகில் சங்கரதாஸ் சுவாமிகள் ஓர் இமயமலை. அவர் பெருமையைப் பற்றி இன்று நினைக்கவே பெருமையாகவும் வியப்பாகவும் இருக்கிறது. அவரைப் போன்றவர்கள் இன்று நம்மிடையே இல்லையே என்று எண்ணும்போது கவலையும் மேலிடுகிறது. ஒரே இரவில் எழுதி முடிக்கும் அவரது நாடகங்களில் ஒரே ஒரு எழுத்துக்கூட அவர் அடித்துத் திருத்தி எழுதியது கிடையாது. வார்த்து ஊற்றிய அழகான சிலைகளைப்போல அவருடைய படைப்புகள் கம்பீரமாக இருக்கும்.

வெறும் வசனம் மட்டுமா எழுதினார். பற்பல மெட்டுகளில் அருமையான பாடல்களையும் அல்லவா எழுதினார்.

— என். எஸ். கே.

# அட்டைப் பட விளக்கம்

கலைமாமணி டி. என். சிவதாணு

இலங்கையை ஆண்ட இராவணேஸ்வரன் மகன் மேகநாதன் என்ற இந்திரஜித்து பல நாடுகளில் திக் விஜயம் செய்துவிட்டு நாகலோகத்திற்கு வருகிறான். அங்கு நந்தவனத்தைப் பார்த்து அதன் அழகைப்பார்த்து அதிசயித்து நின்று கொண்டிருக்கிறான். அந்த சமயத்தில், நாகலோக அரசன் ஆதிசேஷனின் மகள் சுலோசனா வருகிறாள். இந்திரஜித் அவளைப் பார்த்து அவளுடைய அழகைக் கண்டு மயங்குகிறான். பருவப்பெண்ணாகிய சுலோசனாவும் இந்திரஜித்தின் கம்பீரத்தையும், அழகையும் கண்டு அவனை நேசித்தாலும் அவனைக் கவனிக்காதது போல் இயற்கையாக பெண்குலத்திற்கு ஏற்பட்ட நாணத்துடன் ஒதுங்கி நிற்கிறாள்.

சுலோசனாவின் நிலையை தெரிந்துகொண்ட இந்திரஜித் அவளிடம் தன் வீர தீர பராக்கிரமங்களை எடுத்துச் சொல்லி அவளைப் பற்றி விசாரிக்கிறான். அதற்கு அவள் நாகலோக அரசன் ஆதிசேஷனின் மகள் என்கிறாள். உடனே இந்திரஜித் நாமிருவரும் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கிறபடியால் காந்தர்வமணம் செய்துகொள்ளலாம் என்று வற்புறுத்துகிறான். அதற்கு அவள், நாம் இருவரும் ஒருவருக்கொருவர் விரும்பினாலும்கூட பெண்ணானவள் பெற்றோர்களுடைய சம்மதம் இல்லாமல் திருமணம் செய்து கொள்வது பெண்களுக்கு அழகல்ல என்று வாதாடுகிறாள். கடைசியில் தமிழ்மொழியின் சிறப்பையும் அதன் மேன்மையையும் விளக்கமாக எடுத்துச் சொல்லுகிறான் இந்திரஜித். இந்திரஜித்தின் தமிழ் அறிவால் கட்டுண்ட சுலோசனா திருமணத்திற்கு சம்மதம் தெரிவித்து இருவரும் கைகோர்த்துக்கொண்டு போவதாக நாடகத்தந்தை தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள் நடிகமேதைகள் பி. எஸ் வேலு நாயர், கே.எஸ். அனந்தநாராயண அய்யர் இருவருக்காக எழுதிய சுலோசனா சதி நாடகத்தில் ஒரு காட்சி.

இந்திரஜித்தாக பி. எஸ். வேலு நாயரும் சுலோசனாவாக கே. எஸ்.அனந்தநாராயண அய்யரும் நடிப்பதை மகிழ்ந்த அந்தக் காலத்து ரசிகப்பெருமக்கள் கொடுத்து வைத்தவர்கள்.

# பதினேழாம் ஆண்டு விழா நிகழ்ச்சிகள்



பதினேழாம் ஆண்டு விழாத் தலைவர் திரு. G. வரதராஜ் M.P. தலைமை உரை ஆற்றுகிறார். சங்கத் தலைவர், டாக்டர் சீர்காழி G. சிவசிதம்பரம், திருமதி மணி கிருஷ்ணசாமி திரு. ப. லெட்சுமணஞ் செட்டியார் ஆகியோர் அமர்ந்துள்ளனர்.



பதினேழாம் ஆண்டு விழா மலரை இராஜபாளையம் கற்பகாம்பாள் மில்ஸ் உரிமையாளர் திரு. ப. லெட்சுமணஞ் செட்டியார் வெளியிட, சோமனூர் கருணம்பிகை மில்ஸ் உரிமையாளர் MJF. லயன் A.S. சுப்பையன் பெற்றுக்கொள்கிறார்.



பதினேழாம் ஆண்டு விழாவில்
டாக்டர் G. சிவசிதம்பரம் அவர்கட்கு சங்கத் தலைவர் பரிசு வழங்குகிறார்.



ஆண்டு விழா மலரை திரு. ப. லெட்சுமணஞ் செட்டியார் வெளியிட
திருமதி மணி கிருஷ்ணசாமி பெற்றுக்கொள்கிறார்.



அபிநயத்தோடு அற்புதமாக ஆடிய
குமாரி சுனந்தா — சுமித்ரா சகோதரிகள்
— பரதநாட்டியம்
(ஆசிரியர்: திரு. S. K. காமேஸ்வரன்)
8—2—1988



சுனந்தா, சுமித்ரா பரத நாட்டியத்திற்கு
ஆசிரியர் கலைமாமணி திரு. S.K. காமேஸ்வரன்
நட்டுவாங்கம் செய்கிறுர்
திருமதி அனந்தலட்சுமி சடகோபன் &
திருமதி சுஜாதா விஜயராகவன்



குமாரி ஜோல்சஞ G. மேனேன்
(ஆசிரியை :
திருமதி N. S. ஜெயலட்சுமி)
9—2—1988



குமாரி ஷகீலாவின்
உணர்ச்சிமிகு பரதநாட்டியம்
(ஆசிரியை: திருமதி சந்திரா தண்டாயுதபாணி)
10—2—1988



மூன்றும் நாட்டிய விழாவில் கலைமாமணி K. J. சரசாவிற்கு
பொன்னுடை போர்த்துபவர் திருமதி கல்யாணி ரமணி சங்கர்



மூன்றும் நாட்டிய விழாவில்
பாராட்டுப் பெற்ற பரத நாட்டிய ஆசிரியை
கலைமாமணி K. J. சரசா அவர்களுடன்
அவரது அன்பு மாணவி குமாரி வித்யா ராஜன்



# தமிழிசை வளர்த்த பெரியோர்...

— ஸீ. எஸ். ராஜு

தமிழிசையின் பொற்காலம் 18ஆம் நூற்ருண்டு முதல் எனக்கொண்டாலும் அந்தப் பொற்கோயில் எழுப்பப்பட்டு ஒளிவீச அடிக்கல் கல் தோன்றி மண்தோன்ருக் காலத்திலேயே நாட்டப்பட்டது என்று கூறலாம்.

தமிழிசையை இறையுணர்வுடன் மொழிப் பற்று, நாட்டுப்பற்று, கலைப்பற்று முதலிய அடித்தளக் குறிக்கோள்களுடன் தெளிவான சிந்தனை, அறிவு செறிந்த திறனய்வு, நீதி யுடனை நேர்மையான வாழ்க்கை முறை, என்று தன்னையும், தன் சுற்றுப்புறத்தையும், செழிப்பும் வளப்பமும் மிக்கதாகக் கொண்டு தமிழன் தன் நாகரீக வாழ்க்கையைத் துவங்கி ஞன் என்பதில் ஐயமில்லை.

ஸ்ருதியும், லயமும் உலகின் எல்லா அசை யும், அசையாப் பொருள்களிடமும் இயற்கை யாகவே சிறப்புடன் அமைந்துள்ளது என்பது கண்கூடு.

பண்டைய வரலாறுகளும், நெறிமுறை களும், வாழ்க்கைத்திட்டங்களும் இசை மூலமே செவியேற்றி வழிவழியாக வந்திருக்கிறது. இது நாளுக்கு நாள் புது மெருகுடனும் வளர்ந் திருக்கிறது.

இசைத்தமிழின் கலைஞர்களாகத் தமிழ் வளர்த்த புலவர்களைக் கூறலாம்.

முன்னுட் புலவர்கள் தங்களுடைய கவிதை களைப் புனையும்போது பல்வேறு 'பா' வகை களைக் கையாண்டிருக்கின்றனர். இந்த 'பா' வரிசைகளை மக்களிடையே பரப்ப ஒரு சந்தம், ஒரு காலப் பிரமாணம், முதலியவைகளைக் கையாண்டிருக்கலாம். இதுவே இசையின் உறுப்புகளையும், அதன் இணையும் முறைகளை யும் அடுத்தடுத்து வரும் அழகினையும், தாள கட்டத்துக்குள் அமையவும் தொடர்ந்து வந்த புலவர்களும், பெரியோர்களும் முயற்சி செய்திருக்கிருர்களெனத் தெரிகிறது.

தமிழனின் வாழ்க்கையில் ஒவ்வொரு அசைவும், உயிர்ப்பும், இசையுடன் இணைந்து இருப்பது தெளிவு.

மனிதன் பிறவி எடுக்கும்போதே இசையுடன் தான் தன்னுடைய உலக வாழ்க்கையைத்

துவக்குகிறன். குழந்தையின் மழலைமிழற்றல், அழுகை, முதலியவை ஒரு கட்டுக்கோப்பான சுருதி லயத்தில், இயங்குவதும் நம்மை மயக்குவது வரையறுக்கப்பட முடியாத காலத்தின் விசித்திர நிகழ்ச்சி.

மேலும், மரபு, பண்பாடு, கலை இவைகள் செவிவழித்துணை கொண்டு தலைமுறை தலைமுறையாய் வந்திருக்கிறது. மனதில் நிறுத்தி — நிலைத்து வைத்துக் கொள்ள இசையே துணையாய் அமைந்திருக்கிறது மருத்துவம், வாழ்க்கைமுறை, நிதி, நீதி முதலியவைகளின் அடிப்படைக் கோட்பாடுகளும் இயல்புகளும் இசை வடிவமாகவே கிடைப்பது தமிழ் இசையின் தொன்மைக்குச் சான்ருகும்.

அறிவும் சிந்தனையும் மெருகுடன் பெருகப் பெருக இசைக்கு ஓர் இலக்கணமும், அந்த இலக்கண ரீதியில் ஒரு இசை இலக்கியமும் உருவாயிற்று.

> அளபிடித்துயிர்த்தலும் - ஒற்றிசை நீடலும்
> உளதென மொழிய இசையொடு சிவணிய
> நரம்பின் மறைய என்மனர் புலவர்
>
> (தொல்காப்பியம் — எழுத்ததிகாரம்)

முன்னர் அரசவைகளில், பாணர்கள் என்றும், பாடினியர் என்றும் இசைப்பேரறிஞர்கள் இசையை வளர்த்து வந்தனர் எனலாம். இவை இசையின் முதல்படியாளுல் — பரிபாடல் பட்டினப்பாலை — குறுந்தொகை, அகநானூறு புறநானூறு, நற்றிணை, மலைபடுகடாம், சிறுபாணுற்றுப்படை பெரும்பாணுற்றுப்படை போன்ற நூல்களும் இசையின் அங்கங்களை தெளிவு படுத்துகின்றன.

தொல்காப்பியம் இசைவடிவ அமைப்புகளைத் தெளிவுபடுத்தியபின், முறையான இசை மரபை உருவாக்கியது சிலப்பதிகாரமென்ற சிலம்புக்காவியமே.

இசையின் உயிர்க்குரலும், உணர்வு மூச்சும் இச்சிலம்புக்காவியம் முழுவதும் விரவிக் கிடப்பது மிக அருமை.

பக்தியின் சுவட்டில் இறைவனை அனுபவிப்பதில் தாங்கள் அடைந்த பரவச நிலையை, பாமரரும் அறிந்து, அவர் தம்மை நல்வழிப் படுத்திக் கொண்டு, வாழ்க்கைப் பயணத்தை நடத்தி இறைவனடி சேர வளமிக்க இசை வழியை வகுத்துக் கொடுத்தவர்களான சமய குரவர்கள்—தேவாரம் சூட்டிய அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர், திருவாசகம் அளித்த மாணிக்க வாசகரும் — இசை புனைந்த பெரியோர்களில் சிறப்பிடம் பெறுகின்றனர்.

இவர்களைத் தொடர்ந்து உள்ளும் புறமும் உவகைக்களிப்பில் நடம்புரிய தன்னையும், இறைவனையும் ஐக்கியப்படுத்திக் கொண்டு இதயம்கனிந்து பாமாலை சூட்டிய ஆழ்வார்கள், அவர்களுள் ஆண்டாளின் சிறப்பு அளவிடற்கரியது.

இவர்களைத் தெடர்ந்து பா இசைத்துப் பார்மிசை புகழுடம்பு பெற்றவர்கள் பட்டினத்தடிகள், பதினெண்சித்தர்கள், தாயுமானவர், முதலான பெரியோர்களைக் கூறலாம்.

பேரிலக்கியம் படைத்த கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி, செயங்கொண்டார், வில்லிப்புத்தூரார், சேக்கிழார், ஔவை, தமிழ்மறை ஈன்ற வள்ளுவர், இன்னும் பல புலவர்களும், இந்த இசை மரபில் இடம் பெறுவார்.

மேற்கூறிய மாபெரும் புலவர்களும், செந்தமிழ்ப் புலவர்களும், இசையெனும் பெருவழிப்பாதையில் ஒளிவிளக்காகத் திகழ அந்தப் பெருவிளக்கை வழியாகக் கொண்டு மோக்ஷம் (விடுதலை) என்னும் இறைவனுடன் இணைந்த நிலையை அடைந்தவர்களை குருப்புகழ் படைத்துப் பெரும்புகழ் சேர்த்த அருணகிரியிலிருந்து தொடக்கமெனக் கூறலாம்.

### அருணகிரிநாதர்

தமிழுக்கும், இசைக்கும், புகழ்சேர்க்க ஒரு சந்தமமைத்து விந்தை புரிந்து எந்தையின் திருவடி சேர்ந்தவர் அருணகிரியார். இவர் பதினைந்தாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர். பெருஞ்செல்வந்தராயும், பெற்ருேர்கள்,

உடன்பிறந்தோர் அன்பு வெள்ளத்தில் களிப்புடன் மிதந்து கொண்டிருந்தாலும், தன்னுடைய நடத்தையினால், குஷ்டநோயுடன் கஷ்டப்பட்ட இவர் பிணியின் தீவிரத் துயரத்தினால், தன்னை வெறுத்துக் கொண்டு அண்ணாமலையார் கோபுர உச்சியில் மேலேறிக் கீழே குதித்து உயிரை மாய்த்துக்கொள்ள முயன்றார். கீழே விழுந்த அவரை முருகக் கடவுள் ஏந்தி, அவர் நோய் போக்கி, புது மனிதராக ஆக்கி, தன்னுடைய பக்தனாக ஏற்றுக் கொண்டார். அன்றுமுதல் துறவு வாழ்க்கை மேற்கொண்டு, திருப்புகழ் நெறி வளர்த்துக் கொண்டு முருகக்கடவுளின் புகழ்பாடி இசை வளர்த்தார். அருணகிரியாரின் சந்தப்பாக்கள் இன்பம் பயக்கும். இவருடைய திருப்புகழில், மனதிற்கு மகிழ்ச்சியளிக்கும் சந்தங்களையும், அபூர்வ ராக, தாள அமைப்புக்களையும் காணலாம்.

## குமரகுருபரர் :

இவர் பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். பிறந்தது முதல் ஐந்து வயது வரை பேச முடியாமல் இருந்த இவருக்கு முருகனருளால் பேசும்திறன் வந்தது.

இவர் திருமலை நாயக்க மன்னன் முன் மீனாட்சியம்மைப்பிள்ளைத்தமிழ் பாடினார். அது சமயம் அன்னை மீனாட்சியே சிறு பெண்ணாகத் தோன்றி மன்னர் கழுத்திலிருந்த மணிமாலையை எடுத்து இவருக்களித்ததாக ஒரு வரலாறும் உண்டு. இவர் வடநாடு, தமிழ்நாடுகளில் பயணம் செய்திருக்கிறார்.

முத்துக்குமரசாமிப்பிள்ளைத்தமிழ், மீனாட்சியம்மை குறம், சிவகாமி இரட்டை மணிமாலை, பண்டார மும்மணிக்கோவை காசிக்கலம்பகம் முதலியவை இவர் படைத்த நூல்களில் சில.

## தமிழிசை மும்மணிகள்

16, 17, 18, நூற்றாண்டுகளில் பக்தியுடன் கலந்த தமிழிசைப் பெருகலாயிற்று எனலாம். சிறந்த இசைக்கலைஞர்கள், தமிழறிஞர்கள் முதலியோர் இந்தக் காலகட்டத்தில் பிறவியெடுத்து தமிழ், தமிழிசை, தமிழ்நாடு முதலிய அனைத்திற்கும் பெருமை சேர்த்தனர் முத்துத் தாண்டவர், மாரிமுத்தாபிள்ளை, அருணாசலக் கவிராயர் முதலானவர்களை தமிழிசை மும்மணிகள் எனக்கூறுவது மரபு.

## முத்துத்தாண்டவர்

பதினாறாம் நூற்றாண்டில் சீர்காழியில் பிறந்து தில்லைநடராஜனின் பக்தியில் திளைத்தவர். தாண்டவனாகத் திரிந்து கொண்டிருந்த இவர் திருக்கோயிலில் இரவில் தனியே விடப்பட அன்னையின் அருளால் பாடல்புனையும் திறன் கிட்டியது. முதற்பாடலாக ''பூலோக கைலாசகிரி'' என்ற பாடலைப்பாடி ஆண்டவனிடமிருந்தே ஐந்து பொற்காசுகள் படிகளில் அருளாசியுடன் வழங்கப் பெற்றார். இவர் பல தமிழ்க் கீர்த்தனைகளும், பதங்களும் இயற்றியிருக்கிறார். 'தெருவில் வாரானோ', 'அருமருந்தொரு விருந்து' முதலிய பாடல்கள் இவர் அளித்த விருந்து.

## மாரிமுத்தா பிள்ளை :

பதினெட்டாம் நூற்றாண்டின் மணியான பாடல்கள் இவரிடமிருந்து தோன்றின எனலாம். இவருடைய சமகாலத்தவராகவும், இவருக்குப் பிற்பட்டவராகவும் பல இசைப் பேரறிஞர்களும், இசைவல்லுநர்களும் தோன்றினர்.

'பேயாண்டிதனைக்கண்டு நீயேண்டி மயங்கினாய்' 'ஒருக்கால் சிவசிதம்பரம் என்று சொன்னால்' (ஆரபி) 'காலைத்தூக்கி நின்றாடும் தெய்வமே' (யதுகுல காம்போதி) 'எதுக்கித்தனை மோடிதான்' (சுருட்டி) 'என்னேரமும் ஒரு காலைத்தூக்கி' (தேவகாந்தாரி) முதலிய பாடல்கள் இவரை அமரராக்கும்.

இவருடைய மூத்தமகன் சித்தம் மயங்கி திரிந்து கொண்டிருந்த போது நடராசப் பெருமான் கனவில் உரைத்தபடி 'புலியூர் வெண்பா' என்ற நூலைப்பாடி தன் மகனின் மனமயக்கத்தைப் போக்கினார்.

இவர் அநேக குறவஞ்சி, நொண்டி நாடகம், பதிகங்கள், முதலானவைகளை இசைப்பாடல்களுடனும் இயற்றியுள்ளார்.

இவர் பாடல்களில் 'தில்லை' யென்ற முத்திரையும் சிவபுராணக் கதைகளும் இடம் பெறும்.

### அருணாசலக் கவிராயர்

சங்கீத மும்மூர்த்திகளுக்கு முன்னதாகப் பிறந்தவர். தருமபுர ஆதீனத்தில் தமிழ் மற்றும் பல சமய நூல்களும் கற்று தேர்ச்சிபெற்றார்.

இவர் இராம நாடகக் கீர்த்தனையைப்பாடி திருவரங்கத்தில் அரங்கேற்ற முயன்ற போது பல இடையூறுகள் நேர்ந்தன. அவரும் அரங்கநாதரை வேண்ட, அவரும் அவர் கனவில் தோன்றி நீரும் 'கம்பரைப் போல் நம் பரிசனங்களைப் பாடும். இராமநாடகக் கீர்த்தனைகள் அரங்கேறும்' என்று கூறினார். 'அது போன்றே அர்ச்சகர்கள் கனவிலும் தோன்றி அரங்கேற்றத்திற்கு ஆவன செய்யுமாறு' பணித்தார். இராமநாடக கீர்த்தனைகள் அரங்கேறியது.

அருணாசலக் கவிராயரை ஆதரித்தவர்களில் மணலி முத்துகிருஷ்ண முதலியார், துபாஷ் ஆனந்தரங்கம் பிள்ளை, உடையார் பாளையம் உவரங்கப்ப உடையார் முதலியோர்.

இவர் இயற்றிய பிற நூல்கள் ''அநுமுகி நாடகம்'' ''அனுமார் பிள்ளைத்தமிழ்'' ''சீர்காழித்தலபுராணம்'' சீர்காழிக்கோவை.

### ஊத்துக்காடு வேங்கடசுப்பையர்

''அலைபாயுதே கண்ணா'' (கானடா) பால் வடியும் முகம் நினைந்து (நாடகுறிஞ்சி) மற்றும் பல கீர்த்தனைகளை சங்கீத மேடைகளிலும், நடன அரங்கங்களிலும் கேட்கும் போது — கிருஷ்ண பக்தியின் சாரம் எல்லோருடைய காதுகளிலும் பாயும். ''தாயே யசோதே'' (தோடி) என்ற பாடல் உள்ளங்களில் கண்ணனை ஆடச் செய்யும்.

இவர் சிறு வயதில் பூரனூர் நடேச பாகவதர் என்பவரிடம் பயின்றபின் ஸ்ரீகிருஷ்ண யோகி என்பவரை அடைந்து தன்னைச் சீடனாக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினார். அவரோ இவரை மறுத்து உதறித் தள்ளினார். வருத்தத்துடன் திரும்பிய அவரை, அவருடைய அன்னை நர்த்தன கிருஷ்ணனையே குருவாக வரித்து அவனுடைய சரணங்களை அடையும்படிக் கூறினாள்.

அப்படியே ஏற்று தியானத்தில் இருக்கும் போது ஒரு நாள் சேறும் சகதியும் உடல் பூராவும் உள்ள குழந்தை இவர் மடியில் வந்து உட்கார்ந்தது. இவர் அதை ஒதுக்கித் தள்ளினார். மறுபடியும் வந்து உட்கார்ந்தது. மறுபடியும் தள்ளினார். இப்படிப் பலமுறை நடந்த பின் வேணுகானம் கேட்டு கண்திறந்தார் — கண்ணனின் லீலை அறிந்து மகிழ்ந்தார்.

இவருடைய சாகித்யங்களில் சொல்லழகும் சொற்கட்டும் ஜதிபோடும். இவர் ஸ்ரீமுத்துஸ்வாமி தீக்ஷிதர் போல் நவாவர்ணக் கீர்த்தனைகளும் இயற்றியிருக்கிறார்.

தமிழ்ப்பண்ணான புறநீர்மையில் ஒரு தில்லானா இயற்றியிருக்கிறார். இவர் ஒரு நைஷ்டிகப் பிரம்மசாரி.

### தஞ்சை நால்வர் :

சின்னையா, பொன்னையா சிவானந்தம், வடிவேலும் இவர்கள் தமிழ் நாட்டில் இசையும், நாட்டிய இசையும் நாட்டியமும் வளரக் காரணமாக இருந்த கலைஞர்கள். மகாராஜா ஸ்வாதித் திருநாள் கிருதிகளுக்கு உயிரும் உணர்வும் கொடுத்த பெருமக்கள். இன்றைய தலை உலகில் பெரும் பெயர் பெற்ற நடன இசைக்கலைஞர்கள் இவர்களின் வழித்தோன்றல்களே தென்னாடு முழுவதும் தமிழிசை மணம் பரப்பியவர்கள். இசை, நாட்டிய நிகழ்ச்சிகளில், ஒரு தெளிவான அமைப்பை வகுத்துக் கொடுத்தவர்கள். நாட்டிய நிகழ்ச்சிகளுக்காகவே பல பாடல்கள், பதங்கள், ஸ்வரஜதிகள், வர்ணங்கள் முதலியவற்றை இயற்றியிருக்கிறார்கள். தஞ்சை நாயகமன்னர்களின்

ஆதரவில் இவர்களின் இசை மணம் நாடெங்கும் பரவியது.

### பாபவிநாச முதலியார்

இவர் பதினெட்டாம் நூற்றுண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர். இவருடைய பாடல்களில் நிந்தாஸ்துதி நிழலாடும். 'நடமாடித் திரிந்த உமக்கு இடது கால் முடமானதேன்' (காம்போதி) என்ற பாடல் மிகவும் பிரசித்தம். தாளச்சொற்கட்டுகளும் பாடலமைப்புகளும் இவரின் இசைப்புலமையை வெளிப்படுத்தும். இவர் பாடல்களில் 'பாபவிநாச' என்ற முத்திரை இடம் பெறும்.

### கனம் கிருஷ்ணய்யர்

இவர் தமிழிசை வளர்த்தவர்களில் தனியிடம் பெறுகிருர். சங்கீத மார்க்கங்களாகிற கனம், நயம், தேசிகம் என்னும் மூவகை மார்க்கங்களுள் இவர் கனம் பாடுவதில் வல்லவர்.

பொப்பிலி கேசவையா என்ற கனம் பாடுவதில் வல்ல கலைஞர், தஞ்சை அரசவைக்கு வந்து தன் திறமையைக் காட்டினர். தஞ்சை அரசருக்கு தன்னுடைய சபையிலும் அம்மாதிரியான திறமை கொண்டவர் இருக்கவேண்டுமென்று பிரியப்பட்டார் அதற்கு எந்த வித்வான் முன்வருகிருர் என்று தன் சபையில் இருந்த இசைக் கலைஞர்களைக் கேட்டார். கிருஷ்ணய்யர் ஒருவர் மட்டுமே முன்வந்ததுடன் பொப்பிலி கேசவையாவே வியக்குமளவிற்குத் தேர்ச்சி பெற்ருர். கிருஷ்ணய்யர் அதுமுதல் கனம் கிருஷ்ணய்யரானுர்.

'நித்திரையில் சொப்பனத்தில்' (பந்துவராளி) 'வேலவரே உம்மைத்தேடி' (பைரவி) என்ற பதங்களும், 'பாரெங்கும் பார்த்தாலும்' (கல்யாணி) என்ற திருக்குடந்தைசாரங்கபாணி பெருமான் மீது இயற்றியுள்ள பாடல்களும் மிகப்பிரசித்தம்.

உடையார்பாளையம் ஜமீந்தார் இவரை ஆதரித்துவந்ததால் முத்துக்குமார என்ற முத்திரையை வைத்துப் பாடல்கள் இயற்றியதாகத் தெரிகிறது. இவர் மகான் தியாகராஜரைக் கண்டு அவருடைய அருளும் பெற்றதாகத் தெரிகிறது.

### ஆனை ஐயா :

ஆனை ஐயா – ஐயாவையா என்ற இரண்டு சகோதரர்கள். இவர்கள் மகா வைத்ய நாத ஐயரவர்களின் உறவினர்கள் என்றும் கூறுவர். இவர்கள் பிறந்த ஊரான வையச்சேரியின் இறைவனை அகஸ்தீஸ்வரனும், மங்களாம்பிகை இவர்கள் பாடல்களில் இடம் பெறுவதோடு, ''உமாதாஸ' என்ற முத்திரையும் இருக்கும். இவர்கள் இணைந்துப் பாடல்களைப் புனைந்தார்களா அல்லது தனித்தனியே இயற்றினர்களா என்பது சரிவரத் தெரியவில்லை. இவருடைய தமிழ்ப்பாடல்கள் சில அபிநயத்திற்கு ஏற்றதாகக் கருதப்பட்டவை.

### கோபாலகிருஷ்ண பாரதியார்

நரிமணம் என்ற கிராமம் தற்காலத்தில் 'எண்ணை மணமாக நின்ருலும் — முற்காலத்தில் இசைமணம் நிறைந்தாக இருந்தது. இவர் கனம் கிருஷ்ணய்யரிடம் இசை பயின்றிருக்கிருர். இவர் இராமதாஸ் என்பவரிடம் ஹிந்துஸ்தான் இசையும் பயின்றவர் ஆனைதாண்டவபுரம் அண்ணு ஐயர் இவரை ஆதரித்ததோடு 'பாரதி' என்ற பெயரையும் சூட்டியதாகவும் கூறப்படுகிறது.

மகான் தியாகய்யரும், கோபாலகிருஷ்ண பாரதியாரும் சந்தித்த பொழுது உருவானது ஆபோகி ராகப் பாடல்களான முறையே 'மனஸ நில்ப சக்தி, 'சபாபதிக்கு வேறு தெய்வம்' என்பவை.

இருவரும் தியாகய்யரைப் போன்று பஞ்சரத்தினக் கீர்த்தனைகள் இயற்றியுள்ளார்.

இராமலிங்க ஸ்வாமிகள், தமிழ் வித்வான் மீனுட்சிசுந்தரம்பிள்ளையவர்கள், மாயூரம் வேதநாயகம் பிள்ளை முதலியோர் இவரைப் பாராட்டியிருக்கின்றனர். ஸ்ரீராமஸ்வாமி சிவனும் அவருடைய சகோதரர் ஸ்ரீ மகாவைத்யநாத

சிவனும் இவருடைய கீர்த்தனைகளை ஆர்வமுடன் கேட்டனர்.

தமிழ்த்தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் இவரது மாணக்கர்.

நந்தனர் சரித்திரக் கீர்த்தனம், திருநீலகண்ட நாயனர் சரித்திரம், காரைக்காலம்மையார் சரித்திரம் மற்றும் பல லாவணி, கும்மி முதலியவைகளும் இயற்றியுள்ளார்

இவர் பிரம்மசாரியாகவே வாழ்ந்தவர்.

### சியாமா சாஸ்திரிகள், முத்துஸாமி தீக்ஷிதர்

இவர்களும் சில தமிழ் கீர்த்தனைகள் செய்திருப்பதாகக் கூறுகின்றனர். 'எந்நேரமும்' என்ற தமிழ்பாடல் சியாமா சாஸ்திரிகள் இயற்றியதாகக் கூறுகின்றனர் கௌளிபந்து ராகத்தில் 'தருணமிதம்மா' என்ற பாடலை இப்போது மேடைகளில் கேட்கலாம். முத்துஸ்வாமி தீக்ஷிதர் மணிப்ரவாளத்தில் (முத்தும் பவழமென) தமிழ் வடமொழி இணைந்த பாடல் புனைந்திருக்கிருர். சங்கீத மும்மூர்த்திகளில் சேர்ந்தவர்கள்.

### மாயூரம் வேதநாயகம் பிள்ளை :

இவர் பிறப்பால் தீவிர கத்தோலிக்க கிறிஸ்துவர். ஆனல் தன் உள்ளத்தால், உடலால், ஸர்வ சமய போதகர். திருவாவடுதுறை மகா சந்நிதானம் இவரிடம் பேரன்பு கொண்டிருந்தார். தமிழிலக்கியம் இவரை நாவல்களின் தந்தையென்று அழைக்கிறது. பிரதாப முதலியார் சரித்திரம் படிக்காதவர் எவர்! இவர் முதலில் ஏடுகள் கோப்பாளராகப் பணிபுரிந்தார். அந்த வேலை சிலபொருமைக்காரர்களின் சூழ்ச்சியால் போயிற்று. இவர் (முன்சீப்) சட்டம் படித்துத் தேர்ந்தார். இவருக்கு மாயூரம் முனிசீப்பாக வேலை கிடைத்தது. நியாயம், நேர்மை, நீதி முதலியவற்றினின்று சற்றும் விலகாமல் பாரபட்சமற்ற தீர்ப்புகள் வழங்கினர்.

சர்வ சமய கீர்த்தனைகள், திருவருள்மாலை திருவருள் அந்தாதி, முதலியவை இவருடைய புகழ் பரப்பும்.

### நீலகண்ட சிவன்

இவருடைய இயற்பெயர் சுப்ரமண்யன். துறவி. திருவனந்தபுரத்தில் பிறந்தவரான இவர் பத்மநாப சுவாமியின் அருள் பெற்று மடை திறந்தாற்போல் பாடல்கள் புனையத் தொடங்கினர். அது முதல் இவர் பெயர் 'நீலகண்டசிவன்' என ஆயிற்று. 'ஆனந்த நடமாடுவார் தில்லை' (பூர்வகல்யாணி) 'நவசித்தி பெற்ருலும்' (கரஹரப்ரியா), 'என்றைக்கு சிவகிருபை' (முகாரி), 'இகபரம்தரும் பெருமை' (சமாஸ்) முதலியவை இவருடைய சிறந்த பாடல்களில் சில.

### அச்சுத தாஸர்

சிறந்த இராமபக்தர். இவர் தாய்மொழி தெலுங்கு. ஆனலும் தமிழில் அநேகப் பாடல்கள் புனைந்திருக்கிருர். 'காணக் கிடைக்காத தங்கம்', 'பார்த்துக்கொண்டிருக்கிருன்' முதலியவைகள் இவர் இயற்றிய உருப்படிகள். துருவ சரித்திரம், ப்ரஹலாத சரித்திரம், சக்குபாய் சரித்திரம், அத்வைதக் கீர்த்தனைகள் என்று பல நூல்கள் இயற்றியிருக்கிருர்.

### ராமஸ்வாமி சிவன்
### மஹா வைத்யநாத சிவன்

இவர்களிருவரும் சகோதரர்கள். மும்மூர்த்திகளுக்குட்பட்டவர்கள் ராமஸ்வாமி சிவன் கந்த புராணக் கீர்த்தனைகள், பிரபந்தங்கள் இயற்றியிருக்கிருர். இவரின் கீர்த்தனைகளில் — தமிழின் சொற்சிறப்பும், இசையின் வடிவ எழிலும் ஒருங்குசேர ரஸிகர்களைப் பிரமிக்க வைக்கும்.

ராம்ஸ்வாமி சிவன் 'குஹதாஸ' என்ற முத்திரையை வைத்திருக்கிருர். மஹா வைத்யநாத சிவனே 72 மேளகர்த்தா ராகமாலிகையைச் செய்திருக்கிருர்.

### கவி குஞ்சர பாரதியார்

சங்கீத மும்மூர்த்திகளின் சம காலத்தவர். நாட்டிய நாடகமான அழகர் குறவஞ்சியை இயற்றியவர். பக்தியின் பக்குவச் செறிவையும், இலக்கியச் சிறப்பையும் காட்டுபவை

இவர் பாடல்கள் இவருடைய கந்தபுராணக் கீர்த்தனைகளும், பேரின்பக் கீர்த்தனைகளும் இவருடைய இசைப் புலமையை வெளிப்படுத்து கின்றன. 'இவன் யாரோ அறியேன்' (காம்போதி) புகழ்பெற்ற பாடல்.

## மழவை சிதம்பர பாரதியார்

தமிழுக்கும் இசைக்கும் பெருமைதரும் குலத்தைச் சார்ந்தவர். இவருடைய பெரிய புராணக் கீர்த்தனைகள், அநேக தெய்வங்கள் மீதும், தேவதைகள் மீதும், பாடல்களும், கும்மி போன்ற ஆடல் இசைகளும் செய்திருக்கிறார். இவர் ஹிந்துஸ்தானி, மராத்திய இசைமுறைகளை அறிந்தவர். இவருடைய படைப்புகள் ராகபாவத்தை தெளிவுற வெளிப்படுத்தும்.

## துரைஸாமி அய்யர்

'இன்னும் பாராமுகம் ஏனோ' (பேகடா) என்ற பிரசித்தி பெற்ற பாடலை இயற்றியவர் துரைஸாமி அய்யர். 'அருள் கொடுப்பான், பொருள் கொடுப்பான்' (சுருட்டி) அவருடைய இசைத் திறனுக்கு எடுத்துக்காட்டு. பழனி முருகனிடம் ஆழ்ந்த பக்தியுடையவர். ஆகவே இவரின் பாடல்களின் நாயகன் முருகனே இருப்பான்.

## அண்ணாமலை ரெட்டியார்

காவடிச்சிந்து என்ற தனி நடையை பிரபலப் படுத்தியவர் அண்ணாமலைரெட்டியார். நாட்டுப் பாடல் முறையை பிரதிபலிக்கும் இந்தப் பாக்களில் ஓசைநயம், மனதை நெகிழவைக்கும். இசை, தாளக்கட்டு, முதலியவை மெய்சிலிர்க்க வைக்கும். ஆண்டவன் முருகனுக்கு காவடி எடுக்கும் போது பாடும் பாடல்களாகும். பக்தியும், தத்துவமும் ஒன்றோடொன்று பின்னிக் கொண்டு நிற்பது பிரமிப்பூட்டும்.

## இராமலிங்க அடிகளார்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பெரும் புலவர். இவரின் துறவு வாழ்க்கை சிறுவயதிலே துவங்கியது. பற்றற்ற இல்வாழ்க்கை இவருடையது. இவர் ஆறு திருமுறைகளில்பாடல்கள் இயற்றியிருக்கிறார். இறைவனை அருட் பெருஞ்சோதியாகக்கண்டவர், உணர்வினை சுத்த சமரச சன்மார்க்கமாக கொண்டவர். செய்கையினால் ஜீவகாருண்ய உயிர்க்கொள்கையில் உயர்ந்தவர். பதிகம், மாலை, உலா, கண்ணிகள் என பலவகைப் பாக்களைப் பாடியுள்ளார். இந்த அருட்ஜோதியைப் பெருமையுடன் பேணிப் பணிந்துவருகின்றனர், பொள்ளாச்சிப் பெருமக்கள்.

## சுப்பராம அய்யர்

வைத்தீஸ்வரன் கோயில் சுப்பராம அய்யர் என்று அறியப்பட்டவர். தமிழறிஞர். சிறந்த இசைக் கலைஞர். உயர்ந்த பாடலாசிரியர். இவரின் ஸ்வர ஸாஹித்ய அமைப்புகள் கேட்பவரின் மனதில் கிளர்ச்சியை ஏற்படுத்தும். அநேகபதங்கள் செய்துள்ளார். 'எத்தனை சொன்னாலும்' (காவேரி) 'பதறி வருகுது உருகுது (காம்போதி) தத்தைமொழியாள்' (கல்யாணி) முதலியவைஇவரின் பிரசித்திபெற்ற பாடல்கள்.

## லக்ஷ்மணப் பிள்ளை

இசைக்குப் பெருமை சேர்த்த பேரறிஞர். தமிழ்மொழியின் அழகையும் வடமொழி வளமையும் பக்தியுடன் கூடிய தத்துவ விசாரணைகளையும் இவரின் பாடல்களில் காணலாம். 'நின்நாமம் உச்சரித்தால்' (நீலாம்பரி) 'அன்பின் வடிவமே கீதம்' (கேதாரம்) முதலியவை இவருடைய திறமையை விளக்கும்.

## கோடீஸ்வர அய்யர்

கவி குஞ்சர பாரதியின் பெண்வழிப்பேரர். இராமநாதபுரம் பூச்சி ஸ்ரீனிவாஸ அய்யங்காரின் சீடர். இவருடைய 'கந்த கானாம்ருதம்' பாடல்கள் எல்லோர் செவியிலும் அமுதமாகப் பொழியும். இவரும் 72மேளகர்த்தா ராகங்களில் ராகமாலிகையும், பாடல்களில் ராகமுத்திரையையும் வைத்திருக்கிறார்.

## சுப்பராம தீக்ஷிதர்

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான ஸ்ரீமுத்துஸாமி தீக்ஷிதரின் சகோதரரான பாலுஸ்வாமி தீக்ஷிதரின் பெண்வழிப்பேரனும்,

ஸ்வீகாரப் புதல்வரும் ஆவார். 'ஸம்ரதாய ப்ரதர்சனி' என்ற நூலை இயற்றியிருக்கிறார். இவர் நாட்டியத்திற்கு 'பயன்படக் கூடிய சௌக வர்ணங்களும்' பல பாடல்களும் இயற்றியிருக்கிறார். இவருடைய கீர்த்தனங்களில் உள்ள யதிப் ராஸங்கள், பத ப்ரயோகங்கள், ராக பாவங்களும், ஸ்வர ஸஞ்சாரங்களும் பரம்பரைப் பெருமையைப் புலப்படுத்தும்.

### திருவையாறு பஞ்சநாத ஐயர்

'ஆரபிமானம் வைத்தென்னை ஆதரிப்பாய்' என்ற ராகமாலிகையில் இவரின் சிறப்பு பரிமளிக்கும். இவருடைய இசை ஞானமும், மொழி வளமையும் இவர் பாடல்களில் பிரதிபலிக்கும்.

பட்டினம் ஸுப்ரமண்ய அய்யரின் சிஷ்ய பரம்பரையில், பூச்சி ஸ்ரீனிவாஸ அய்யங்கார், மைசூர் வாஸுதேவாசாரியார், டைகர் வரதாசாரியார் போன்ற பெரும் இசைக்கலை வல்லுனர்கள் இடம் பெறுகின்றனர். இவர்கள் அநேக பதங்கள் தில்லாணக்கள், வர்ணங்கள் இயற்றியிருக்கின்றனர். 'அன்னமே' (ஆரபி வர்ணம்) டைகரினால் இயற்றப்பட்டது. 'கருணைக்கடலே' (கல்யாணி) யும் அவருடையதே இவர்களுடைய இசை சேவை புகழ் எனும் பெருமைக்கும் மேற்பட்டது.

### மகாகவி சுப்ரமணிய பாரதியார்

பத்தொன்பதாம் நூற்றுண்டையும் இருபதாம் நூற்றுண்டையும் இணைத்து, மொழி, தேசப்பற்று, நாட்டுப்பற்று, இறைப்பற்று இசைக்கலை, கவிதை நயம், முதலிய எல்லா வகைகளிலும் பெருமை சேர்த்தவர். மக்கள் நலம், தேசபக்தி, இவைகளே இவருடைய கவிதைகளில், பாடல்களில் இரத்தக்குழாய்களும் சுவாசக்குழல்களும் ஆகும். இவருடைய வடமொழி, தென்மொழிப்புலமை இவர் கவிதைகளில் சுடர்விடும். இவருடைய கவிதைகள் இசை, நாட்டிய, நாடக துணுக்குகளுடன் முத்தமிழ் முழக்கும்.

### தேசிக விநாயகம் பிள்ளை

தமிழ்க் கவிதைகளில் குழந்தைகளுக்கு அருமையான பாடல்களை வகுத்துக் கொடுத்தவர். தேசியப் போராட்டத்திலும் தேச சேவையிலும் முன்னணியில் நின்றவர். 'மலரும் மாலையும்' என்ற இவரது தொகுப்பு இசை, கவிதை என்பவற்றிற்கு ஒரு எடுத்துக்காட்டு.

### நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை

'கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது' என்று அழகாக அஹிம்ஸை போராட்டத்தை வளர்த்தவர். சிறந்த கவிஞர், தேச பக்தர். இவருடைய கவிதைகள் இசை வடிவில் சிறப்பிடம் பெற்றுள்ளன. இந்தக் கவிஞரின் நூற்றுண்டு சிறப்புடன் நடந்தது தற்போது.

### சங்கரதாஸ் ஸ்வாமிகள்

நாடகக்கலையின் தந்தை. மேடையில் நடிப்பதற்காகப் பல நாடகங்கள் எழுதி அதில் இசை அமைத்து பல பாடல்கள் எழுதியிருக்கிறார். எதுகை, மோனைகளுடன் இசைமரபு மேடை மரபு வழுவாமல் அழகான பாடல்களை மேடை நாடகங்களுக்காக எழுதியுள்ளார்.

### மதுரை மாரியப்ப சுவாமிகள்

சங்கரதாஸ் ஸ்வாமிகளின் சீடர். இவருக்கு பேசும், பாடும் திறன் முருகனருளால் கிடைத்ததாகச் சொல்லுவார்கள். இவரும் பல பாடல்கள் முருகன் மீது இயற்றியுள்ளார்.

### சரவணபவானந்தா

தமிழிசைக்குப் பெருமை சேர்க்க இவரது சாகித்யங்கள் உதவி செய்தன எனலாம் மிக அருமையான பல தமிழ்ப்பாடல்கள் இயற்றியிருக்கிறார்.

### ஹரிகேசநல்லூர் முத்தையா பாகவதர்

இருபதாம் நூற்றுண்டின் முதல்பாதிக்கு மேல்வாழ்ந்தவர். இவரும் பட்டினம் சுப்ரமண்ய அய்யரின் சீடரெனக் கூறலாம். இவர் விஜயநாகரி, கௌட மல்லார், வலஜி போன்ற

இராகங்களில் பாடல்கள் புனைந்ததுடன் புதுப் புது ராகங்களையும் உருவாக்கியிருக்கிறார். திருவாங்கூர், மைசூர் ஸமஸ்தானங்களில் ஆஸ்தான வித்வானாக இருந்ததுடன் மகாராஜா ஸ்வாதி திருநாள் கீர்த்தனங்களைத் தொகுத்து அளித்திருக்கிறார். 1933ஆம் ஆண்டு நடந்த தமிழ் அன்பர்கள் மகாநாட்டில், தமிழ்க் கீர்த்தனைகளைப் பாடி வியப்பூட்டினார். ''ஆண்டவன் தெரிசனமே'' ''ஆனந்தமான ஸங்கீதம்'' முதலியவை ஒரு சில. தன்னுடைய வாழ்க்கையை கலா க்ஷேத்ராவிலும் கழித்தார். சென்னை இசைக்கல்லூரி, மியூஸிக் அகாடமி முதலிய நிறுவனங்களில் இவரது தொண்டின் வண்ணமும் காணப்பெறும். 'ஹரிகேச' என்ற முத்திரை பாடல்களில் வரும்.

### மாயூரம் விசுவநாத சாஸ்திரி

முதன்முறையாக தெய்வத்திரு மறையாம் திருக்குறளுக்கு இசையமைத்துப்பாடல்களாகப் பாடியவர். இவர் முருகனிடம் ஆழ்ந்த பக்தியும், தேசபக்தியும் ஒருங்கே கண்டவர். பாரதம் சுதந்திரமடைந்தபோது 'ஜயதி ஜயதி பாரத மாதா' என்ற கீதம் நாலாதிசையிலும் ஒலித்தது. பாடல்கள் புனைவதில் இவர் எல்லா வகைகளையும் கையாண்டு இருக்கிறார். ஓடப் பாட்டுகள், நோட்டுகள், சுதந்திரகீதங்கள் என்று பல வகைப் பாடல்கள் புனைந்திருக்கிறார். ஹரிப்ரியா, லலிதமனோஹரி, ஸரஸானன ஸ்வரரஞ்சனி, ஸிந்துகௌரி, போன்ற சில ராகங்களை கையாண்டிருக்கிறார்.

'பாலா பஞ்சரத்னம்' என்று குழந்தைகளுக்காக மாதா, பிதா, குரு, சூரியன், சந்திரன் பேரில் ஒரு பாடல் புனைந்திருக்கிறார்.

'சிவனுக்கிளைய சேயே' (ஹேமவதி), 'மயில்வாஹன' (அம்ருதவர்ஷணி) 'ஸமரஸ பாவன' (பீம்ப்ளாஸ்) இவருடைய பிரசித்தி பெற்ற பாடல்கள்.

### தஞ்சாவூர் சங்கரய்யர்

அண்மையில் ராகத்தையும், ராக பாவத்தையும் பாடலில் அமைத்து கேட்பதற்கு அழகாக உள்ள கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். முதல்நிலை பாடகர்களும் தற்காலத்தில் பாடி வருகின்றனர்.

### சுத்தானந்த பாரதியார்

பன்மொழி வல்லவர். இன்றும் நம்மிடை இருந்து நல்லிசை பரப்பிவருகிறார். இவருடைய பாடல்களில் தேசீய உணர்வுகள் துள்ளும், பக்தி பரவசமளிக்கும், தத்துவம் சுடர்விடும். தெளிவான சிந்தனையையும் வளர்க்கும். 'சத்தியம் வெல்லும் தருமம் தழைக்கும், இல்லையென்பான் யாரடா?' (மோஹனம்) 'கண்ணெடுத்தாகிலும் காணீரோ' (ஸிம்மேந்திரமதியம்) 'எப்படிப் பாடினரோ' (கர்நாடகதேவகாந்தாரி) 'ஆனந்த நடன மாடினாள்' (காம்போதி) இவரின் பிரபல பாடல்கள்.

### பாபநாசம் சிவன்

போலகம் ராமையா என்ற பாபநாசம் சிவன் தமிழில் கீர்த்தனைகள் செய்தவர்களுள் மிகவும் பிரபலமானவர். இவரின் பலபாடல்கள் திரைப்படங்களில் இடம் பெற்றிருப்பதுடன், இவரும் சிலபடங்களில் நடித்துள்ளார். இவருடைய பாடல்களில் சொல்லழகும், இசை வடிவமும், பொருளழகும் - தாளக்கட்டுடன் மிகச்சிறப்புடன் அமைந்திருக்கும். 'காணக் கண் கோடி வேண்டும்' (காம்போதி) 'காபாலீ' (மோகனம்) 'மா ரமணன்' (ஹிந்தோளம்) 'கார்த்திகேய காங்கேய' (தோடி) 'பராதிபரா' (வாசஸ்பதி) 'நானொரு விளையாட்டு பொம்மையா' (நவரஸகன்னடா) முதலியவை முன்னணி வித்வான்களால் பாடப் பெற்று வருகின்றன.

### நேரூர் ஸ்ரீனிவாஸாசாரியார்

தன்னுடைய பெயர் முத்திரையுடன் பல கீர்த்தனைகள் இயற்றியிருக்கிறார். ராக வடிவமும், இசைமரபும் இவரின் பாடல்களில் நன்றாக அமைந்திருக்கும்.

### ச. து. சுப்ரமண்ய யோகி

பாரதியாரைக் கவிதைப் போட்டியில் பின் தள்ளி முன் நின்றவர். பல பாடல்கள் இயற்றியதுடன், பல திரைப்படங்களுக்கு பாடலாசிரியராகவும் இயக்குனராகவும் இருந்திருக்கிறார்.

### ஸ்வர்ண வெங்கடேச தீக்ஷிதர்

தில்லை நடராஜனின் திருவருளை தன்னிடைக் கொண்டு எல்லையற்ற பக்திப்பெருக்கை வளர்க்கும் கீர்த்தனங்களை இயற்றியிருக்கிறார். இயற்றிக்கொண்டும் இருக்கிறார். நாட்டியத்திற்கான சில பாடல்களும் இயற்றியிருப்பதுடன் முன்னணி நாட்டியக் கலைஞர்களோடு கலந்து சில சாதனைகளும் செய்திருக்கிறார். இசைமேடைகளில் இவர் பாடல்கள் ஒலிக்கக் கேட்கலாம்.

### பெரியசாமித் தூரன்

தமிழில் சிறந்த கவிஞர். சிறந்த புலமையுடன் இசைப்பாடல்களை இயற்ற வல்லவர். இவருடைய பாடல்கள் சில நாட்டியக்கலைஞர்களால் மிக எழிலுடன் அபிநயிக்கப்பட்டு வருகிறது. 'ஸாமகானப்ரியே' (ஆனந்தபைரவி) 'என்னென்ன விளையாடல் அம்மா' (ராகமாலிகை) 'கலியுகவரதன் கண்கண்டதெய்வமாய்' (பிருந்தாவன சாரங்கா) முதலானவை பிரபலமான பாடல்கள்.

### சுத்த சத்வானந்தா

முன்னாட்களில் என். எஸ். சிதம்பரம் என்ற பெயரில் இவர் இயற்றிய பாடல்களை பல இசைக்கலைஞர்கள் மேடையேற்றியுள்ளனர். தற்போது சுத்தசத்வானந்தா என்ற பெயரில் மயிலையில் இருந்து கொண்டு இசைத்தமிழ் தொண்டு புரிந்து வருகிறார்.

### கீழ்வேளூர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை

பெரும் இசைக் கலைஞர். தியாகப்ரம்மத்திடம் மிகுந்த பக்தி. அவரை இதயத்தில் வைத்துக் கொண்டே தமிழ்ப் பாடல்கள் பல இயற்றியுள்ளார். இவருடைய தமிழ்க் கீர்த்தனைகள் இவருக்குப் புகழுடல் தந்துள்ளன.

### உடுமலை நாராயண கவி, பட்டுக்கோட்டை கலியாணசுந்தரம்

திரைப்படங்கள் இவர்கள் பெயரை கருத்தாழமும், புரட்சி எண்ணங்களும் கொண்ட இசைப்பாடல்கள் மூலம் மக்களிடையே விழிப்புணர்ச்சி ஏற்படுத்தியுள்ளன.

### பாரதிதாசன்

'பாவேந்தர்' என்றே பலராலும் போற்றப்பட்டவர். இவருடைய கவிதை நாடகங்கள் மிகவும் பிரசித்தி பெற்றவை. இவர் பாடல்களில் சொல்லழுத்தமும், பொருட்செறிவும், சிந்தனை வளமும், காணப்பெறும். பல பாடல்கள் திரைப்படங்களில் இடம் பெற்றுள்ளன. 'துன்பம் நேர்கையில்' (தேஷ்) பிரசித்தமான பாடல்.

### திருச்சி தியாகராஜன்

''தாமரைப்பூத்த தடாகமதில்'' என்ற பாடல் என்னேரமும் முழங்கிக்கொண்டு இவர் பெருமையை வெளிப்படுத்தியது. இதுபோல் இவரால் பலபாடல்கள் இயற்றப்பெற்றுள்ளன.

### மதுரை பாஸ்கர விஸ்வநாததாஸ்

அந்நியராட்சியில் 'வந்தேமாதரம்' என்று சொன்னாலே அடக்குமுறையும், அடிதடியும் நடமாடும் காலத்தில் தேச பக்தி எழுச்சியுடன் இசைமணக்கத் தமிழ்ப் பாடல்களைப் பாடியவர். இவர் பாடல்கள் இசைத்தட்டுக்களில் பல வித்வான்களால் பாடப்பெற்றுள்ளன.

### நாடகமணி எம். என். எம். பாவலர் மு. அருணாசலம்

நாடக உலகிலும் தமிழ் இலக்கிய உலகிலும் இவர்களுக்கு சிறப்பிடம் உண்டு. இவர்கள் முறையே நாடக, இசைக்கலைக்கும், இலக்கியத்திற்கும் ஆற்றிய தொண்டு ஏட்டிலடங்காது

### சூலமங்கலம் வைத்தியநாத பாகவதர்

இவர் கதா காலட்சேபம் செய்வதில் வல்லவர். கதா காலட்சேபத்திற்காகப் பல

சரிதங்கள் இயற்றியுள்ளார். அவைகளுக்கு ஏற்ற வகையில் பாடல்களும் இயற்றியுள்ளார். இவருடைய இசை நாடகங்கள் டி. கே. எஸ். போன்றவர்களால் மேடையேற்றப் பட்டிருக்கிறது.

### கோவை சுப்ரி என்னும் சுப்ரமண்யம்

சிறந்த தேசபக்தரும், தியாகியும் ஆவர். முருகனின் மீதுள்ள பக்தியினால் 'முருக கானம்' என்று முருகன் மீது பாடல்கள் இயற்றியிருக்கிறார்.

### பொன்னையா பிள்ளை

தஞ்சை நால்வரின் வழித் தோன்றல். பந்தணைநல்லூர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் உறவினர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் துவக்கப்பட்ட இசைக்கல்லூரியில் ஆசிரியராக சேர்ந்து குரல்வளம், மிருதங்கப்பகுதி ஆசிரியராகப் பணி ஆற்றினர். தன் முன்னோர்களான தஞ்சை நால்வரின் இசைப் பொக்கிஷத்தை தமிழுலகில் பரவச் செய்ததோடல்லாமல் இவரே பல ஜதி ஸ்வரங்களையும், தான வர்ணங்களையும் செய்திருக்கிறார். இருபதாம் நூற்றுண்டின் இசைமேதைகளில் இவரும் ஒருவர்.

### கல்கி கிருஷ்ணமூர்த்தி

''காற்றினிலே வரும் கீதம்'' தொடாத இதயமே இல்லை. 'மாலைப் பொழுதினிலே' மயங்காத மனிதனே இல்லை. கல்கி தமிழ் இலக்கிய உலகில் ஒரு துருவ நட்சத்திரம். இவர் தமிழிசைக்காகச் செய்த தொண்டு இவருக்கு இவரே ஈடு. இவருக்கில்லை அவனிமேல் இனி ஜோடி. திரைப்படங்களுக்கு வசனம் பாடல்கள் எழுதியிருக்கிறார். 'கல்கி' வகுத்துக் கொடுத்த வழியில் தமிழ் பத்திரிக்கையின் இலக்கியம் நடைபோடுகிறது. 'கல்கி'யே ஒரு தனியுகம்.

### கி. சு. கோபாலன்

இவரும் அநேக பாடல்கள் எழுதி இசைத் தட்டுகளில் வந்திருக்கின்றன. 'நித்திரையில் வந்து' ஒரு மனதைக் கவர்ந்த பாடல்.

### கண்ணதாசன்

தமிழிலக்கியம், திரைப்படம் இவைகளின் சுவையறிந்தவர்களுக்கு கண்ணதாசன் கற்கண்டு கவிஞனாகவும் — தனி மனிதனாகவும் தத்துவ ஞானியாகவும் - தனித்தனி கோணங்களில் பார்க்க முடிகிறது. பாடல்கள் நீர் வீழ்ச்சிபோல், தெளிவுடன் ருசியுடன், காதிற்கும் கருத்திற்கும் சுவையுடன் பெருகி வரும். இவருடைய இறையுணர்வுப் பாடல்கள் மனதை ஈர்க்கும். அவர் கடைசியில் இயற்றிய 'புல்லாங்குழல் தந்த மூங்கில்களே' என்ற பாடலை பாடாதவர் எவருமில்லை.

### எம். எம். தண்டபாணி தேசிகர்

தமிழிசைக்குப் புதுக்கவர்ச்சியும், புத்துணர்ச்சியும், அழகுமிளிர புதுமெருகும் கொடுத்தவர். 'ரத்னபுரி', ரதிபதிப்ரியா', 'வந்தனதாரிணி' முதலான பல புதிய அபூர்வ ராகங்கள் இவர் இசையிலே மக்களை மயக்கியது.

### கே. என். தண்டாயுதபாணிப் பிள்ளை

நடனத்தில் ஆர்வமும் ஈடுபாடும், ஈர்ப்பும் கொண்டவர்களுக்கு இவரைத் தெரியாமல் இருக்க முடியாது. இவருடைய வர்ணங்கள், தில்லானக்கள் சிந்தையை மகிழ்விக்கும் வகையில் இருக்கின்றன.

### கு. மா. பாலசுப்ரமண்யம்

சிறந்த பாடலாசிரியர். நாடகம், திரைப்படம், வானெலி முதலியவற்றில் இவர் பாடல்கள் மிகவும் பிரசித்தம். நாட்டியத்திற்கான வர்ணங்களும், பதங்களும் இயற்றியிருக்கிறார்.

### அம்புஜம் கிருஷ்ணு

இசை உலகில் இவருக்கு ஒரு தனிப்பட்ட மரியாதையும் மதிப்பும் உண்டு. பெரிய தொழில் நிறுவனத்தின் உரிமையாளரின் திருமதி என்ற தனிப்பட்ட மதிப்பையும் மீறி — இவருக்கு பெருமதிப்பை சேர்த்தன இவருடைய பாடல்கள். 'என்ன தவம் செய்தனை' 'சின்னச் சின்ன பாதம் வைத்து' என்ற பாடல்கள்

'பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்ற வழக்குச் சொல்லிற்கு எடுத்துக்காட்டு.

**சரோஜம் சீதாராமன்**

ஷிர்டி சாயிபாபாவின் மேலும், தனிப் பாடல்களும் பாடல்கள் இயற்றியுள்ளார்.

**டி. பட்டம்மாள்**

கண்ணனை ஆராதிப்பதில் இசைச்சுவை வளர்த்தவர். மாதவகீதம் என்ற தொகுப்பு ஜெயதேவரின் அஷ்டபதியை நினைவுபடுத்தும்.

**டாக்டர் பாலமுரளி கிருஷ்ணா**

'முரளி' முத்திரையுடன் அநேக பாடல்கள் தமிழிலும் இயற்றியுள்ளார். தஞ்சைப் பெருவுடையார்மேல் இவர் இயற்றிய பாடல் பிரசித்தம். இவர் தில்லானாக்களும் பாடல்களும் இடம் பெறாத நிகழ்ச்சிகளே இல்லையெனலாம்.

**கு. சா. கிருஷ்ணமூர்த்தி**

தமிழில் அநேக பாடல்கள் இயற்றியுள்ளதுடன் நாடகங்கள் மிகப் பிரபலமாயின. இவருடைய 'வாசஸ்பதி' வர்ணம் எல்லோரையும் கவர்ந்துவிடுகிறது.

**மதுரை ஜி. எஸ். மணி**

இசையுலகில் பல புதுமைகள் செய்து வருகிறார். இவர் திரைப்படங்களில் மணம் வீசும் அடிப்படை ராகங்கள் கர்நாடக சங்கீதத்தின் பெருமை என்ற வகையில் இளைய தலைமுறைக்கு இசையில் ஈடுபட வழிகள் வகுத்து வருகிறார். இவரும் அநேக தமிழ்ப் பாடல்கள் இயற்றியிருக்கிறார் நாட்டிய நிகழ்ச்சிகளில் இவை இடம்பெறுகின்றன.

**எம். டி. இராமநாதன்**

தன்னுடைய குருநாதரான டைகரின் மேல் பாடல்கள் இயற்றியுள்ளார். கலாக்ஷேத்ரா நிகழ்ச்சிகளில் இவரது இசைவண்ணம் ஒளி வீசும்.

**வாகீச கலாநிதி கி. வா. ஜகந்நாதன்**

'ஜோதி' என்ற பெயரில் அநேக பாடல்கள் இயற்றியிருக்கிறார்.

**உளுந்தூர்பேட்டை ஷண்முகம்**

'பார்த்தசாரதி உன் பாதமே துணை' என்று சாமா ராகத்தில் மறைந்த இசைமாமணி சீர்காழி கோவிந்தராஜன் பாடும்போது உருகாத மனமே இல்லை. இவரும் பிரமிக்கத் தக்க சொற் கோர்வைகளுடன் அழகான பாடல்கள் இயற்றியுள்ளார்.

**டி. வி. கோபாலகிருஷ்ணன்**
**லால்குடி ஜெயராமன்**
**வழுவூர் ராமையா பிள்ளை**

போன்ற இசை, நடன மேதைகளும் பல வர்ணங்கள், தில்லானாக்கள் இயற்றியுள்ளனர்.

இன்னும் இதுபோல் எத்தனையோ தமிழிசைப் பாடலாசிரியர்கள் இருந்திருக்கின்றனர் இருக்கின்றனர், இருக்கவும் போகின்றனர். திரைப்பட இசைக்கலைஞர்கள் பலர் சுவைமிக்க பாடல்களை இயற்றியுள்ளனர் வளமான இசையுலகில்.

பதினெட்டாம் நூற்றாண்டின் துவக்கத்திலிருந்து தமிழிசையின் பொற்காலம். 'தமிழும் இசையுமென' இணைந்து வளர்ந்து கொண்டிருக்கின்றது. இக்காலத்தில் தான் மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, தியாகராசச் செட்டியார், தமிழ்த்தாத்தா உ. வே. சாமிநாதய்யர், முதலியோர் பல சைவ சமய ஆதீனங்களின் ஆதரவுடனும், இசைவுடனும் இசையையும், தமிழையும் வளர்த்தனர்.

மும்மூர்த்திகளான ஸ்ரீ தியாகராஜரும், ஸ்ரீ முத்துஸாமி தீக்ஷிதரும் ஸ்ரீ சாமா சாஸ்திரிகளும் தெலுங்கிலும், வடமொழியிலும் பாடல்கள் புனைந்த போதிலும் - இவர்கள் தமிழ் நாட்டிலே பிறந்து இசை வளர்த்து பெருமை சேர்த்தவர் எனலாம். இதனால் தமிழ் மண்ணின் பெருமை புலனாகும். உலகம் வியக்க மேளகர்த்தா ராக சக்கரங்களையும், இசை இலக்

கணங்களையும் வகுத்த ஸ்ரீ வேங்கடமகி என்னும் பெரியாரும் அவரின் சிறந்த நூலான 'சதுர் தண்டி பிரகாசிகையும்' தமிழ்நாட்டின் பொக்கி ஷங்கள் எனப் பெருமிதம் கொள்ளலாம். அவரைத் தொடர்ந்து ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதரின் சங்கீத சம்ப்ரதாய ப்ரதர்சினி – தமிழ்நாட்டில் உருவான நூல்கள்.

இவர்களுக்கு முன்னும் பின்னும் இசை வளர்த்த பெரியோர்கள் இருந்திருக்கின்றனர், இருக்கின்றனர், இருக்கப்போகின்றனர், நம் கவின்மிகு தமிழ்நாட்டில். இசை விஞ்ஞானி களாகத் திகழ்ந்த, இசைப்பேரறிஞராகச் சுடர் விட்ட திரு. விபுலானந்த அடிகள், பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி, டாக்டர் எஸ் ராமனுதன் முதலானவர்களின் இசையுலகம் என்றுமே மறவாது. மறக்கவும் கூடாது.

விபுலானந்த அடிகள் பல ஆராய்ச்சிகள் செய்து வெளியிட்ட யாழ்நூல் கரந்தைத் தமிழ் சங்கத்தினரால் வெளியிடப்பட்டது.

வயிற்றுப்பசிக்கு கஸ்தூரி, கோரோஜனை விற்றும், மனப்பசிக்கு இசை வளர்த்தும் பெருமை கண்ட தஞ்சை டாக்டர் மூ. ஆபிரகாம் பண்டிதரின் இசைப் பெருமையும் அவரின் நூலான ''கர்ணாமிருத சாகரமும்'' தமிழ் இசைக்கே உரித்தான சொத்து.

பேராசிரியர் சாம்பமூர்த்தியோ இசைக் கலைக் களஞ்சியமாகத் திகழ்ந்தவர்.

தமிழிசைக்குப் பேரொளி கூட்டியவர் டாக்டர் எஸ். ராமனுதன். அவர் செய்த தமிழ்ப்பண் ஆராய்ச்சிகள் அநேகம். பண்டைய, இன்றைய ராகங்களின் ஒற்றுமை வேற்றுமைகளை தெளிவுபடுத்தினர். 'சிலப்பதிகார இசை' என்ற ஆய்வு நூலை இயற்றியுள்ளார்.

இக்கட்டுரையில் இன்னும் எவ்வளவோ தமிழ் இசை வளர்த்த பெரியோர்கள் விடுபட்டுப் போயிருக்கலாம். அதற்கு அறிந்தவர்கள் பிறர்க்கு அறிவிக்காததாலும், வேண்டிய குறிப்புகளும், செய்திகளும் தொடர்ச்சியாக கிடைக்காததே காரணம்.

மாடுமேய்க்கும் கண்ணே — நீ
போகவேண்டாம் சொன்னேன்
காய்ச்சின பாலும் தரேன்
கற்கண்டு வெண்ணை தரேன் — என்ற

குழந்தைப்பருவத்தில் கற்ற பாடல் பசுமையாக நினைவிலிருந்தாலும் அதை இயற்றிய ஆசிரியரை அறிந்தவர் யார்? இதுபோல் வழி யாய் வழியாய் வந்துள்ள மழலை இசையின் ஆசிரியர்கள் யார்? என்ற எண்ண அலைகள் எழுந்த போதிலும் தமிழிசையைப் பரப்ப பல பெரியோர் தங்கள் வாழ்க்கையை அர்ப் பணித்துள்ளனர், அர்ப்பணித்துக்கொண்டிருக் கின்றனர், அர்ப்பணிப்பர் என்ற நம்பிக்கை ஜோதியின் பேரொளியில் மனம் பெருமிதம் கொள்கிறது. இதயம் துள்ளுகிறது.

தேன் சிந்தும் தமிழிசையின் சுவைகண்டார்
வான் பொருந்தும் நெறிகண்டார்.

# A Lyrical Tribute Made about the Activities of Pollachi Tamil Isai Sangam

**P**ersuasive, **P**ertinacious and **P**eremptory
**O**bjective, **O**bliging and **O**bvious
**L**imitless, **L**iking and **L**ife-like
**L**impid, **L**ion-hearted and **L**istful
**A**spiring, **A**ssertive and **A**ssiduous
**C**hoosery, **C**lean and **C**ogent
**H**appy, **H**ardy and **H**earty
**I**mpeccable, **I**mpersonal and **I**mpressive

**T**aintless, **T**actful and **T**aciturn
**A**dorable. **A**dmirable and **A**dventurous
**M**erciful, **M**eaningful and **M**eritorious
**I**nspiring, **I**nstinctive and **I**nsuperable
**L**ively, **L**eading and **L**iberal

**I**dealistic, **I**lluminative and **I**mmaculate
**S**elective, **S**elf-opinionated and **S**ensational
**A**pprehensive, **A**rdent and **A**stounding
**I**maginative, **I**mpregnable and **I**mposing

**S**elf-less, **S**erene and **S**ignificative
**A**ffable, **A**ffluent and **A**djustable
**N**aturalistic, **N**egotiable and **N**imble
**G**orgeous, **G**raceful and **G**rateful
**A**udacious, **A**ugmentative and **A**ttractive
**M**eticulous, **M**agnanimous and **M**indful

**Composed by Dr. K L. Raman,**
Asst. Secretary, Tamilnadu Eyal Isai Nataka Manram, Madras - 600 028



தில்லைராஜன், சத்யா
''வச்ச குறி தப்பாது''
— நாடகம்



கீதாஞ்சலி வழங்கும்
டைப்பிஸ்ட் கோபு தேடுவது
''யார் வீட்டு ரோஜா?'' — நாடகம்





ஜூனியர் பாலய்யா காண்பது
''கனவுப் பூக்கள்''
— நாடகம்



டெல்லி கணேஷ், ஸ்ரீலேகா நடித்த
''மாங்கல்யம் மனசு போல''
— நாடகக் காட்சி



அனுஷா கிரியேசன்ஸ்
செந்தாமரை நடித்த
''புகையே இல்லாத நெருப்பு''



மாலியின் ''பிறந்த கதை சொல்லவா''
நாடகத்தில்
ஜான்சி ராணி நடிக்கும் காட்சி





''வெள்ளைக் குயில்'' நாடகத்தில்
கலைமாமணி V. கோபாலகிருஷ்ணன்,
ராஜாராம் ஆகியோர்



நாடகப்பண்ணை இரா. பழனிச்சாமியின்
''காவிய நாயகி''
நாடகக் காட்சி

# பொள்ளாச்சி தமிழிசைச் சங்கத்தின்
# 500வது சிறப்பு நிகழ்ச்சி விழா



பொள்ளாச்சி தமிழிசைச் சங்கத்தின் 500வது சிறப்பு நிகழ்ச்சியில்
பேராசிரியர் திரு. ப. நமச்சிவாயம் குணச்சித்திர நடிகர் டெல்லி கணேஷ்க்கு
பொன்னுடை போர்த்தி பரிசு வழங்கும் காட்சி.



சங்கத்தின் 500வது சிறப்பு நிகழ்ச்சியில்
டாக்டர் சிற்பி அவர்கட்கு பேராசிரியர் திரு. ப. நமச்சிவாயம்
பொன்னுடை போர்த்துகிருர்.



500 நிகழ்ச்சிகள் நடத்தி வெற்றி கண்ட செயலாளர் Rm. V. வெள்ளையப்பனுக்கு
விஞயகர் கலை மன்றத்தின் சார்பில் டாக்டர் சிற்பி பரிசு வழங்குதல்
நடுவில் விஞயகர் கலை மன்ற காந்தி.



500 நிகழ்ச்சிகளை சிறப்பாக நடத்தி வெற்றி கண்ட
பொள்ளாச்சி தமிழிசைச் சங்க செயலாளர் திரு. Rm. V. வெள்ளையப்பன் அவர்கட்கு
விஞயகர் கலை மன்றத்தின் சார்பில் பொன்னுடை போர்த்தி
பாராட்டுவது நடிகர் டெல்லி கணேஷ்.



# தஞ்சை மன்னன் இரகுநாத நாயகனின் அரசவை இசை-நாட்டிய மரபுகள்

டாக்டர் **முட்நூரி சங்கமேசம்,**
எம். ஏ., பி எச்டி., டி. லிட்.,
திருவேங்கடவன் கலைக்கல்லூரி இந்தித் துறை (ஓய்வு)
திருப்பதி (ஆந்திரப் பிரதேசம்)

தஞ்சையில் தழைத்தோங்கிய தென் பிரிவுத்தெலுங்கு இலக்கியத்தில் இசை மற்றும் நாட்டியம் பற்றிய புராண நிகழ்ச்சிகளைக் குறிக்கும் விவரங்களும் விரிவான வருணனைகளும் ஏராளமாகத் தென்படுகின்றன. கி பி 17 - ஆம் நூற்றாண்டில் தஞசையில் அரசு புரிந்த நாயக்க அரசர்களும், அவர்களுக்குப் பின்னர் வந்த மகாராஷ்டிர மன்னர்களும் இக் கலைகளில் பெரும் ஈடுபாடு கொண்டு, அவற்றின் பன்முக வளர்ச்சிக்கு, அவற்றின் தொன்முறை வடிவிலும் சரி, நாட்டுப்புற வடிவிலும் சரி, சிறப்பாகத் தொண்டு ஆற்றியுள்ளனர் அவர்கள் தங்கள் அவையின் கண் இக்கலைகள் நன்கு வளருவதற்கு ஊக்கமளித்ததோடு மட்டுமல்லாது தங்களுடைய சொந்த இலக்கிய மற்றும் இசைப் படைப்புகளினாலும் அவற்றைப் பெரிதும் வளப்படுத்தினர். 'இயட்சகானம்' எனப்படும். 'உபரூபக'த்திற்குச் சமமானதொரு நாட்டிய-நாடக வடிவினைத்தனிப்பட்டதொரு கவின் கலையாக அவர்கள் செம்மைப்படுத்தினர். அத்தகைய கலை நிகழ்ச்சிகள் அரசவையில் நாள்தோறும் நிகழ்ந்த வண்ணம் இருந்தன. தவிரவும், அம்மன்னர்கள் தங்கள் அவையில் கலைஞர் பலரை நிரந்தரமான முறையில் நியமித்து அவர்களுக்கும் பேராதரவு அளித்து வந்தனர்.

கி. பி. 1600-1633 ஆண்டுகளுக்கிடையே தஞ்சையை ஆண்ட இரகுநாதநாயகன் சிறந்த தொரு போர்வீரன், திறமையான ஆட்சியாளன், சமஸ்கிருதத்திலும், தெலுங்கிலும் புலமை மிகுந்தவன், கவி; அன்றியும், இசை, மற்றும் நாட்டியம் ஆகிய கலைகளில் தேர்ந்தவன். இயட்சகானங்கள் உள்ளிட்ட அவனுடைய இலக்கியப் படைப்புகளுள் இன்று நமக்குக் கிடைத்திருப்பது மூன்றே: '**நளசரித்திரம்**' (த்விபதம் என்னும் ஈரடிச் செய்யுளினால் ஆகியது). '**இராமாயணபத்ய காவ்யம்**, (நிறைவு பெறாதது) மற்றும் '**வால்மீகி சரித்திரபத்ய பிரபந்தம்**' (முழுமையாகக் கிடைத்திருப்பது) ஆகியவை மட்டுமே.

அம்மன்னன் இசைமற்றும்நாட்டியம்ஆகியவற்றில் தனக்கிருந்த பேரார்வம் காரணமாக, தனது நூல்கள் அனைத்திலும் இக்கலை மரபுகளைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறான். அவன் '**சங்கீத ஸுதா**' என்னும் இசை நூலையும் பல்வேறு நாட்டிய உருப்படிகளையும் தனது அவையினரைக் கொண்டு இயற்றுவித்ததுடன், தானே 'இரகுநாத மேளம்' எனத் தன் பெயரால் வழங்கப்பெறும் இசை வடிவினையும் இயற்றி உள்ளான். 'இராமானந்தம்' என்னும் தாளத்தையும் 'வினதாஸுதவாஹன, ஸ்ரீரமண' என்னும் தியாகராஜரின் பாடலில் இன்றும் நாம் கேட்டுவரும் 'ஜயந்தஸேனா' இராகத்தையும் தோற்றுவித்தவன் அவனே.

இரகுநாதநாயகன் '**இராமாயண காவ்யம்**' நூலில் பரதர், தத்திலர், மதங்கர் ஆகியோரின் நாட்டிய முறைகளில் துறைபோந்த நாட்டிய ஆசிரியர்கள் மற்றும் தொழில் முறை நாட்டிய இசைக்கலைஞர்கள், இக்கலைகளைக் கற்பதற்கும் கற்பிப்பதற்கும் பயில்வதற்கும் பயன்படும் 'சிரமகூடங்கள்' எனப்பெறும் பரந்தகலை மன்றங்கள் ஆகியவைபற்றிக் குறிப்பிட்டிருக்கிறான். '**வால்மீகி சரித்திர காவ்ய**' த்தில்

தேவருலகைச் சேர்ந்த ஆடல் நங்கையரான ரம்பைக்கும் ஊர்வசிக்கும் இடையே நிகழ்ந்த தொழில்முறைப் போட்டிக் குறித்த நிகழ்ச்சியினை விவரிக்கும்போது இக்கலைகளை விரிவாகவும் நுணுக்கத்துடனும் கூறும் வகையில் ஒரு முழு அத்தியாயமே அமைத்திருக்கிறான். நீண்டதாக அமைந்துள்ள இவ் விரிவான பகுதியைப் படித்தால் அம்மன்னனது காலத்தில் அரசவையிலே மட்டுமல்லாது வெளியேயும் மக்களிடையே இக்கலைகளின் வடிவம், இவை நிகழ்த்தப்பெற்றுவந்த முறை ஆகியவை குறித்துத்தெரிந்துகொள்ள முடியும். ஏனெனில் கவிகள் தம்மைச் சுற்றிக் காணப் படும் பிரத்தியட்ச வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கவனித்து அவற்றால் எழுச்சி பெற்று அவற்றையே தமது இலக்கிய கலைப்படைப்புகளுக்கு அடிப்படையாகக் கொள்கின்றனர்.

## வால்மீகி சரித்திரம்

மூன்றாவது காண்டத்தில் காணப்படும் விவரணத்தை இப்போது கவனிக்கலாம். வேடனாக இருந்து முனிவராக மாறிய வால்மீகி கடும் தவமியற்றி வருகிறார் சுவர்க்கத்தின் தலைவனாகிய இந்திரன், அத்தவத்தினால் தனது பதவிக்கு ஆபத்து வரக்கூடும் என அஞ்சி, தேவநாட்டிய மகளிரை அனுப்பி முனிவரின் தவத்தைக் கலைக்கத் திட்டமிடுகிறான் தவத்திலிருந்து முனிவரின்கவனத்தைத்திருப்பி புலனின்பங்களில் அவரை ஈடுபடச்செய்யும் பொருட்டு அவன் முதலில் ரம்பையே அதற்குத் தகுந்தவள் எனக்கருதி, அவளை அழைத்து வருமாறு ஏவலாளரைப் பணிக்கிறான் அவளும் இந்திரனின்ஆணைக்கிணங்க உடனே அவன் எதிரில் வந்து வணங்கி நிற்கின்றாள் இந்திரன் தனது திட்டத்தை அவளிடம் விளக்கிச்சொல்லுகிறான். அதைக் கேட்டவுடன் ரம்பை முதலில் மறுமொழி எதுவும் கூறாது சற்று நேரம் பேசாமலிருக்கிறாள். பிறகு அவள் நாட்டியத்தில் தனக்குள்ள தேர்ச்சியையும் இந்திரன் அண்மையில் தனக்கு விருது வழங்கியதையும் இந்திரனின் கலைமதிப்பீட்டுத் திறனையே பரிகசிக்கும் வகையில் குறை கூறிய ஊர்வசியைப் பற்றி அவனிடம் முறையிடுகிறாள் அதைக் கேட்ட இந்திரன், ஆணவத்துடன் பேசிய ஊர்வசியின் மீது சற்றே சினமுற்று அப்போதே அப்பிரச்னைக்கு முடிவு செய்யும் நோக்கில் அவளுக்குச் சொல்லி அனுப்புகிறான் எனினும், அவன் உள்ளத்தினுள்ளே, வால்மீகியின் தவத்தைக் கலைக்கும் தனது திட்டம் வெற்றிபெற ஊர்வசியையும் பயன் படுத்திக் கொள்ளலாமே என்னும் நினைவும் இழையோடுகிறது.

இந்திரனின் ஆணையினை அறிந்த சமயம், ஊர்வசி சிரம (கலைப்பயிற்சிக்) கூடத்தில் மாணவியருக்குச் சிக்கலான சில நாட்டிய வகைகளைத் தானே நாட்டியமாடிக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருக்கிறாள்.

தூதுவன் இந்திரனின் ஆணையினைத் தெரிவித்தவுடன், அவள் இந்திரனின் அவைக்குச் செல்வதற்கான உடையணிந்து ஒப்பனை செய்து கொள்ளுகிறாள். தனது நீண்ட கூந்தலை 'ஸாமு கொப்பு' கொண்டை (கூந்தலின் ஒரு பகுதியைக் கொண்டையாகவும் மறுபகுதியை அப்படியே விரித்து முன்புறமாகவும் போட்டுக் கொண்டிருக்கும் முறை;பாமா கலாபத்தில் சத்தியபாமை போட்டுக் கொண்டிருப்பது போன்றது) போட்டுக் கொள்கிறாள்; அவள் பெற்றிருக்கும் விருதுப் பதக்கங்கள் மிளிரும் உயர்ந்த மார்பகங்களை மறைக்கும் அழகிய கச்சு நிறத்திலும் தரத்திலும் அவள் கட்டிக் கொண்டிருக்கும் புடவைகேற்ற பொன் ஜரிகைக் கரையிட்ட மேலங்கி நீலமணிகள் இழைத்த கை வளையல்கள் மற்றும் சிலம்புகள் நறுமணச் சந்தனம் பூசிய மேனி; இரு மருங்கிலும் இரு பாங்கியருடன் அவள் இந்திரனின் அவைக்குப் புறப்படுகிறாள். இசை மற்றும் நாட்டியக் கலைகளில் தனக்குள்ள தேர்ச்சியினைக் கொண்டு, இந்திரனின் முன்பாக ரம்பையை எங்ஙனம் சிறுமைப்படுத்தலாம் என்பதை வழி நெடுகிலும் சிந்தித்துக் கொண்டே அவள் செல்கிறாள்.

அவை வணக்கத்திற்குப் பின் ரம்பையின் மீது அவளுக்கு ஏன் பொறாமை என இந்திரன் வினவுகிறான், அடக்கத்துடனேயே இசையிலும் நாட்டியத்திலும் சிறிதளவே தேர்ச்சியுடைய ரம்பைக்கு விருதுகள் வழங்கப்பட்டது

பற்றிக் குறை கூறி தனது உணர்ச்சிகளை வெளிப்படுத்துகிறாள்; ''தேவர்கோவே! உங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. இத்துணைக காலமாகத் தங்களது அவையில் மதிப்பிற்குரிய கலைச் செல்வியாக நான் இருக்கும் போது ரம்பைக்கு விருதுகளை வழங்கி அவளை எனக்குச் சமமாக நீங்கள் செய்தது எங்ஙனம்? 'தேசீ'க் கலையில் எனக்குள்ள தேர்ச்சியினை மெச்சி சிவபெருமானே பெரிய வைரம் பொதிந்த கச்சினையும் அபிநயத்திற்காக எனது தந்தையான நாராயணன் நீலக்கல் இழைத்த ஒரு ஜதை வளையல்களையும் பாட்டுத்திறனுக்காக நான்முகனும் சரஸ்வதியும் பொற்சேலையினையும் தாள அறிவிற்காக செல்வத்திற்கதிபதியான குபேரன் இரண்டு ஜய சாமரங்களையும் எனக்கு வழங்கியிருக்கிறார்கள் பெட்டி நிறையப் பரிசுகளும் விருதுகளும் என்னிடம் உள்ளன; ஆனாலும் அவற்றை அணிவதில் எனக்கு விருப்பமில்லை; ஏன் எனில் போற்றி மதிக்கப் பட்வேண்டியது கலையேயன்றிப் பரிசுகளும் விருதுகளும் அல்ல, எனது குழுவில் தாளம் இசைக்கும் பெண்ணிற்குக் கூடச் சமமாக இருக்க முடியாத ரம்பை நாட்டியத்தில் எனக்கு ஈடாக எங்ஙனம் எண்ணிக் கொள்ள முடியும்? மன்னிக்க வேண்டும், ரம்பையைக் போன்ற தகுதி எதுவுமில்லாத ஒரு நாட்டியக்காரிக்குத் தங்களைப் போன்றவர் விருது வழங்குவது ஒவ்வாத ஒரு செயல் அல்லவா? எவ்வாறாயினும், நாங்கள் இருவரும் இப்போது இங்கே இருக்கிறோம். எங்கள் இருவரின் கலைத் திறமையையும் வெளிப்படுத்தச் சொல்லி, எங்களது தேர்ச்சிகளுக்கிடையேயுள்ள வேறுபாட்டினை நீங்கள் ஏன் கண்டு கொள்ளக் கூடாது?''

அங்கனம் பேசிக்கொண்டே ஊர்வசி உணர்ச்சிவயப்பட்டுக் கோபமுற்று ரம்பையின் மேல்தாவி அவள் மேலங்கியை பிடித்திழுத்து அவளுக்கு கிடைத்த விருதினைப் புறக்கணித்து விடும்படி உரத்து சொல்லுகிறாள். அப்போது ரம்பை இந்திரனே தன்னைப் பாதுகாக்க வேண்டும் என முதலில் கூறி பின்னர் அமைதியடைந்து ஊர்வசியிடம் கலைஞர்களின் திறமையை மதிப்பிடுவதில் இந்திரனுக்குள்ள தகுதியினையே சந்தேகிக்குமளவிற்கு அவள் ஆணவம் மிகுந்திருப்பதாக இடித்துரைக்கிறாள். அடுத்து இருவரும் கலையில் தத்தமக்குள்ள தேர்ச்சியினையும் மற்றவருக்கிருக்கும் தேர்ச்சியின்மையினையும் குறிப்பிட்டு ஒருவரையொருவர் ஏசிக்கொள்கின்றனர். அவர்களது இந்த சொற்போர் 'சபதனீகலகம்' (சக்களத்திச் சண்டை) போன்றவற்றை விவரிக்கும் 'வாதப்பிரதிவாத' வகை லாஸ்ய நடனத்தை ஒத்திருக்கிறது.

ரம்பை ஊர்வசியை நோக்கி'' ஆதித்விதீயகம், அந்தரக்ரீடம், ஜயமங்களம், ஜகஜெம்பலீலா, சாச்சபுடம் சச்சச்சபுடம், ஷட்பிதாபுத்ரகம், வித்யாதரம், ரதிஹம்ஸ லீலா, ஸ்ரீரங்கம் ரங்கம் கங்காளம் கண்டகங்காளம், கோகிலப்ரிய, விலோகிதம், குடுக்க டெங்கி, த்ரிபங்கி, மட்டிகவிஜயம், நந்திநந்தனம், ஜயஸிம்ஹநந்தனம் போன்ற தாளங்களுள் ஏதாவதொன்றில் காலப்பிரமாணத்துடன் என்னோடு உன்னால் நாட்டியமாட முடியுமா? '' என அறை கூவும் குரலில் கூறிப் போட்டிக்கு அழைக்கிறாள். மேலும், ''பேரணி தண்டலாஸகம், ப்ரேங்கணம் மற்றும் குண்டலி போன்ற நான்கு மகாநாட்டியங்களின் எல்லாக்கூறுகளும் உனக்குத் தெரியுமா? 36 அங்கஹாரங்கள் தெரியுமா? நாட்டியம் செய்யும் போது ரஸ மற்றும் பாவதிருஷ்டிகள் எல்லாவற்றையும் உன்னால் வெளிப்படுத்த முடியுமா? '' என்றும் சாடுகிறாள்.

இங்கு நூலாசிரியனான இரகுநாதநாயகன், பண்டைய நூல்களில் பட்டியலிடப்பெற்ற தொன்மையான (மார்க்க) மற்றும் 'தேசீ' வகையிலான 108 (அஷ்டோத்தர) தாளங்களில் இருபத்திரண்டைக் குறிப்பிடுகிறான். இத் தாளங்கள் மாத்திரைக் கால அளவுகளைக் கொண்ட 35 சூளாதிதாளங்களைப் போலல்லாது, அட்சரகால அளவுகளுள் லகு, குரு, ப்லுதம், காகபாதம் என்பவற்றை அடிப் படையாகக் கொண்டு விளங்குகின்றன. எடுத்துக்காட்டாக ஷட்பிதாபுத்ரக' என்னும் மார்க்க தாளம்

தொடர்ச்சியாக 1 ப்லுதம் 1லகு, 1குரு, 1குரு, 1லகு, 1ப்லுதம் என்பனவற்றுடன் கூடியதாக அமைந்துள்ளது. ஸிம்ஹநந்தனம் 'என்பது ஆறு வெவ்வேறானதாளங்களாலான ஒரு முழுமையான தாளமாகும். 'டெங்கி' எனப்படும் 'தேசீ'த் தாளம் தொடர்ச்சியாக 1குரு, 1லகு, 1குரு ஆகியவற்றால் அமைந்தது. கி.பி. 15-ஆம் நூற்றாண்டிலிருந்து இத் தாளங்கள் தொடர்ந்து வழக்கில் இருப்பதாகத் தெரியவில்லை; எனினும் ஒருசிலர் மட்டுமே தங்களது புலமையினை அரசவைகளிலும் அறிஞர் கூட்டங்களிலும் வெளிப்படுத்துவதற்காகப் பயின்று வந்துள்ளனர் எனத்தெரிகிறது. மேலே குறிப்பிடப்பெற்ற நான்கு மகாநாட்டியங்களும் வெவ்வேறு வகையானவை; ஒவ்வொன்றும் அங்கங்கள் (உறுப்புகள்) பலவற்றாலாகியுள்ளது. எடுத்துக்காட்டாக, பேரணி நாட்டியத்தில் 'நிருத்தம்' 'கவிவரம்; 'கர்கரம் 'விகடம் மற்றும் கீதம்' ஆகிய ஐந்து அங்கங்கள் அமைந்துள்ளன. அங்கஹாரங்கள் ரஸதிருஷ்டிகள் மற்றும் பாவதிருஷ்டிகள் ஆகியவை நாட்டியம் பயில்வோர், அதில் ஈடுபாடுள்ளோர் ஒவ்வொருவருக்கும் நன்கு தெரிந்திருப்பதால் அவை பற்றி இங்கு விளக்குவது தேவையற்றதெனக் கருதி கைவிடப்பட்டது.

தனக்கு விடப்பட்ட சவாலுக்குப் பதில் கூறும் வகையில், ஊர்வசி முழுத்தன்னம்பிக்கையுடனும் அறிவின் காரணமாக எழுந்த நிமிர்வுடனும், சற்றே புன்முறுவலித்து, ரம்பையிடம்சொல்லுகிறாள்: "உன்னைப்பற்றி உயர்வாக எண்ணிக் கொள்ள வேண்டாம். உனது அறிவு' மேற்போக்கானது, ஆழமில்லாதது. எனவே, நீ பெற்ற விருதுகள் குறித்து எச்சரிக்கையாகவே இருந்து வரவும் 13 ஸம்யுக்தஹஸ்தங்கள்[1], 24 அஸம்யுக்தஹஸ்தங்கள்[2], 30 நிருத்தஹஸ்தங்கள்[3], 5 'வக்ஷஸ்'கள்[4], 5 'கடீ' நிலைகள்[5], 6 'ஸ்கந்த' நிலைகள்[6], 9 'கந்தர்நிலைகள்[7], 7 'ஜானு' நிலைகள்[8], 5 'பார்ச்வ' நிலைகள்[9], 10'பாஹு' நிலைகள்[10], 3'குக்ஷி' நிலைகள்[11], 6'பாத' நிலைகள்[12], 8 ஸ்தாயி திருஷ்டிகள்[13], 20 'ஸஞ்சாரி' மற்றும் 8 ரஸ திருஷ்டிகள்[14] ஆகியவைபற்றிய அறிமுகமாவது உனக்கு உண்டா? அவ்வளவு எதற்கு? 'ஏகதாளி'[15] என்பதையாவது ஒழுங்காக உன்னால் பாடமுடியுமா? முடியுமானால் வந்து பாடு, பிறகு உன் கலைத்திறமையைப் பற்றிப் பேசு. இல்லாவிட்டால், உனது விருதுகளைத் துறந்து விட்டு, அரசவையில் என் முன் தலை குனிந்து நில் - ,,

இங்கு நூலாசிரியர் ஹஸ்த முத்திரைகள், ஆங்கிக அபிநயங்கள் ஆகியவற்றின் முழுப் பட்டியலையும் தருகிறார். இவர் குறிப்பிட்டிருக்கும் அபிநயங்களிளின் எண்ணிக்கை, பண்டைய நூலாசிரியர்கள் எழுதிய எந்த நூலிலும் குறிப்பிடப்பட்டுள்ள எண்ணிக்கையுடன் ஒத்துப் போகவில்லை. சில அபிநயங்களுக்கு ஒரு நூலையும் வேறு சிலவற்றிற்கு வேறு ஒரு நூலையும் எடுத்துக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. எடுத்துக்காட்டாக, 'திருஷ்டி' (கண்ணசைவு) களைப் பொருத்தவரை பரதரின் நூலில் சொல்லப்பட்டிருப்பதற்கேற்ப அவை உள்ளன; ஆனால், தலையசைவுகளைப் பொருத்த வரை அவை சாரங்கதேவர் கூறியிருப்பதை ஒட்டி இருக்கின்றன. இதில் சொல்லப்பட்டிருக்கும் ஹஸ்தமுத்திரைகள் **'அபிநயதர்ப்பணம்'** நூலில் குறிப்பிட்டிருப்பதற்கேற்ப இல்லை; ஆனால், பரதர், சாரங்கதேவர் ஆகிய இருவரும் கூறியதை ஒத்துள்ளன. பரதர் 32 அங்கஹாரங்களையே குறிப்பிடுகிறார்; ஆனால் இரகுநாதநாயகனின் நூலில் அவற்றின் எண்ணிக்கை 36 எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதிலிருந்து, தஞ்சை அரசவை நாட்டியக் கலைஞர்கள் தங்களுக்குக் கிடைத்திருந்த

1 பிணையல் (இரட்டைக்கை), 2. பிண்டி (ஒற்றைக்கை), 3. எழிற்கை, 4. மார்பு நிலைகள், 5. இடுப்பு நிலைகள், 6. தோள் நிலைகள், 7. கழுத்து நிலைகள், 8. முழந்தாள் நிலைகள் (மண்டி), 9. பக்கவாட்டு நிலைகள், 10. கை நிலைகள், 11. வயிறு (உதர) நிலைகள். 12. பாத நிலைகள், 13. எண்வதிக்கோலம், 14. பிரதான மெய்ப்பாடுகளை வெளிப்படுத்தும்போது உடனுணர்ச்சிகளையும் சுவைகளையும் வெளிப்படுத்தும் பார்வைகள், 15. ஏக தாளத்தில் அமைந்தது

எல்லா நூல்களையும் ஆராய்ந்து, தங்களுக் கென்றே இவற்றைப் பற்றிய ஒரு தனிப் பட்டியலைத் தயாரித்திருப்பது தெரிகிறது.

இப்போது, நாம் மீண்டும் ஊர்வசி ரம்பை உரையாடலுக்கு வருவோம். ஊர்வசி யின் கடுஞ்சொற்களால் கோபமடைந்த ரம்பை, 81 'ஸ்தானக' நிலைகளையும் 10 'மண்டல' நிலைகளையும் (மண்டலம் என்பது இரண்டு நாட்டியக் கரணங்களி னாலாகியது) அவளைக் காண்பிக்கச் சொல்லு கிறாள். ஊர்வசி இதற்காக ரம்பையைக் கடிந்துகொண்டு, ரம்பை மட்டும் இந்திரனைப் புகழ்ந்து ஒரு 'தருவு' ஆடி, 108 கரணங்கள், 86 சாரீக்கள், அபிநயங்கள் ஆகியவற்றைக் காண்பித்தால் அவளைத் தனக்கு சரிசமமான வளாக ஏற்றுக்கொள்வதாகக் கூறுகிறாள். பின்னர், அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் பல்வகைக் குற்றச்சாட்டுகளுடன் ஏசிக்கொள் கின்றனர். அதன்பிறகு, அவர்கள் கானத்தில் தருஸஞ்சீவனி, ஆங்கிக அபிநயத்தில் கனகாங்கி, 'சப்த'த்தில் புஞ்சிகஸ்தலா, 'தேசீ' நாட்டியத்தில் க்ரதுசுல்கா போன்ற, இக்கலை யின் வெவ்வேறு கூறுகளில் தனித்தேர்ச்சி பெற்றிருக்கும் வானுலக நாட்டிய மகளிர் சிலரை உவமை காட்டி, ஒருவர்க்கொருவரு டைய திறமையைப் பற்றிக் குறை கூறிக் கொள்கின்றனர். இறுதியில், கைகளினாலும் கைமுட்டிகளினாலும் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு சண்டையிடுகின்றனர்.

இங்கு, நூலாசிரியர், தேவருலகில் காணப் படும் தனிவகைத் தேர்ச்சிகளைப்பற்றிக் குறிப்பிடுகிறார். ஆனால், வேறுசில ஆதாரங் களிலிருந்து, அவரது அவையிலேயே 'தருபதங்' களில் லோகநாயகி, 'கோப்பு'களில் கீரவாணி, 'ஜக்கிணி'யில் சசிரேகை, 'பதசாளீ'யில் ரூபவதி போன்ற அந்தந்தத்துறைகளில் வல்ல வர்களான பலர் இருந்தனர் என்பது நமக்குத் தெரிகிறது. இவையாவும் விசித்திரமான நாட்டிய வகைகள் ஆகும். 'தருபதம்' என்பது சிருங்காரபத நாட்டியம்; இதில் பாவங்கள் அல்லது மெய்ப்பாடுகள் ஹஸ்த முத்திரைகள் முதலியவற்றால் வெளிப்படுத்தப்படுகின்றன; 'கோப்பு' என்பது நாட்டியம் செய்யும்போது தாளகதிகளை மாற்றி ஆடுவதாகும்' 'பதசாளீ' எனப்படுவது பதஅபிநய நாட்டியம்; விரைவு மிகுந்த கதிகள் மற்றும் சொல்லுக்கட்டுகள் நிறைந்த மெட்டிற்கேற்ப, இருகைகளினாலும் மயில்தோகைக் கட்டுகளுடன் ஆடும் நாட்டியத்தின் பெயர் 'ஜக்கிணி'

ஊர்வசியும் ரம்பையும் இவ்வாறு சண்டை போடுவதைப் பார்த்த இந்திரன், அவர்கள் இருவரையும் அதட்டி, அவர்கள் இருவரும் வால்மீகி முனிவரின் தவத்தைக் கலைக்க முயல வேண்டும் என்றும், அம்முயற்சியில் யார் வெற்றி பெறுகிறார்களோ அவரே நாட்டியக் கலையில் சிறந்தவராகக் கருதப் படுவர் என்றும் மொழிகிறான். அவர்கள் இருவரும் உடனே வால்மீகியின் தவ வனத் திற்குப் புறப்படுகின்றனர். அவ்வாறு செல்லும் போது, அவர்கள் தங்களுடன் மதிப்பு வாய்ந்த கவர்ச்சியான உடைகளையும் ஒப்பனைப் பொருள்களையும் எடுத்துக் கொண்டு, தேர்ந்த உதவியாளர்கள், பல்வேறு இசை நாட்டிய மற்றும் வாத்தியக் கலைஞர் கள், ஆகியோருடன் தவ வனத்திற்குச் சென்று, அங்கே தங்கள் கலையரங்கினை நிர்மாணித்துக் கொள்கின்றனர்.

அவர்கள் தங்கள் பாடல்களையும் வெவ் வேறு வாத்தியங்கள் வாசிப்பதையும் தொடங்குகின்றனர். ஆனால், அவை எவையும் முனிவரின் தியானத்தைச் சிறிது கூடக் கலைக்க வில்லை. அப்போது, ரம்பை வால்மீகியைத் தவத்திலிருந்து திருப்பும் எண்ணத்துடன், 'தேசீ' நாட்டியம் ஆடுவ தாகக் கூறி, அரங்கத்தின் மீதேறி, புஷ்பாஞ்சலி நிருத்யத்துடன் தொடங்கி, தனது நாட்டியத் திறமையனைத்தையும் காண்பிக்கிறாள். அவளது காற்சிலம்பின் ஒலி சுற்றுச்சுழல் முழுவதிலும் எதிரொலிக்கின்றது, அவளது தோழி ஒருத்தி தம்பூரா மீட்டுகிறாள்; மற்றொருத்தி முகவீணை வாசிக்கிறாள்; மூன்றாமவள் 'ஸ்வரமண்டல'த்தையும், நான் காமவள் 'தண்டி'யினையும் (தண்டி வீணை யின் ஒரு வகை) இன்னொருத்தி வீணை

யினையும், வேறொருத்தி 'உபாங்கம்' என்னும் வாத்தியத்தையும், பிறிதுமொருத்தி 'கின்னரம்' என்னும் இசைக் கருவியையும் (உள்ளீடற்ற சுமார் 20 அங்குல நீளமுள்ள மூங்கில் மீது இருக்கும் நான்கு மெட்டுக்களின் மீது அமைந்துள்ள இரண்டு நரம்புகள் உள்ள நரம்பு இசைக்கருவி) இறுதியாக ஒருத்தி தாளங்களையும் வாசிக்கின்றனர். மிருதங்கம், ஆவஜம் (இது படகம் போன்ற ஒரு குடமுழாவகை வாத்தியம்) மற்றும் பிற தோற்கருவிகளின் ஒலிக்கேற்பச் சிலர் பாடுகின்றனர் - ஆனால், இம் முயற்சிகள் யாவும் முனிவரின் முன் பயனற்றுப் போயின. ரம்பையும் சோர்வுற்றுப் பேசாது ஓரிடத்தில் உட்கார்ந்து விடுகிறாள்.

நூலாசிரியர் ஹஸ்த முத்திரைகள் மற்றும் பாதகதிகள் ஆகியவை பற்றிக் குறிப்பிட்டிருப்பினும், இந்தத் 'தேசீ' வகை நாட்டியம் எவ்வாறு ஆடப்பட்டது என்பதை விவரிக்கவில்லை. 'தேசீ' வகை நாட்டியம் சிறப்பான சில காரணங்கள் மற்றும் கதிகள்' 'சாரீ'க்கள் எனப்படும் விசித்திரமான இயக்கங்கள் ஆகியவற்றைக் கொண்டதாகும். ஒருவேளை அவர் குறிப்பிட்ட பாதகதிகள், ஹஸ்த முத்திரைகள் என்பவற்றில் இவை அனைத்தும் அடங்கும் என அவர் கருதினாரோ என்னவோ.

ரம்பை முனிவரின் தவத்தைக் கலைக்கும் முயற்சியில் தோல்வியடைந்தவுடன், ஊர்வசி இசையினால் அதனைச் சாதிக்க முயற்சி செய்கிறாள். முனிவருக்கு எதிரில் அருகே அமர்ந்து கொண்டு வீணையை எடுத்து வரும்படி தோழியிடம் சொல்லுகிறாள். வீணையைக் கைகளில் வாங்கியவுடன் அதற்கு வணக்கம் செய்து, தனது மடியின்மீது மார்பை அணைத்தவாறு வைத்துக்கொண்டு, அதை மீட்டி, தனது இசைப்புலமை அனைத்தையும் பிரயோகித்து, இனிமை இழையோடப் பாடத் தொடங்குகிறாள். அவளது இன்னிசையால் கல்லும் கரைகிறது; புள்ளினங்கள் மயங்குகின்றன, விலங்குகள் ஆடாது அசையாது நிற்கின்றன, பட்ட மரங்கள் துளிர்க்கின்றன. ஆனால், முனிவரிடம் மட்டும் எவ்வகைச் சலனமும் ஏற்படாததைக் கவனித்த ஊர்வசி, சலிப்புற்றுப் பாட்டை நிறுத்துகிறாள். உடனேயே தனது தோல்வியை ஏற்றுக் கொண்டவளாய், புன்முறுவலுடன் ரம்பையிடம் சென்று "இம் முனிவர் நமது பூசலைத் தீர்த்து விட்டார் என்றே சொல்ல வேண்டும். இங்கு, ஒவ்வோர் அடியிலும் நம்மைப் பாராட்டும் வகையில் ஆகா, ஓகோ, பலே, அடேயப்பா என்று சொல்லிக் கரவொலி எழுப்பும் அரசவையினர் எவரும் இல்லை. இதிலிருந்து, இத்தகைய பணிகளை இனிமேல் மேற்கொள்ளக் கூடாது என்பதை நாம் புரிந்துகொண்டோம். வா, நாம் திரும்பிப் போகலாம் என்று ஊர்வசி ஆறுதல் கூற முற்படுகிறாள்.

ஆக, நூலாசிரியனான இரகுநாதநாயகன் இந் நீண்ட உரையாடலில், மறைமுகமாகவே எனினும், தென்னாட்டில் அவர்காலத்தில், சிறப்பாக, அவரது அரசவையில் நடைமுறையில் இருந்து வந்த இசை மற்றும் நாட்டியக் கலைகளின் நிலையைச் சித்திரம் போல் விளக்கியிருப்பது நம் கவனத்திற்குரியதாகும்.



ஆசிரியரின் ஆங்கிலக் கட்டுரையிலிருந்து தமிழில் மொழி பெயர்த்தவர்:

**அ. நடராஜன்**

செயலர், திருப்பதி கலாச்சார சங்கம், திருப்பதி (ஆந்திரப்பிரேதசம்)

# இசையால் தமிழ் வளர்ப்போம்



இராம. வீரப்பன்

இன்று இசைக்கச்சேரி செய்பவர்கள், தியாகையர், சாமாசாஸ்தரி, முத்துச்சாமி தீட்சிதர் முதலியவர்கள் பாடிவைத்துள்ள தெலுங்கிலும், சமஸ்கிருதத்திலும் உள்ள சாகித்யங்களை மட்டுமே பாடிக்கொண்டிருக்கிறார்கள். இது சமீப காலத்திலே ஏற்பட்ட மாற்றம் தான். இருநூறு ஆண்டு காலத்திற்கு முன்புதான் இத்தகைய மாற்றம் உருவாக்கப் பட்டுள்ளது. இந்த இருநூறு ஆண்டுக்கால இடைவெளியில் நமது தமிழிசை என்பது அடியோடு மறைக்கப்பட்டு விட்டது, அல்லது அறவே மறக்கும்படி செய்யப்பட்டுவிட்டது.

தமிழிசைக்கென்று ஓர் இயக்கம் கண்ட நாம், தமிழிசைக்காகப் போராடிக்கொண்டிருக்கின்ற நாம், நம் சங்கீத வித்வான்கள், தெலுங்கு சமஸ்கிருதக் கீர்த்தனைகளைப் பாடுவதற்குப் பதிலாக நம்முடைய தமிழ் முன்னோர்கள் அருமையாகப்பாடி வைத்துள்ளார்களே, அந்த இசைப்பாடல்களைப் பாடும் படிக்கேட்டோமா.? அல்லது அந்தத் தமிழ்ப் பாடல்களை எடுத்துத் தந்தோமா.? ... ...

திருமுறைகள், தேவார திருவாசகப்பாடல்கள் ஆகியவற்றையாவது சிறந்த பண்களிலே அமைத்து தெலுங்குக் கீர்த்தனைகளும் சமஸ்கிருதக்கீர்த்தனைகளும் பாடிக் கொண்டிருக்கின்ற சங்கீத வித்வான்களுக்கு நாம் தந்தோமா.? நமது தமிழ் மொழியில் உள்ள ஏறத்தாழ 1300 ஆண்டுகளுக்கு முற்பட்ட தேவார, திருவாசகத் திவ்விய பிரபந்தப் பாடல்களைக் காட்டிலும், உயர்ந்த சிறந்த பாடல்கள் உண்டா.? அவை உலகமே வியந்து பாராட்டுகின்ற ஒப்புயர்வற்ற அரும்பெரும் தெய்வீக இலக்கியச் செல்வங்கள் அல்லவா.! அவற்றை மக்களிடையில் பரப்பி வள்ர்க்கும் முயற்ச்சிகளிலே நாம் ஈடுபட்டு உள்ளோமா.? என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இன்றைக்கு தேவார, திருவாசகப் பாடல்கள், திவ்வியப் பிரபந்தம் திருப்புகழ், திருவருட்பா போன்ற அற்புதமான இசைப் படைப்புகள் தமிழிலே இருக்கின்றன. இவற்றைப் போன்ற தெய்வீகமான சிறந்த பண்பாடு மிக்க இசைப்பாடல்கள் வேறு எந்த மொழியிலும் இல்லை.

சங்கீத மும்மூர்த்திகள் என்று தற்போது சொல்லப்படுகின்ற தியாகைய்ர் (1764-1847) சாமாசாஸ்திரி (1762 - 1827) முத்துச்சாமி தீட்சிதர் (1776-1835) ஆகிய மூவரும் 18-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றி வாழ்ந்தவர்கள்தான். அப்படியானால் இவர்களுக்குமுன்பு தமிழ்நாட்டில்இசை இருந்ததா.? இல்லையா.? ''தமிழோடு இசைப்பாடல் மறந்தறியேன்'' என்று கி.பி. ஏழாம் நூற்றாண்டிலேயே நம்முடைய திருநாவுக்கரசர் பெருமான் பாடியிருக்கிறாரே.! ...

நம் தமிழறிஞர்கள், பழம்பெரும் இலக்கியமான சிலபபதிகாரத்தில் இருந்து தொடங்கி, இசைக்குத் தமிழன் எப்படி இலக்கணம் கண்டிருக்கிறான் என்று சொல்லி விளக்குகிறார்கள் இலக்கணம் எப்பொழுது தோன்றும் என்றால், ஓர் இயல்மொழி முன்னாலேயே தோன்றி அதில்பல நூல்களும் தோன்றி இருந்தால்தான் அதனையொட்டி அதற்குப் பின்னர் இலக்கணம் தோன்றும். ஆகவே, இலக்கணம் தோற்றுவிக்கக்கூடிய சூழ்நிலையிலேயே நம் தமிழ் மக்கள் சிலப்பதிகாரத்திற்கு முன்பே, அதாவது 2,000ஆண்டுகளுக்குமுன்பே சிறந்து விளங்கி இருந்திருக்கிறார்கள் என்று சொன்னால் அதற்கும் மிக மிக முன்னாலேயே இசை தோன்றியிருக்கிறது என்பது திண்ணமல்லவா.? ...

பரிபாடல் என்ற சங்ககால நூலின் பாடல்களுக்குப் பண்கள் பல வகுக்கப்பட்டு இருக்கின்றன. மேலும், பத்துப்பாட்டு நூல்களில் ஒன்றானமதுரைக் காஞ்சியில் இராவணன் ஒரு சிறந்த இசைக்கலைஞன் என்னும் குறிப்பு காணப்படுகிறது. இராவணனைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது அவன் ஒரு சிறந்த இசைக் கலைஞன் என்று தான் குறிப்பிடுகின்றார்கள். அவ்வாறு இசையிலே மிகச் சிறந்த பெரும் புலவர்களாக இருந்தவர்கள், ஒப்புயர்வற்ற கலைஞர்களாக விளங்கியவர்கள் இறைவனை அடைவதற்கு உரியதாக ஏற்றுக் கொண்ட மார்க்கம் 'இசை' என்று தெளிவாகத் தெரிகிறது.

இறைவனையே இசைவடிவமாகப் பார்த்தசமயம் சைவசமயம். இறைவனையே கலைவடிவமாக நம்முடைய நாட்டுச் சமயம் கண்டுணர்ந்து போற்றி வருகின்றது. "ஏழிசையாய் இசைப்பயனாய் இறைவன் விளங்குகின்றான்" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடியிருக்கின்றார்.

இவ்வாறு சங்க காலம் தொட்டே, பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே, தமிழ்நாட்டில் தமிழிசை முழங்கிக் கொண்டிருந்தது என்று தெளிவாகத் தெரிந்தும் கூட, ஒருசிலர் சுமார் 150 - 200 ஆண்டுகளுக்கு இடையில் புதிதாக நுழைந்த கர்நாடக சங்கீதம் தான் நமது தமிழ்நாட்டுச் சங்கீதம் என்று' கூறி வருதல் எவ்வாறு பொருந்தும்.? ...

16-ம் நூற்றாண்டில் அதாவது சுமார் 350 ஆண்டுகளுக்கு முன்பு சீர்காழிமுத்துத் தாண்டவர், (1560-1640) தில்லைவிடங்கன் மாரிமுத்தாப்பிள்ளை (1712-1787), சீர்காழி அருணாசலக் கவிராயர் (1711-1779) என்கின்ற தமிழ்ப் பெரியவர்கள் தமிழிசைப் பேரறிஞர்களாக விளங்கி இருந்திருக்கிறார்கள்.

முத்துத்தாண்டவர் தமிழில் அரிய அழகிய கீர்த்தனங்களும், பதங்களும் பாடியுள்ளார். மாரிமுத்தாப்பிள்ளை கீர்த்தனங்களும், பதங்களும் மட்டுமின்றி தூது, உலா, பள்ளு, நொண்டி நாடகம் முதலிய பலவும் பாடியுள்ளார். அருணாசலக் கவிராயர் சீர்காழிப் பள்ளு, சீர்காழிப் புராணம், சீர்காழிக் கலம்பகம், அசோமுகி நாடகம், தியாகேசர் வண்ணம், சம்பந்தர் பிள்ளைத்தமிழ் முதலிய பல நல்ல நூல்களைப் பாடியதோடு புகழ் மிக்க இராம நாடகக் கீர்த்தனை என்ற பெருநூலையும் பாடியுள்ளார். இவர்கள் மூவரும் தியாகையர் முதலியவர்களுக்குப் பல ஆண்டுக்காலம் முற்பட்டவர்கள். கர்நாடக சங்கீதம் என்பது தமிழகத்தில் நுழைவதற்கு முன்னரே இவர்களைப் போன்ற பலர் தமிழ்நாட்டில் இசையுலகில் பெரும் புகழ பெற்று விளங்கிக் கொண்டிருந்திருக்கிறார்கள்.

இதற்கும் மேலே போனால், இந்த 400 ஆண்டுகளுக்கும் மிக முற்பட்டு, ஆயிரம் ஆண்டுகளுக்கும், அதாவது கி. பி. 3-4-ஆம் நூற்றாண்டு முதற் கொண்டே தமிழ்நாட்டில் ஆழ்வார்களும், நாயன்மார்களும் பக்தி இயக்கத்தைப் பரப்புவதற்கு நம்நாட்டின் சிறந்த இசைக்கலையைப் பயன்படுத்தியுள்ளார்கள். தேவார திருவாசகத் திருமுறைப் பாடல்களையும், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் போன்ற தேனமுதப் பாடல்களையும் வேறு எந்த நாட்டிலும், வேறு எந்த மொழியிலும் காண்பது அரிது என்று பல மேல்நாட்டு அறிஞர்களே வியந்து புகழ்ந்திருக்கிறார்கள்! இவற்றையெல்லாம் எண்ணி நாம் பெருமையும், பெருமித உணர்வும் கொள்ள வேண்டாமா? ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, திருஞானசம்பந்தர், அரச ஆதிக்கத்தோடு, புயலாகப் புகுந்த ஒரு புற மதத்தை எதிர்த்தார். சைவத்தை நிலை நிறுத்த வேண்டும் என்று மட்டும் அவர் பாடுபடவில்லை தமிழை, தமிழ் இசையை நிலை நிறுத்த வேண்டும் என்றும் அவர் பாடுபட்டார். அதனால்தான் அவர் தன்னை "தமிழ் ஞான சம்பந்தன்" என்று அழைத்துக் கொண்டார்.

திருஞானசம்பந்தர் காலத்திலேதான் தமிழ் அடைமொழியோடு அழைக்கப்படுகிறது அவர் 'செந்தமிழ்' என்கிறார்; 'இன்தமிழ்' என்கிறார்; 'பைந்தமிழ்' என்கிறார்; 'வன்தமிழ்' என்கிறார்; தண்டமிழ், ஞானத் தமிழ், கன்னித்தமிழ், கலைமலியும் தமிழ், சங்கமலிதமிழ்; என்று 1,300 ஆண்டுகளுக்கு முன்னால் தமிழைப் போற்றியவர் திருஞான சம்பந்தர். நாடு முழுவதும் சுற்றித் தமிழை இசையாகப் பரப்பி வந்தார். நாலாயிரத் திற்கும் மேற்பட்ட பாடல்கள் இயற்றித் தந்திருக்கிறார். நமக்குக் கிடைத்திருப்பது அவ்வளவு தான்; அவர் எவ்வளவு இயற்றி னாரோ நமக்குத் தெரியாது.

நாட்டின் மூலை முடுக்கு எங்கணும் சென்று தமிழிசையைப் பரப்புகிறார் ; முத்தமிழையும் வளர்க்கின்றார். '' உங்கள் கடவுள் எங்கே இருக்கிறார் ? ...'' என்று யாராவது கேட்டால், எங்கள் சிவபிரான் கயிலாசத்திலோ, பிற இடங் களிலோ இருக்கிறார் என்று கூறாமல், "எங்கெங்கே தமிழன் அருமை, பெருமைகள், சிறப்புகள், நயங்கள் எடுத்துப் பேசப்படுகின் றனவோ, அங்கெல்லாம் இருக்கின்றார் ; எங்கெங்கே நல்ல இசைக்கருவிகளுடன் தமிழிசை சிறப்பாகப் போற்றிப் பாடப்பெறு கின்றதோ அங்கெல்லாம் எங்கள் சிவபிரான் இருக்கின்றார் " என்கிறார் தமிழ்ஞான சம்பந்தர்.

" தமிழின் நீர்மை பேசித்
தாளம் வீணை பண்ணி நல்ல
முழவம் மொந்தை மல்கு பாடல்
செய்கை இடம் ஓவார் ...

என்பது சம்பந்தர் தேவாரம்.

கடவுள் எவ்வாறு இருக்கிறார் என்பதற் கும் '' குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய பண்களாகவும், அவற்றிற்குரிய சப்த சுரங்களாகிய பதங்கள் ஏழாகவும் பல வகையான சந்த அமைப்புகளாகவும் விளங்கு கின்றார் '' என்று கூறுகிறார் திருஞான சம்பந்தர்.

'' பண்ணும் பதம் ஏழும்
பலவோசைத் தமிழ் அவையும்
உள்நின்றதோர் சுவையும்
உறுதாளத்து ஒலி பலவும் ஆனான் ''

என்பது சம்பந்தரின் திருமொழி.

இவ்வாறெல்லாம் தமிழையும், தமிழ் இசையையும் நாட்டின் மூலை முடுக்குகளி லெல்லாம் சென்று, தீவிரமாகப் பரப்பியத னால்தான் திருஞான சம்பந்தரைச் சுந்தர மூர்த்தி சுவாமிகள்-

" நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும்
ஞானசம்பந்தனுக்கு உலகவர்முன்
தாளம் ஈந்து அவன் பாடலுக்கு
இரங்கும் தன்மையாளன் ..." ...

என்று, போற்றிப் புகழ்கின்றார்.

இன்றைக்கு ' ஓதுவார்கள் ' என்றாலே நாம் கொஞ்சம் கேலியாகப் பார்க்கின்றோம். தயவு செய்து நாம் உண்மையை மறைத்துப் பேசுவதில் பயனில்லை. இன்றைக்குக் கோயிலுக்குள்ளே போகும்போது அங்கே நின்று பாடிக்கொண்டிருக்கின்ற ஓதுவார்களை நம்மில் எத்தனைபேர் மதிக்கின்றோம்.? ...

அவர் பாடுகிற பாட்டை எத்தனைபேர் கேட்க வேண்டுமென்று விரும்புகிறோம்.? ... ஓதுவார் என்று சொல்லிக்கொண்டிருக்கிறார் களே... அந்த பெயரின் அடிப்படையே நமக்கு இன்னும் தெரியவில்லை.! 'பாடுகிறவர்' என்று சொல்வது இல்லை. தேவாரத்தைப் பாடுப வர்களை ' ஓதுவார் ' என்றுதான் சொல்லு கிறோம். 'ஓதுவது' என்றால் வேதம் ஓதுவது என்பார்கள். திருமுறைகளை ஓதுவது என்பார்கள். ஓதுவது என்றாலே உள்ளத்திலே இருந்து கொண்டிருக்கிற உணர்வுகளை எல்லாம் ஒருமுகப்படுத்தி, தெய்வீக உணர்வு டன் இனிய இசையோடு சேர்த்து வெளிப் படுத்தி, இந்நாட்டு மக்களின் காதுகளிலே ஒலிக்கச்செய்து உள்ளத்தில் பதியவைப்பது என்பது தான் பொருள்:

"காதல் ஆகிக் கசிந்து கண்ணீர்மல்கி ஓதுவார்" என்று சம்பந்தர் தம் தேவாரத்தில் குறிப்பிட்டிருக்கக் காண்கிறோம்! ...

இந்த நாட்டிலே தமிழறிந்த மக்கள், தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் காலையிலோ, மாலையிலோ தினமும் திருமுறைகளைத் தவறாமல் ஓதவேண்டும் என்று அறிவுறுத்துவதற்குத்தான் 'ஓதாமல் ஒரு நாளும் இருக்கவேண்டாம்' என்று பெரியவர்கள் சொல்லி வைத்தார்கள்.

"திருப்புகழிலே, தேவாரத்திலே, திருவாசகத்திலே, சித்தர் பாடல்களிலே" இல்லாத இசை வேறெந்த பாடல்களிலே இருக்கிறது.?... ஒருவேளை இவை பழமையாக உள்ளன, புதுமையானவையாக இல்லை என்று நாம் கருதுவோமேயானால் ஒரு நல்ல புதிய பாணியிலே, புதிய முறைகளிலே அமைத்துத் தருவதற்கு நாம் முயற்சி எடுத்துக் கொண்டாக வேண்டும்.

கர்நாடக இசையை வேண்டாம் என்றோ, கூடாது என்றோ நான் சொல்லவில்லை. மக்களுக்குப் புரிகிற மொழியிலே பாடுங்கள்;... புரிகிற மொழியில் பாட்டைக் கேட்டுச் சுவைத்தால்தான் இசைக்கலை வளரும்; ... அந்த இசையோடு இலக்கியம் வளரும்; ... அந்த இசைக் கலையாலும், இலக்கிய நூல்களாலும், மொழியையும் நம் நாட்டின் பண்பாட்டையும், நாகரீகத்தையும் வளர்க்க முடியும். மக்களின் அறிவையும் ஒழுக்கத்தையும் கூட வளர்க்க முடியும்.



## மது



மதுவைக் குடிப்போருக்கு
மரியாதை சற்றுமில்லை
மனதில் அறிந்து கொள்ளுவாய்
புதுமை மிக விளைக்கும்
பொல்லாங்கையும் உண்டாக்கும்
போதனைகளை நீக்கும்
பொருளை வீணாகப் போக்கும்
பெண்டாட்டி சகோதரி
பெற்ற பிள்ளைகள் என்று
பேதம் தெரிய ஒட்டாது
பேச்சு முன்பின் இல்லாமல்
வாய்க்கு வந்தவாறெல்லாம்
பிதற்றும் நல்வழி கிட்டாது
திண்டாட்டம் அதனாலன்றி
சேர ஓரிடம் ஒட்டாது
தேடினாலும் கோடி கோடி
செலவு செய்யக் கட்டாது

— *சங்கரதாஸ் சுவாமிகள்*



# இந்தியாவை இரட்சிக்கத் தோன்றியவனே!

ப. சிதம்பரநாதன்

ஆடிக்கொண்டே இருந்த இரண்டு தராசுத் தட்டுகள் சிறிது நேரத்தில் ஒரு சமநிலைக் கோட்டில் அசைவற்று நிற்கின்றன. ஆனாலும் கண்கள் என்னவோ அதோ அந்த முள்ளை, முறைத்துப் பார்த்த பின்தான் சமாதானமடைகின்றது. நீதி மன்றத்தில் நெற்றித் திலகமே ஒரு தராசுதானே!

'ஜவஹர்' ஆகா 'சிவப்பு ரத்தினம்' என்று உனக்கு எவ்வளவு பொருத்தமாகப் பெயர் சூட்டியிருக்கிறார்கள்!

தனக்கென வாழாத பிறர்க்குரியாளனே! அந்தத் தராசு முள்ளைப் போல்தானே நீயும் வாழ்ந்து காட்டினாய்! அதனால் தான் மேல் தட்டும், கீழ் தட்டும் இல்லாத சமநிலைக் கோட்டிற்கு நாங்கள் வந்துகொண்டிருந்தோம். அதற்குள் ஏனோ நீ அவசரமாக எங்களிடமிருந்து புறப்பட்டுப் போய்விட்டாய். எங்கள் இந்திய பூமியை ஈரமாக்குவதற்காக ஓடிக்கொண்டே இருக்கும் ஜீவநதிகளைப் போல், வறட்சியாய்க் கிடந்த எங்கள் வாழ்வுக்குள். ஓடிவந்து நீ பாய்ந்து கொண்டிருந்தாயே!

எங்கள் நவபாரதக் கப்பலின் முதல் மாலுமியே—இந்த நவம்பர் மாதத்தில்—14ம் நாளில்—அறிஞர் மோதிலாலின் ஆசை மகனாய்தானே நீ பிறந்தாய்!

ஆனால் அவரோ தன்னை ஜவஹரின் தந்தையென்றுதான் தன்னை அழைத்துக்கொண்டார்.

ரத்தினக் குஞ்சங்கள் கட்டிய தங்கத் தொட்டில்களில் தாலாட்டப் பட்டவனே! உனது அடுக்கு மாளிகையில், எங்கள் தாழ்வாரங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்வதற்காகத்தான் உலவிக் கொண்டிருந்தாயோ?

சீமானுக்கு முன்பு நிற்கும் பாமரனைப் போல், ஆசிரியர்கள் முன்பு அடக்கமாய் நின்றாயாமே! எங்கள் வறுமையின் மூலத்தை அறிந்து கொள்வதற்காக ஓயாமல் கற்றாயே—அதற்காக நீ பண்டிதன் என்று பாராட்டுக் கூடப் பெற்றாயே!

இத்தாலிய மாவீரன் கரிபால்டியைப் பற்றிய அழகான புத்தகம் ஒன்றை, இங்கிலாந்தில் நீ படித்த போது உனக்குப்பரிசளித்தார்களாமே.

இந்தியாவுக்கும் அப்படிப்பட்ட ஒருவன் தேவையென்று தேட நினைத்தாயே, அவன் நீயாகவே இருந்த போது, இன்னொருவன் எப்படி உனக்குக் கிடைப்பான்.

நீ படித்ததோ விஞ்ஞானம் — கலந்ததோ அரசியலில்—பாடு பட்டதோ எங்கள் சுதந்திரப் பொருளாதாரத்திற்கு.

உனது எல்லாமே சரித்திரமாகிவிட்டது. நீயோ தத்துவமாகி விட்டாய்.

எழுத்தாளர்கள் படைக்கும் இலக்கியமாகி விட்டாய்.

வேதனைப் படுபவர்கள்தான், குடும்பத்தைச்சிறைச்சாலை என்பார்கள், ஆனால் உன் குடும்பமே சிறைச்சாலைக்குள் இருந்தபோது நீ ஆனந்தமல்லவா பட்டிருக்கிறாய்.

ஒரு முறையா — இருமுறையா — எட்டு முறை. ஆயிரத்து நாற்பத்தொரு நாட்கள். அதுவும் வெள்ளை ஏகாதிபத்தியத்தின் வெங் கொடுமைச் சிறைகளில் அல்லவா நீ வாட்டப் பட்டாய்.

நயினியிலும், டேராடூனிலும், அலிபூரிலும் அல்மோராவிலும் மோனத்தவம் புரிந்த உனது சிறைச்சாலை விவரங்கள் எங்கள் மேனிகளைச் சிலிர்க்கச் செய்கின்றன.

சிறைக் கொட்டடியிலிருந்து அருமை மகள் இந்திரா பிரியதரிசினிக்கு நீ எழுதினாயே கடிதங்கள் - உலகச் சரித்திரத்தின் ஒளிக்கிரணங்களாய் ஜொலிக்கின்றன. இந்தியாவின் தரிசனம்', 'எனது வாழ்க்கை வரலாறு' ஆகிய உனதுபுத்தகங்கள், இந்திய மக்களின் ஆயுதத் தொழிற்சாலைகளாக இருப்பதை நீ அறிவாயா?

வீட்டுக்குள் வந்து உன்னைக் கைது செய்து கொண்டு போனார்கள். வியாதியால் பீடிக்கப் பட்ட உனது அன்றில் பறவை-அருமை மனைவி ஓடி வந்து, விட்டுப் பிரிய மனமில்லாமல் உன் உடம்போடு ஒட்டிக் கொண்டு, உனது கைகளிலே மயக்கமுற்று விழுந்து கிடந்த போது, நீ எப்படித்தான் பிரிந்து சென்றாயோ? கௌதமன்கூட, மனைவி அயர்ந்து உறங்கிய போது தானே பிரிந்தார்.

போலீசாரின் மூர்க்கத்தனமான தாக்குதலால் உன்னைப் பெற்றெடுத்த உனது தாயாரே ரத்தம் சொட்டச் சொட்ட வீதியில் நாதியற்றுக் கிடந்தார்களே—அப்போது, சிறைப் பறவையே! இரும்புக் கம்பிகளும், கத்தியும், துப்பாக்கிகளுமா உன்னைத் தடுத்துவிட்டன? இல்லவே இல்லை.

அந்தச் செய்தியை இருட்டடிப்புச் செய்து உன்னை ஏமாற்றி விட்டார்கள். விவரம் தெரிந்த போது சிங்கம் போலல்லவா நீ கர்ஜித்தாய்.

உனது அழகிய மாளிகை—ஆனந்த பவனத்தில் கூட, ஒரே அறையில் இருந்திருக்காத நீயும் உனது தந்தையும், சுதந்திரத்திற்காக ஒரே சிறையில் இருந்தீர்களே!

கவசம் தரித்தப்படை வீரர்களையே நீ மறித்து நின்ற போது உனது கண்கள் குருடாகும் படி உன்னை அடித்துத் தூக்கியெறிந்தார்களே.

பயிற்சி பெற்ற அஹிம்சாவாதி கூட பழிக்குப்பழி என்பானே! நீ எப்படி பொறுத்துக் கொண்டாய்?

அதனால்தானே மகாத்மாவே உன்னைத் தனது வாரிசென்று இனங்காட்டினார். தேசம் உனது கைகளில் பத்திரமாக இருக்கும் என்று நம்பிக்கையோடு சொன்னார்.

அந்த உத்தமரோடு ஒரு நூறு விஷயங்களில் நீ ஒத்துப் போகாமலிருந்தாலும், அந்த விசால நிலத்தின் மிகப் பெரிய விருட்சமாக நீ மட்டும்தானே செழித்து வளர்ந்தாய்.

உனது பிறந்த நாள் கொண்டாட்டமே ஒரு புதுமையாகவல்லவா நிகழ்ந்தது.

நோயில் நலிந்த அருமைத் தந்தையோடு ஆர அமர்ந்து பேச விரும்பிய உன்னை, அவசர அவசரமாய்க் கைது செய்து, நயினி சிறைக்குள் அடைத்தார்களே — நொந்துபோன தந்தைக்கு அதுவே மீண்டும் நோயாகியது. வெந்துபோன உள்ளத்தோடு உனது பிறந்த

நாளைக் கோலாகலமாகக் கொண்டாட வேண்டுமென்று வேண்டுகோள்விட்டார்.

ஐயாயிரம் பேர் அன்றைக்கு மட்டும் கைதானார்களே. நீயோ சிறைக்குள் உனது பிறந்த நாள் கொண்டாட்டமோவெளியில்.

உன்னை விடுதலை செய்ய வேண்டுமென்று கோரிக்கை இந்தியாவெங்கிலும் எதிரொலித்தது உனக்கும் தெரியாமல் கொண்டாடப் பட்ட உனது பிறந்த நாளை, நீ தெரிந்து கொண்டபோது அதையே குழந்தைகள் தினமாகக் கொண்டாடச் சொன்னாய்.

தாய்மார்கள் தங்கள் பச்சைக் குழந்தைகளைவயிற்றிலேதான் சுமந்தார்கள் — நீயோ அக்குழந்தைகளை முதுகிலே சுமந்தாய்.

வாழ்க்கைப் பாலைவனத்தில் அந்தச் சின்னஞ்சிசுக்களை கரை சேர்த்துவிடுகின்ற ஒட்டகமாகச் செயலாற்றும் ஒப்பற்ற திட்டங்களை ஒன்றன்பின் ஒன்றாய் நிறைவேற்றினாய்.

வானத்திலே வெள்ளைப் புறாக்களைப் பறக்க விட்டு, இந்த பூமியின்மீது சிவப்பு ரோஜாக்களை நேசித்தாயே.

தேசத்தின் விடுதலைப் போராட்டத்தையும் உலகத்தின் சமாதானத்தையும், நேசித்த உனது நெஞ்சச் சித்திரங்கள் தானே அவை

வீரம் செறிந்த எங்கள் விடுதலைப்போரின் கொதிநிலை வெப்பம் உச்சத்தையடைந்த போது, அனல் கக்கிய உனது பேச்சுக்களை இப்போது படித்தாலும் இனம் தெரியாத ஒரு பரபரப்பு எங்களைச் சூழ்கிறது.

விடுதலைப்போர் நடத்திய சரித்திர நாயகர்களில் காக்கி உடை போடாத தளபதி நீ ஒருவன் தானே.

சோசலிச நாடுகளென்றும், ஜனநாயக நாடுகளென்றும் இரு வேறு உலகங்களாக இருந்த இப்பூமியில் மூன்றாம் உலகத்திற்கு முகூர்த்தக்கால் போட்டவனே நீ தானே.

பனி கொட்டும் இமயச்சாரலில் ஊசி முனைத் தவம்புரிந்த மகரிஷியைப்போல, கெடுபிடியுத்தத்தின் (Cold War) பீதிநிறைந்த சூழலில் பஞ்சசீலத்தவம் புரிந்தாயே.

நீ சக்கரவர்த்திகளையே ஆட்டி வைத்த சாணக்கியன் என்பது இன்னும் இரகசியமாகவே இருக்கிறது. ‘சாணக்யா’ என்ற புனைப் பெயரில் நீ எழுதிய கட்டுரைகள், உனது சிந்தனை முறையில் ஒரு புதிய கோணம்— ஒரு புதிய கோலம்.

எங்களை எல்லாம் பற்றி உனது புகழ் மிக்க உயிலில் ''நாங்கள் உன்னை அளவுக்கும் அதிகமாக நேசித்து விட்டோமென்றாய், எங்களிடமிருந்து பெற்ற அந்த ஐஸ்வர்யத்தை எப்படித்தான் என்னால் திருப்பித்தர முடியும்' என்று பேசினாய். இறுதியாக என்னை எரித்த சாம்பல் கையளவே எடுத்து கங்கையாற்றில் தூவுங்கள். அதனைக்கூட நான் மோட்சம் பெற வேண்டும் என்ற மூட நம்பிக்கையினால் சொல்லவில்லை. அந்த நதியை மூன்று பெரும் கால வெள்ளங்களாகவே கருதுகிறேன். சாம்பலாக விழுந்து அதனோடு கைகோர்த்துச் செல்லுகிறேன், அவ்வளவுதான்.

கையளவு போக மீதியை இந்திய வயல் பரப்புகளில் தூவி விடுங்கள். இந்த மண்ணோடு மண்ணாக நான் கலந்து கரைந்து போக வேண்டும். இதுவே எனது ஆசை' என்றாய்.

இப்படிப்பட்ட இருதயம் இருந்ததினால் தான் நமது நாட்டு கம்யூனிஸ்டுகளின் தேச பக்தியை நீ சந்தேகிக்கவில்லை.

எதிரே நின்று பந்து விளையாடுபவர்களைப் போலத்தான் அரசியலில் நீ அனைவரையும் நினைத்தாய். நாட்டுக்குத் தேவை இன்றைக்கு அந்த நாகரிகம்தான்.

நீ பிறந்த இப்புனித நூற்றாண்டு நாளில் உனது நினைவுகளில் எங்களைப் பின்னிக் கொண்டு விட்டோம்.

---

பேராசிரியர்
**அமுதன், எம்.ஏ.,**
ந.க.ம. கல்லூரி, பொள்ளாச்சி



# திருக்குறளில் காதல்

வாழ்க்கையென்னும் மலரில் காதல்தான் தேன் காதல் தொன்று தொட்டு வரும் பழைய கதை, இருப்பினும் என்றென்றும் அன்றன்று பூக்கிற புதியமலர் போல் தித்திக்கும் கதை, தெவிட்டாத கதை. கொலு மண்டபங்களிற் போலவே, குடிசையிலிம் குடியிருப்பது காதல் உயிரினங்கள் அனைத்திற்கும் பொதுவானது காதல். *'காதல் அடைதல் உயிர் இயற்கை'* என்பது கவிஞர்களின் கருத்து.

உயிரினங்களில், இயற்கை உணர்வாகக் காதலை இயற்கை படைத்திருப்பது, நன்கு திட்டமிட்டுத் தீட்டப்பட்டுள்ள செயலாகும்.

என்றும் உயிர்கள் நின்று நிலைக்க, தயில்தாரைபோல் இடையிடின்றி உயிர்கள் உலகில்என்றும் வாழ்ந்துவர, இயற்கை செய்த நுட்பம் மிகுந்த உத்தி, உயிர்களுக்கு ஏற்படும் பால் இயல் உணர்வாகிய காதல். இந்தக் காதல் விருப்பம் மட்டும் இல்லையேல் உலகம் என்றோ பாலைவனமாகிப் போயிருக்கும். உயிர் என்பது, ஒருயிரிலிருந்து இன்னோர் உயிர்க்கு ஊட்டப்படுமேயன்றி ஆக்கப்படாது. உயிர், அவ்வாறு ஊட்டப்படுவதற்கு உயிரோடு உயிர்க்குக் கூட்டம் வேண்டும்.

அந்தக் கூட்டம் நிகழ்வதற்கு, இயற்கை செய்த உத்தியே ஒருவர் ஒருவரைக் கண்டதும் விரும்பும் காதல் உணர்வாகும்.

பிறந்து வளர்ந்து, பிள்ளைப் பருவம் கடந்தவுடன் உலகியல் உணவுண்டு பக்குவப் பட்ட இரண்டு உடல்கள், பிறிதோர் உடம்பு படைக்க இயற்கை தூண்டுகிறது.

இன்றேல் அவர்களோடு உலகம் நின்று விடும் உயிர்ப் பெருக்கத்திற்காகத்தான், இந்த காதல் துடிப்பு என்று தெரிந்து விடாதபடி, இயற்கை அதற்கு இன்பப் பூச்சுப் பூசியுள்ள திறப்பாடு எண்ணி எண்ணி வியக்கத்தக்க-தாகும்.

மலர்கள் தக்க பருவத்தில் மனத்தைத் தூதனுப்பி. வண்டுகளை வரவழைத்து, அந்த வண்டுகளுக்குத் தேனைப் பரிசளித்து, தன் இனம் பெருக்கும் விதைகட்கு வித்திட்டுக் கொள்வது போல், பெண்மையும், பக்குவம் பெற்றதும் பார்வைத் தூதனுப்பி, பக்குவ முடையான் ஒருவனை ஈர்த்து, இனம் பெருக்க லாகிய தன் செயல் முடித்துக் கொள்கிறது.

அந்தப் பார்வைத் தூதின் கவர்ச்சி யாற்றல், விடுபட இயலாவண்ணம் ஒரு காதலனை ஈர்க்கிறது. உணர்ச்சி மிகுதியி னால் அவன் கவிஞனாகி விடுகிறான்.

'அணங்குகொல்? ஆய்மயில் கொல்லோ? கணங்குழை மாதர் கொல்? மாலும் என் நெஞ்சு'.

இவள் தெய்வப்பெண்ணோ? மயிலோ? கனமானகுழை தெரிவதால் மனிதப் பெண்ணோ? என்னதென்று துணிய முடியாது என்மனம்மயங்குகின்றது என்று துவங்குகிறது வள்ளுவனாரின் இன்ப இயல்.

அவளை அணங்கு என்பதால், தெய்வத் தன்மையும் மயில் என்பதால் இயற்கையழகும் கனங்குழையனிந்த மாது என்பதால் செயற் கைப் பொலிவும் அவளிடம் குடிகொண்டிரு-ந்தமை தெளிவு.

ஆகவே இயற்கையழகு, செயற்கைப் பொலிவு, தெய்வ நலன் மூன்றும் ஒருபெண் ணிடம் இருக்கவேண்டும் என்று திருவள்ளுவர் விரும்பினார் என்பது இன்பத்துப்பாலின் முதற்குறளிலேயே வெளியிடப் படுகிறது.

காதல் உலகில், உள்ளத்திற்குள் செல்ல, உடம்புதான் பாலம் அமைக்கிறது. அதுவும் கண்ணின் பங்கு காதல் உலகில் பெரும் பங்கு எனலாம். இதயத்தின் கடிதத்தை விழிகளிற் படிக்கிறார்கள் காதலர்கள். அதனால்தான், வாய்ச் சொற்களுக்கு ஒரு பயனும் இல்லாமல் போய்விடுகிறது காதல் உலகில்!

'கண்ணொடு கன்னினை நோக்கு ஒக்கின் வாய்ச் சொற்கள் என்ன பயனும் இல'. என்று வாய்ச்சொற்கள் காதல் உலகில் கேலிப் பொருள் ஆகி விடுகின்றன.

இவ்வாறு கண்வழி நுழையும் காதல், இதய மண்டபத்தில் போய்க் கொலு வீற்றி ருக்கத் துவங்குகிறது. அங்கு, காதலனை காதல் முழுக்க முழுக்கத் தன்னடிக் கீழ்ப் படுத்திவிடுகிறது.

காதலன் மிகப் பெரிய போர் வீரன். களம்பல கண்டு, வெற்றி ஒன்றையே வீட்டி ற்கு எடுத்து வருபவன். மதகரிகளை நிதமும் பந்தாடிப் பொழுது போக்குகிறவன். இன்றோ, இந்த மெல்லியல் பாவையின் விழியம்புக்கு ஆற்றாது சுருண்டு வீழ்கிறான். என்றும் தோற்காத, யார்க்கும் தோற்காத நான் தோற்றேன்; நான் தோற்றேன் என்று கவிதை ஓலம் இடுகிறான். அந்த தோல்வி யை வெளியே சொல்வதில் பெருமிதம் உறுகிறான்.

'ஒண்ணுதற்கோஒ உடைந்ததே; ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் என் பீடு'

ஈட்டி கருங்காலி முதலிய மரங்களில், ஒரு புறம் நுழைந்து மறுபுறம் வெளிவந்து விடும் ஒருவண்டு. இது, ஒரு தாமரைக்குள் சென்று மதுவுண்கையில் மது வெறிகொண்டு தாமரை மீதேயே மயங்கி வீழ்ந்து கிடந்தது. இரவு நெருங்கியதால் தாமரை கூம்பி விட்டது. நள்ளிரவில வெறி தெளிந்த வண்டு, மெல்லிய தாமரை இதழ்களைத் குடைந்து வெளிவர இயலாமல், விடிந்தபின், சூரிய ஒளிக் கதிர் பட்டு, தாமரை இதழ் விரியும் வரையிலும் உள்ளேயே கிடந்தது. வலிய மரங்களைத் துளைத்த வண்டுக்கு, தாமரை இதழ்களைத் துளைக்க இயலவில்லை. காரணம், மலர் இதழின் பிடி அன்புப்பிடி.

இது போல்தான் வலிய ஆண்மையை, மெல்லிய பெண்மை தன் அன்புப் பிடியால் சிறைப்படுத்த முடிகிறது. முரட்டு ஆண்மை யைப் பண்படுத்தும் பொறுப்பை இயற்கை பெண்மையிடம் ஒப்படைந்திருக்கிறது.

'என் போர் ஆற்றல் எல்லாம், இம்மெல் லியலாலின் முன்பு,இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயிற்றே!' எனப்புலம்பும் வீரன் வாயிலாக. இவ்வழகிய கருத்தை வெளிப் படுத்துகின்றார் வள்ளுவனார்.

நானமும், வெட்கமும் பெண்மையின் தனிச் சீதனங்கள், பெண்கள் ஒருவருடன் ஒருவர் நெருங்கிப் பழகும்போது, வெட்கமும் நாணமும் வருவதில்லை.

இவற்றை ஒர் ஆடவனுடன் பழகும் போதே பெறுகிறாள். அப்போதே பெண் மையின் முழுநிறைவையும் உறுகிறாள். இந்த நிறைவோடு கூடிய பேரழகுப் பெட்டக

கத்தை, ஓர் ஆடவனுக்கு நல்கி, அவனையும், இன்பத்தில் நிறைவுறுத்தி, தானும் நிறைவுறு கிற போது, பெண்மை இவ்வுலகினில் தோன்றிய பெருநோக்கு நிறைவுகிறது.

பெண்மையின் அழகுக்கு அழகு படுத்து வது நாணம்.

''நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள், அஃது அவள் யாப்பினுள் அட்டிய நீர்''.

''கண்களவு கொள்ளும் சிறுநோக்கம்''
''ஒரு கண் சிறக்கணித்தாள் போலநகும்''
''யான் நோக்கும் காலை நிலன் நோக்கும், நோக்காக்கால் தான் நோக்கி மெல்ல நகும்''.

என்னும் சொல் மலர்கள் எல்லாம், பெண்மையின் மிக நுண்ணிய நளினப் பகுதியாகிய நாணுடைமைக்கு வள்ளுவர் எடுக்கும் மங்கல ஆரத்திகள்.

பெண்மை, அள்ளத் தொலையாக் கொள்ளை இன்பத்தைத் தன்னிடம் பொதிந்து வைத்திருக்கிறது. அந்தப் பெண்மை, தக்க ஒருவனுக்கு அதனை நல்கி, அவனை மகிழ் வித்து, தானும் மகிழ்ந்து போகத் தவிக்கிறது.

இந்த 'ஈத்துவக்கும் இன்பத்தை' யடைய பெண்மை தவிக்கும் தவிப்புக்கே காதல் எனப் பேரிட்டனர். பெண்மை ஐம்புலனுக்கும் ஆறா இன்பபளிக்கும் பேரின்பப் பெருநிலையம் என்று. அவனையடைந்த வள்ளுவக் காதலன் நன்றி மறவாமல் குறிப்பிடுகிறான்.

'கண்டு, கேட்டு, உண்டு, உணர்ந்து, உற்றறியும் ஐம்புலனும் ஒன்டொடி கண்ணேயுள' என்பது அவன் நன்றியுரை.

''காதல், மனித இன்பத்துக்கு மேம்பட்டது, தேவலோகத்துக் கனவைத் திருடி அனுபவிப்பது'' என்ற மேலை நாட்டறிஞர் ஒருவர் கற்று இங்கு நினைவுக்கு வருகிறது. அச்சத்தைப் போக்கி, பசியை நீக்கி, அன்பை வளர்த்து காமத்திற்கு அறவழி அமைத்து, குழந்தைகளைப் பேணி வாழையடி வாழையாகச் சமுதாயத்தை நன்னெறியிற் செலுத்துவதற்காகவே இல்லறம் என்னும் நல்லற வாழ்க்கையைக் குடும்பம் எனும் பெயரில் சமூகம் தோற்றுவித்தது.

இந்தச் சமூக அமைப்பு, கட்டுக்குலைந்து போய் விடாதபடி. அதனைக் கட்டிக் காத்து வரும் பெரியோர்கள் அயராது கவனித்து வருகிறார்கள்.

கன நேரத்தில் எழும் காதற் கவர்ச்சியில், காதலர்கள் இணைய துடிக்கிறார்கள். சமூக அமைப்பாளர்கள் இந்த கவர்ச்சிக்கு அப்பால் அமைந்துள்ள எதிர்கால வாழ்க்கையை எட்டிப் பார்க்கிறார்கள்.

இந்த காதலர்களின் கவர்ச்சி, கன நேரக் கவர்ச்சியா? இல்லை, வாழ்நாள் முழுதும் மாறாது நிற்கவல்ல நெஞ்சக் கவர்ச்சியா? என அறிந்து கொள்ளக் கால இடையீட்டை உண்டாக்குகிறார்கள் சமூகப் பெரியோர்கள்.

பெற்றோரும் சமூக அமைப்பாளர்களும் அடங்குவதால் காதலர்களுக்கு, சமூகமும் பெற்றோரும் அன்று முதல் இன்று வரை, தடைக்கற்களாகவே தப்பாமல் நின்று வருகின்றனர்.

பயம் அறியா இளங்கன்றுகள் ஆகிய இளங்காதலர்கள், இந்தச் சமுதாயப் போக்கால் அன்றிருந்து இன்று வரை பெருந்துயற்று வருந்துகின்றனர்.

துன்பமலையை இன்பக் கடலுக்குள் வீசி எறியும் வல்லாமை எல்லாத் காதலர்க்கும் இயலுவதில்லை.

காதலர்கள் நோக்கும் போக்கும் ஊரார் கழுகுக் கண்களுக்குப் புரிந்து போய் விட்டன. இவர்கள் களவைக் கற்பாக்கினால், அன்றி ஊருக்கும் உறக்கம் இல்லை. ஊரார்தாம் காதற் சுவரொட்டிகள்! சுவரை ஒட்டி நின்று கேட்பதும் அறிவிப்பதும் தான் இவர்கட்கு வேலை!

சிலரும் பலரும் சந்திகளில், மன்றுகளில் மூக்கில் உச்சிச் சுட்டு விரல் சேர்த்திப்பேசித் தீர்க்கக் காதலர்கள் வசதி செய்து தந்து விட்டனர். ஊரார், தங்கள் பழிப்புரையால் இவர்கள் காதற்பயிர் வளர உரம் சேர்க்கும் வசதி செய்து விட்டனர்.

''ஊரலர் கெவை எருவாக அன்னை சொல் நீராக நீளும் இந் நோய்'.

வளரும் காதல் உள்ளங்கள் குடும்ப எல்லையை விட்டு, ஊர் எல்லையைவிட்டு, வளர்ச்சிப் போக்குக்கு ஏற்ப, தம் அன்பின் எல்லையை அகலமாக்கத் தவிக்கின்றன.

வளர்த்த கரங்களும், பழகிய முகங்களும் தங்களோடு இத்தனை நாளும் வாழ்ந்த அன்புருவங்களை இழக்க இயலாமல் தவிக் கின்றன. அவர்கள் மாட்டும் குற்றம் இல்லை இவர்கள் மாட்டும் குற்றம் இல்லை.

யார் தாம் தங்கள் அன்புப் பிரதேசங்கள் கொள்ளை போவதை விரும்புவார்கள்?

இந்த இருவேறு போராட்டங்களுக் கிடையே யாரையும் குற்றம் சொல்லிக் கொண்டிருக்க நேரமில்லாமல், காதல் பயிர், அதன் பாட்டிற்கு வளர்ந்து கொண்டிருக் கின்றது. அன்றும் இன்றும் என்றும் உள்ள நிலையை அருமையாகப்படம் பிடித்து வைத் துள்ளது இந்த அழகுக்குறள்.

''ஊரவர் கௌவை எருவாக அன்னை சொல் நீராக நீளும் இந் நோய்!'

பிறர் வருந்தும் வருத்தம் தாளாமல், தாம் வருந்தித் துடிக்கும் உயர் பண்பின் முழுவடி வடிவத்தையும் பார்க்க வேண்டுமெனில், காதல் உலகத்திற்குத்தான் வர வேண்டும். காதலர் வாழ்க்கையில் ஒருவர் அடையும் துயர் அவ்வளவையும் மற்றவரும் அடைகின்றனர். ஏன்? அவரவர் இன்பத்திற்காக வருந்துவதை விட, தம் காதலர் உற்ற துன்பத்திற்காகவே காதலர்கள் மிகுதியும் வருந்துகின்றனர்.

''அறிவினான் ஆகுவதுண்டோ? பிறிதின் நோய் தந்நோய் போல் போற்றாக்கடை'' என்ற பிறர் துன்பம் உணர்வது அறிவின் பயனாக இருக்க, தன் துன்பம் மறந்து பிறருடைய துன்பத்திற்காகவே வருந்துவது காதலின் முடிந்த பயனாக விளங்குகிறது.

காதலனின் பிரிவால், உண்ணாது உறங் காது உடல் நலிந்து கிடக்கிருள் காதலி.

''ஏன் சூடாகச் சிறிது உணவு உண்டால் என்ன?' என்று தோழி கேட்கிறாள். 'என் நெஞ்சில் உள்ள காதலரை உள்ளே போகும் சுடுசோறு சுட்டு விடாதா?, என்று எதிர் பாராத ஓர் எதிர்க் கேள்வி கேட்கிறாள் தலைவி.

''நெஞ்சத்தார் காதலவராக, வெய் துண்டல் அஞ்சுதும் வேபாக்கு அறிந்து''.

மலரினும் மெல்லிய உணர்வுகளைச் சுமந்து பிறர் துயருக்கு வருந்தும் பண்பை வளர்த்து, மக்களின் வாழ்க்கையைப் பண் படுத்தி உயர்த்தவல்ல ஆற்றல் காதலுக்கு உண்டு என்பதன் காரணம் இங்கு விளங்கு கிறது. சுடுசோறு காதலனைச் சுடும் என்பது எத்தகைய அருள் உணர்வின் முதிர்ச்சிவெளிப் பாடு! மனித இனத்தைக் கூடி வாழும் உயிர் இனத்தின் சேர்ப்பார்கள் உயிர் இயலார். இயன்ற பொழுதெல்லாம் கூட்டமாகக்கூடி இருப்பதையே மனிதமனம் விரும்புகிறது. இன்றும் கூட்டத்தை கண்டவுடன் நாம் நம்மையறியாமல் அதைப் பார்க்கச் செல்வது, கூடி வாழ்ந்து பழகிய நம் பழக்கமாகிய இயல் பூக்கத்தின் மிச்சத்தைக் காட்டுகிறது. வாழ்க் கையில் எப்பொழுதும் எல்லோராலும் கூடி யிருக்க இயலுவதில்லை. அதனால் ஏற்படும் ஏக்கத்தைப் போக்கவே, பண்டிகை, திருவிழா முதலிய நன்னாட்களை ஏற்படுத்தி, (கூடி வாழும்) அந்த ஏக்கத்தை நாம் நிறைவு செய்து கொள்கிறோம்.

ஆகவே பிரிவு எல்லாப் பிரிவினராலும் வெறுக்கப்படுகிறது. அதிலும், ஒரு நொடியும் பிரியாமல், ஒட்டி வாழத் துடிக்கும் காதலர் வாழ்வில், பிரிவு மரணத்திற்கு அடுத்த துன்பமாகக் கருதப்படுகிறது.

'வாளற்றுப்புறகென்ற கண்ணும், அவர் சென்ற
நாள் ஒற்றித் தேய்ந்த விரல்'.

என் காதலர் பிரிந்து சென்ற நாட்களைச் சுவரில் குறித்திருக்கிறேன். அவற்றை எண்ணி எண்ணி என் விரல்கள் தேய்ந்து போயின. அவன் வரும் வழியை நோக்கி நோக்கி, விழிகளும் தேய்ந்து போயின என்று குறட் காதலி கண்ணீர் விடுகையில், அவளுக்காக நம் கண்களும் பணிக்கின்றன.

அவனைப் பிரிந்த அவள், உடல். கொஞ்சம் கொஞ்சமாய்க் கண் வழியாய்க் கரைகிறது.

அவன் அங்கு, புறப்பொருள் சேர்க்கப் போய் இருக்கிறான். ஆனால் இங்கு, அவன் பெற்ற எல்லாப் பொருள்களிலும் சிறந்த பொருள் மெல்ல மெல்லத் தேய்ந்து கொண்டிருக்கிறது.

அவன் புறப்பொருள் தேடப் போயிருக்கிறான். ஆனால் இங்கு அவன் அகப்பொருள் அழிந்து கொண்டிருக்கிறது.

அவள் கண்கள் தரம் இழந்தன, கைவிரல்கள் நலம் இழந்தன.

அவள் உறுப்புக்கள் அவனுக்கே உரியவை அவனுக்குச் சொந்தமான பொருட்களை, அப்படியே பங்கப்படாமல் பத்திரமாக ஒப்படைக்க முடியாதோ என்ற ஏக்கம்தான் இவளுக்கு! இந்தக் கண்களும்; விரல்களும் பிற உறுப்புக்களும் இப்படித் தேய்கின்றனவே இவை, அவனுடையவை யாயிற்றே!

இக்கண்களும் கைகளும் அவன் உடன் உறைந்த காலத்தில் அடைந்த பேரின்பத்தில் பெரும் பங்கு கொண்டவை. இந்தக் கண்கள் தாம், முதன் முதலில் அவனைக் கண்டு, உறவுக் காவியத்தின் முதல் அத்தியாயத்தை முத்து முத்தாய் எழுதியவை!

இந்த விரல்கள் அவன் முதுகில் போட்ட கோலங்கள் எத்தனை! அவனைத் தொட்டுத் தளிர்த்தவைகள் இன்று சுவரைத் தொட்டுத் தேய்கின்றன. இன்று இவை, மூர்த்தியில்லாத கோயில்கள்! பிரிவுதான் எத்தகைய கொடியது! வள்ளுவர் காட்டும் பிரிவோவியங்கள் கற்பார் உள்ளதைக் கரைந்துருகச் செய்ய வல்லவை.

பிரிந்தவர் கூடினால் பேசல் வேண்டுமோ? என்பார்கள். ஆனால் வள்ளுவர் காட்டும் காதலி, ஊடலால் பேசாமல் பேசுகிறாள் பிரிவுரைத்தவன் கண்ணருக்குப் புத்திபுகட்ட நினைத்து, உள்ளத்தைக் கல்லாக்கி அவன் விருப்பத்திற்கிணங்காமல் இருக்க நினைத்துப் பள்ளியறை செல்கிறாள். ஆனால், அவன் படும்பாடு கண்டு அந்த மெல்லிய பெண்மை உள்ளம் கரைந்துருகிப் போகிறது.

''புலப்பல் எனச் சென்றேன் புல்லினேன், நெஞ்சம்
கலத்தல் உறுவது கண்டு''.
''நினந்தீயில் இட்ட நெஞ்சினார்க்கு உண்டோ,
புணர்ந்துடி நிற்போம் எனல்''.

விடாப் பிடியாக கூடிக் கொண்டிருப்போம் என்ற, அனல் கண்ட மெழுகாய் உருகும் நெஞ்சுடையவர்கள், முயல்வதால் பயன் இல்லை என்று தனக்குத்தானே கூறி அமைதி அடைந்து கொள்கிறாள் காதலி.

காதல் வாழ்க்கையில் இத்தகைய பிறர்க்கும் பயிற்சி பெற்றவர்கள், இந்த அரும் பண்பை வெளியுலத்திலும் மேற்கொண்டு வாழும் போது, அருளுடையவர்களாகவும், சினமற்றவர்களாவும், இன்னா செய்யாதவர்களாகவும் போற்றப்படுகின்றார்கள்.

வள்ளுவர் அகம், மக்களைப்புற உலக வாழ்விற்குத் தயார் செய்து அனுப்புகிறது.

பிறரை அடக்கிவென்றால்தான், மதிப்போடு வாழமுடியும் என்று காணப்படும் உலகத்தில், அன்புடையவர்களிடத்தில் அடங்கித் தோற்று விடுவது நல்லது என்று காதல் வாழ்க்கை உணர்த்துகின்றது.

'ஊடலில் தோற்றவர் வென்றார்; அது மன்னும்
கூடலிற் காணப்படும்' என்பது குறள்.

ஊடும்போது காதலன் காதலியை எதிர்த்து அடக்கிவெல்ல முயல்வதில்லை. ஆனால் பணிந்து தோற்க முன் வருகிறான். இந்த அகிம்சை முறையினால், குற்றம் கண்டு ஊடிய காதலியின் நெஞ்சமே கசிந்து உருகுகிறது.

'பன்மாயக்கள்வன் பணிமொழி அன்றோ நம்
பெண்மை உடைக்கும் படை'
என்று தலைவி உருகுகிறாள்.

இதையே, வெளியுலகத்தில் அன்புடையாரிடத்து மட்டும் அல்லாமல், அன்பில்லாதவரிடத்திலும் கையாகும் போது அது 'சால்பு' என்னும் அரிய பண்பாக உருவெடுக்கிறது.

'சால்பிற்குக் கட்டளை யாதெனின், தோல்வி துலையல்லார் கண்ணும் கொளல்' என்பது புறக்குறள்.

ஒரு பெண்ணிடம் ஒருவனுக்கு ஏற்படுகிற அரிய சந்திப்பு, அவன் வாழ்க்கையையே அர்த்தமுடையதாக்கி விடுகிறது. அவன் கொண்டிருந்த அகந்தை, சிறுமையாவும் அந்த இனிமை மண்டிய சந்நிதியின் முன்பு காணாமல் போய்விடுகின்றன.

பெண்மை ஆடவர்களின் சிறுமை. அகந்தை கொடூரம் முதலிய தீயபண்புகளைத் தொலைத்து விடவல்ல தெய்வபலிபீடம் காதல் ஒருவர் ஒருவர்க்காக வாழப் பக்குவம் செய்யும் நற்பள்ளிச்சாலை. தனக்கெனவாழும் தனி மிருகத்தின் மனக்கோனலை நிமித்தும் மந்திரச் செங்கோல் காதல்

வள்ளுவரின் இன்பத்துப்பால், இந்த இனிய எண்ணங்களைக் கற்கும் போது நமக்கு எழுப்புகிறது.

ஒரு நாட்டு மக்களின் மனவளத்தையறிய வேண்டுமென்றால், அந்த நாட்டு மக்களின் காதல் இலக்கியத்தைப் படித்தால் போது மானது என்ற மேனாட்டறிஞர் கருத்து மிக உண்மையானது. ஏன்எனில், பழந்தமிழ் மக்களின் மெல்லிய அருள் உள்ளம், அன்பு வளம் முதலியவையெல்லாம் திருக்குறள் இன்பத்துப் பாலில் காணக் கிடப்பதுபோல் வேறு எங்கு போய் நாம் காண இயலும்?

திருக்குறள் காட்டும் காதல் சோலை, பொதுமகளிர் நுழையாத புனிதப்பூங்கா; அங்கு, கண்ணகிகளின் கண்ணீர் வெள்ளத்தில் கோவலர்கள் படகு விட வாய்ப்பில்லை.

அது சமுதாயச் சாக்கடைகள் கலவாத தனி இன்பத் தீவு : கற்பகக்காவு.
ஆம், கற்பு அகக் காவு.

நன்றி, கோவை வானொலி
30—10—88



# 'நாடகத் தமிழின் நல்லாசிரியர்'



அமரர் கலைஞர் தி. க. சண்முகம்

தமிழ் நாடக மேதை தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகளின் 101-வது பிறந்த நாள் விழாவில் எழுதிய கட்டுரை வானொலிப் பேச்சு.

'ஒரு நாடகம் சிறப்பாக இருக்க வேண்டு மானல் அந்த நாடகத்தில் பங்கு கொள்ளும் நடிகர்களிடையே ஒழுங்கும், நியதியும், கட்டுப்பாடும் இருக்க வேண்டும்.'

ஆம், சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன் தமிழ் நாடக மேடை, சீர்கெட்டிருந்த அந்த நாளிலே, முன் குறிப்பிட்டவாறு குரல் கொடுத்தார், ஒரு பெரியார். அந்தப் பெரியார் தாம் தமிழ் நாடகத் தலைமையாசிரியர் தவத் திரு சங்கரதாஸ் சுவாமிகள்.

தூத்துக்குடியில் 1867இல் தோன்றிய சுவாமிகள் 1922இல் புதுவையில் மறைவெய் தினர். புதுவையில் சுவாமிகளின் சமாதி மண்டபம் கட்டப்பட்டுள்ளது.

சுவாமிகள் மறைந்தபோது அக்காலத்தில் வாழ்ந்திருந்த மற்ருெரு நாடக ஆசிரியராகிய உடுமலை முத்துச்சாமி கவிராயர் அவரது பிரிவாற்ருமையால் மனமுருகிப் பாடிய பாடல் இது.

சுந்தரராவ் முதலாகத்
துலங்கனந்தன் வரை வகுத்துச்
சொல்லுங்காலை,
எந்த நாடகத் தலைவர்
நீயின்றி நடனவரங்
கேறி நின்ருர்?
அந்த மார்க்கண்டனுக் கன்று
அரனளித்த வரமுனக்கீண்
டருமை யாச்சோ!
சந்தமார் சங்கரதாஸ்
சாமிநினை யாங் காணுங்
தருண மன்றே!

சுவாமிகளிடம் அந்த நாளில் நாடகப் புலவர்கள் எவ்வளவு மதிப்பு வைத்திருந்தனர் என்பது இப்பாடலின் மூலம் நமக்குத்தெரிய வருகிறது. தமிழ் நாடகத் துறைக்கு அடிப் படைச் செல்வம் வழங்கிய வள்ளல் என்று அவரைச் சொல்லாம். ஆம்.,. தமிழ் நாடகத் துறையில் சங்கரதாஸ் சுவாமிகள் தலைமை ஆசானகப் பொற்றப்பெறுபவர். அவர் ஏறத் தாழ நாற்பது நாடகங்கள் எழுதியிருக்கிருர். அவை பெருபாலும் நமக்குத் தெரிந்த பழங் கதைகள் தாம். வடமொழி நாடகமாகிய மிருச்சகடியையும், சேக்ஸ்பியரின் ரோமியோ ஜுலியத். சிம்ப லைன் ஆகிய நாடகங்களையும்,

மணிமேகலை, பிரபுலிங்க லீலை ஆகிய காப்பியக் கதைகளையும் சுவாமிகள் நாடகமாக்கியிருக்கிறார்.

அவருடைய நாடக அமைப்புத்திறன், அந்த அமைப்பிலே நாம் காணும் அழகு, நாடகப் பாத்திரங்களின் வாயிலாகப் பாடல்களிலும், வசனங்களிலும் அவர் வெளியிடும் கருத்துக்கள், அந்தக் கருத்துக்களால் நாடகம் காண்போர் அடைந்துவந்த பயன் இவற்றை எல்லாம் எண்ணிப் பார்க்கும் போதுதான் சுவாமிகளின் நாடக நல்லிசைப் புலமை நமக்கு நன்றாகத் தெரிகிறது.

உரைநடை அதிகமாக அமுலுக்கு வராத பழங்காலத்தில் எழுதப்பட்ட நாடகங்களாதலால் சுவாமிகளுடைய நாடகங்களில் பெரும்பாலும் பாடல்களே நிறைந்திருக்கும். இந்த நாளைப் போல் மேடையில் நடிப்பவருக்காகத் திரை மறைவிலிருந்து மற்றொருவர் பாடும் இரவல் குரல் வழக்கமெல்லாம் அப்போது இல்லை. தாங்களேதான் பாடுவோம், சிரித்தாலும் பாட்டு, அழுதாலும் பாட்டு, கோபித்தாலும் பாட்டு. ஒருவருக்கொருவர் உரையாடிக் கொள்வதும் எல்லாம் பாட்டு மயந்தான். வசனங்கள் பெரும்பாலும் பாட்டின் பொருளை விளக்குவதாகவே இருக்கும்.

வெண்பா, கலித்துறை, விருத்தம், சந்தம், வண்ணம், ஓரடி, நொண்டிச் சிந்து, கலிவெண்பா, கும்மி, தாழிசை, இவ்வாறு பல வகைப்பட்ட பாடல்களாலும், சிறுபகுதி உரையாடல்களாலும் எழுதப் பெற்றவை தாம் சங்கரதாஸ் சுவாமிகளின் நாடகங்கள்.

அந்தக் காலத்தில் நடந்து வந்த நாடகங்களில் சுவாமிகளின் பாடல்களைப் பாடாத நடிகர்களே இல்லை. கட்டுப்பாடு இல்லாமல் மனம் போன போக்கில் சொந்தமாகப் பேசி வந்த நடிகர்களை ஒழுங்கு படுத்தவே பிற் காலத்தில் சுவாமிகள் வசனங்களும் எழுதத் தொடங்கினார். அந்த நாளில் பிரபலமாக இருந்த சிறுவர் நாடகக் குழுக்களோடு அவர் தொடர்பு கொண்டபோது தான் வசனங்கள் அதிகமாக எழுதினார் என்று சொல்ல வேண்டும்.

சுவாமிகள் நல்ல இசைஞானம் உள்ளவர் சந்தம், வண்ணம் முதலியவற்றைப் பாடுவதில் மிகத்திறமை பெற்றவர். தாளவிந்நியாசங்களை நன்கு அறிந்தவர். கஞ்சிராவித்வான் புதுக்கோட்டை மாண்பூண்டியா பிள்ளை அவர்கள் சுவாமிகளின் சந்தப்பாடலைப் போற்றி அவரைத் தமது சுவீகார புத்திரராக ஏற்றுக் கொண்டார். ''புலவரேறு'' என்று கொண்டாடப்பெற்ற பழனி தண்டபாணி சுவாமிகளிடம், சுவாமிகள் சில காலம் பாடங்கேட்டார். இளமையிலேயே வாழ்க்கையில் வெறுப்புற்று ஆண்டிக் கோலத்துடன் முருகப் பெருமான் கோயில் கொண்டிருக்கும் திருத்தலங்களுக்கெல்லாம் அவர் யாத்திரை செய்தார். அதன் காரணமாக அவரை எல்லோரும் 'சுவாமிகள்' என்றே அழைக்கத் தொடங்கினார்கள். முழுப் பெயரையும் குறிப்பிட வேண்டியதில்லை. சுவாமிகள் என்றாலே போதும். நாடகத் துறையில் அந்தச் சொல் அவர் ஒருவரைத் தான் குறிக்கும்.

சுவாமிகளின் எந்த நாடகத்தை எடுத்துக் கொண்டாலும் ஒழுக்கமும், தர்ம நெறியும் வலியுறுத்தப்பட்டிருப்பதைக் காணலாம்.

'நவரசம்' அதாவது உவகை, பெருமிதம் சிரிப்பு, கோபம், வியப்பு, வெறுப்பு, சோகம், பயம், சாந்தம் இப்படி ஒன்பது சுவைகள் சொல்லப்படுகின்றன அல்லவா? இந்த பாவ உணர்ச்சி குன்றாமல் அந்த அந்தக் கட்டத்திற் கேற்றவாறு பாடல்கள் அமைக்கும் திறமை சுவாமிகளிடமிருந்தது. பாட்டின் மெட்டும், அதில் அமைக்கப்படும் சொற்களும் பாவத்தை வெளிப்படுத்துவனவாகவே அமையும். சத்தியவான் சாவித்திரியை வர்ணித்துப் பாடுகிறான்.

அந்தர மதிபோல் முகம் காணும்-நல்ல
அஞ்சுகம் மொழியைக் கேட்டு
நாணும்-கொடும்
ஆலம் மஞ்சளான கண்கள்
நாடுகின்ற வேளை மனம்
கோணும் மையல் தோணும்
கந்தகம் கமுகு மலர்ச் செங்கை-இவள்
காமனுரத்திக்கிளைய தங்கை-இரு
காது வள்ளை போலும் முல்லை
ஆன பல்லை ஓதும் மெல்லை
சங்கை கொள்ளும் மங்கை

உபமானங்கள் எவ்வளவு சரளமாகப்பாட்டில் அமைந்திருக்கின்றன பார்த்தீர்களா?

தர்க்கப் பாடல் ஒன்று சீமந்தனி நாடகத்தில் பாடுவது.

சீமந்தனிக்கும், சந்திராங்கதனுக்கும் முதற் சந்திப்பு! ஊர் பெயரெல்லாம் விசாரித்து முடிந்த பிறகு திருமணத்தைப் பற்றிப் பேசுகிறான் சந்திராங்கதன்

இன்னும் மணம் நீ செய்யா
திருப்பதுவும் ஏது?
இச்சை கொண்டேன் சொல்லுதற்கு
வச்சையுமாகாது.
இதற்கு சீமந்தனி விடையளிக்கிறாள்:
அடுத்து முயன்றாலும் எல்லாம்
ஆகும் நாளல்லாது
ஆகுமோ மரம் பருவம்
இன்றிப் பழுக்காது.
„அடுத்துமுயன்றாலும் ஆகு நாளன்றி
எடுத்த கருமங்கள் ஆகா—"

என்ற பழம் பாடல் ஒன்றை, இந்தப்பாட்டில் எவ்வளவு அருமையாக வைத்திருக்கிறார் பாருங்கள்.

நகைகளின் பட்டியல் வேண்டுமா உங்களுக்கு? சீமந்தனியில் அவலோகராஜன் தன்னிடம் சயாகம் கேட்க வந்த ஒரு வாலிபனுக்கு பெண் வேஷம் போட்டச்விடு சொல்லுகிறான். பாடலைக் கேளுங்கள்.

நெற்றிச் சுட்டி ஜடைபில்லை கொப்பு
நிகரறு தலையணி இருபிறை வைப்பு
அட்டிகை வைரம் பட்டை சிவப்பு
அழகிய பதக்கம் உலக மதிப்பு
கம்மல் ஜிமிக்கி புல்லாக்கொடு நத்து
கண்ட சரப்பளி கண்டிகை முத்து
காசுமாலை கடிகாரச் சங்கிலி
கம்பிகாரை பொன்சன்னச் சங்கிலி
வாகு வலைய மொடு காப்புக் கொலுசு
வளையல் கங்கணவகை பலபல தினுசு
பச்சை நீலம் முதலாம் நவரத்னம்
பதித்ததாகப் பத்து விரலுக்கு மோதிரம்
இறுக்கி மேலே பூட்டும் இடை
ஒட்டியாணம்
இணை முகப்பு வைரம் கழற்காய்
பிரமாணம்
பாதரசம் கிண்கிணி தண்டை
மயங்கை
பணித்த காலாழி பீலி மிஞ்சி சதங்கை

இப்படியே பாட்டுத் தொடர்கிறது.

நகைகளின் நாகரீகம், கழுத்தில் வெறும் ஒரே ஒரு முத்துச் சரத்திற்கு மட்டும் வந்திருக்கும் இந்தக் காலத்துப் பெண்கள் இந்த நகைகளின் விபரங்களைக் கேட்டாலே மூர்ச்சை போட்டு விடுவார்களல்லவா?

பிரகலாதன் நாடகத்தில் இரணியன் பாட்டு; மாயாவி மகாவிஷ்ணு எங்கிருந்தாலும் கொண்டு வருமாறு கூறுகிறான்; அதற்கான வழிகளையும் சொல்லுகிறான், பாடல் இரணியனுடைய செருக்கிலேயே பேசுகிறது பாருங்கள்.

ஈட்டு தான தவம் நாட்டுவாருடலே
ஈட்டி மீதில் உறவாட்டுவீர்
காட்டிலே எரியை மூட்டி ஓமநிலே
காட்டுவார் உயிரை ஓட்டுவீர்

எவ்வளவு அற்புதமான சந்தம் பாருங்கள் !

எத்தான வித்தை பல கற்றே
ஒளித்தவன்
இருப்பானதைப் புகலுவேன்
எப்பாடுபட்டு மவனைப் போயிழுத்துவர
இப்போது சித்தமிசைவீர்

பாத்திரங்களின் பண்புக்கு ஏற்றவாறு சொற்களைப் பயன்படுத்துவது சுவாமிகளுடைய தனிச்சிறப்பு. கருத்துச் செறிவு நிறைந்த சுவாமிகளின் வசனத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு, 'அபிமன்யு சுந்தரி' நாடகத்தில் சுந்தரி துரியோதனன் மகன் இலக்குண குமாரனுக்கு மனைவியாகப் போவதை எண்ணி மனம் வருந்துகிருள், மேளதாள சத்தங்கள் அவளது காதையும், நெஞ்சையும் துளைக்கின்றன. அந்தச் சமயத்தில் அபிமன்யு பூச்செண்டுக்குள் வைத்தனுப்பிய ஓலை வந்து சேருகிறது. உடனே மிகுந்த மகிழ்ச்சியோடு தோழியிடம் பேசுகிருள்.

'அடிதோழி, தரித்திரனுக்கு தனப்புதையல் கிடைத்தது போலும், கடலிலே அமிழ்ப்பவனுக்கு கப்பல் உதவுவது போலும், பிறவிக் குருடனுக்கு கண்ஒளி விளங்கப்பெற்றது போலும் என் பிராணனைக் காப்பாற்ற இந்தக் கணையாழி உதவிற்று. சற்று நேரத்திற்குமுன் இலக்கண குமாரனுக்கு 'நான் தேவி-நான் தேவி' என்பதாக முழங்கிய மேளதாள வகைகளைக் கேட்டு வருந்திக் கொண்டு இருந்தேன், இப்பொழுது அவ்வகை வாத்தியங்கள் எல்லாம் என்னைத் தைரியப்படுத்தி தேறுதலைச் சொல்வது போல் ஒலிக்கின்றன. எப்படியென்ருல் துந்துபிகள் எல்லாம் தும் தும் என்று ஒலிக்கின்றன, சங்கங்கள் எல்லாம் பம்பம் என்று முழங்குகின்றன, தாளவகைச் சல்லரி, மல்லரி, கரடிகைகளோ தீம் தீம் என்று சப்திக்குகின்றன, முரசு, பேரிகை, மிருதங்கள் தோம் தோம் என்று தொனிக்கின்றன.

ஆகவே இவ்வகை வாத்திய வகைகள் ஒன்றுகூடி தும், பம், தீம், தோம், துன்பம் தீந்தோம் என்ற பொருளைக் கொடுக்கலாயின. இனி நமக்கு யாதொரு குறையுமில்லை, நானே பாக்கியவதி, அதிருஷ்டசாலிப் பெண்.'

என்ன அழகான வசனம் பார்த்தீர்களா? கலித்தொகை, குறுந்தொகை, திருக்குறள், நாலடியார் முதலிய சங்க இலக்கிய நூல்களெல்லாம் சுவாமிகளுக்கு மனப்பாடம், அவருடைய பாடல்களிலும் வசனங்களிலும் இவை நிறைந்து கிடப்பதைக் காணலாம்.

சுவாமிகள் ஒரு நாடகத்தை ஒரே நாளிரவுக்குள் எழுதி முடிக்கும் ஆற்றல் வாய்ந்தவர்.

தகவல் : நாடகப்பணி

அருணகிரி



# ஜாதிகளால் மனித குலம் இழிவு படலாமா?



K. சீனிவாசப்பெருமாள் B.A.
34-13வது வீதி
T கோட்டாம்பட்டி
மகாலிங்கபுரம் Po.
பொள்ளாச்சி-642 002

உழைப்பதற்கு
சரிவர
வாய்ப்பு
கிடைக்காத
உத்தமர்களை
ஏழைகள்
என்று
ஏமாற்றி
ஊருக்கு வெளியே
ஒதுக்கி வைத்த
கொடுமையை
ஒத்துக்கொண்டதற்கு
அங்கீகார
அடையாளந்தான்]
அடிமைத்தன
ஜாதிகளா?

ஃ ஃ

உழைப்பை
சரிவர
அளக்கும்
சமத்துவக்
கருவியை
உருவாக்கத்
தெரியாமல்
உழைப்பை
ஜாதியால்
அளந்தால்
உழைப்புதான்
உருப்படுமா?
உழைப்பின்
மதிப்பறியாத
ஜாதிகள்தான்
உருப்படுமா?

ஃ ஃ

உழைப்பை
நியாய
ஊதியங்களால்
அளக்கும்
சுதந்திரம்
சிறை
செய்யப்பட்டதால்தானே
அடிமைத்தன
தீண்டாமையால்
உழைப்பே
அளக்கப்பட்டு
அப்பன்
ஜாதியே
மகனுக்கு
தொழிலாகியது!
அந்த

அடிமைக்கொடுமை
விடுதலை
நாட்டிலாவது
விடுதலை
பெற வேண்டாமா?

❋ ❋

வாழ்க்கை
அளவுகோல்கள்
உழைக்கும்
வயிற்றிலிருந்து
ஆரம்பமாகாமல்
வரட்டு
ஜாதிகளிலிருந்து
ஆரம்பமானால்
நமது
சுதந்திரமும்
ஜாதிகளுக்கு
அடிமை
ஆகி விடாதா?

❋ ❋

காலத்தாலும்
அறிவியல்
கருவியாலும்
அப்பன்
தொழிலே
அப்பனுக்கு
அன்னியமாகும்போது
மகனுக்கு மட்டும்
தொழிலால்
வந்த
ஜாதிகள்
எப்படி சொந்தமாகும்?

ஜாதிகள்
கொடுக்க மறுக்கும்
சமத்துவத்தை
அரசு
சலுகைகளால்
சில
ஜாதிகளுக்கு
சொந்தமாக்கினால்
ஜாதிகளெல்லாம்
சமத்துவமாகி விடுமா?
அல்லது
சலுகைப் போட்டியில்
ஜாதிகள்
சமத்துவத்தையே
சாகடிக்குமா?

பணத்தால்
வந்த
வேற்றுமைகளை
பணத்தால் தானே
போக்க முடியும்!
தொழில்களின்
வித்தியாச
விலைகளால்
ஏற்பட்ட
ஜாதிபேதத்தை
தொழில் உழைப்பு
விலைகளின்
சமத்துவத்தால்
ஒழிக்காமல்
கல்வி
சலுகையாலும்
வேலை
கடன்
சலுகையாலும்
ஜாதிகளை
வேரறுக்க முடியுமா?

உழைப்பில்
குறைந்த
ஒய்வுகளை
கல்வி
கலை
கலாச்சாரத்திற்கு
உயர் விலைக்கு
விற்றவைகள்
உயர்ந்த
ஜாதிகளாகி
விட்டதா?



தாழ்ந்த
ஜாதிகளின்
பயனில்லாத
ஒய்வுகளை
பயனுள்ள
பணமாக
மாற்றி விட்டால்
உயர்ந்த
ஜாதிகள்
அவைகளின்
உயர்வினை
தடுக்க முடியுமா?



பிறக்கும் போதும்
இறக்கும் போதும்
உள்ள
சமத்துவம்
நாம்
வாழும் போது
மட்டும்
வகையாக
இல்லை என்றால்
நமக்கு
வாழத் தெரியவில்லை
என்று
பொருளா?
அல்லது
நாம்
மனிதர்களாக
வாழத் தகுதியில்லை
என்று
பொருளா?



நாம்
ஜாதிகளுக்காக
கொடுக்கும்
சலுகைகளை
உழைக்கும்
தொழிலின்
அடிப்படை
ஊதிய
நிலைகளுக்காக
உயர்த்தினால்
ஜாதி
சண்டைகள்
உழைப்பு
போட்டிகளாக
மாறி
இந்நாட்டை
ஏன்
உயர்த்தாது

(முற்றும்)

# முத்தமிழ் நாடகம் வளர்த்த முன்னோடிகள்



'நாடகப்பணி' அருணகிரி

முத்தமிழில் மூன்றாவது தமிழான நாடகக் கலைத் தமிழில் வித்தகராக வாழ்ந்த மூவர்கள் தான் சங்கரதாஸ் சுவாமிகளும், பரிதிமாற் கலைஞரும், பம்மல் சம்பந்தனாரும்.

நலிந்து போய்க்கொண்டிருந்த நாடகப் போக்கின் நிலையை மாற்றி நிமிர்ந்து நடை போட வைத்து இருபதாம் நூற்றாண்டில் அதற்கோர் எழுச்சியூட்டியவர்கள்தான் இம் மூவரும்.

அவர்கள் போட்ட ராஜபாட்டையில் ஏனோதானோவென்று நடைபோட்டு வேட்டை யாடிக் கொண்டுதான் இதுதான் நாடகம் என்று எதையுமே சொல்லிக்கொண்டு இப் போதெல்லாம் மேடையேறி விடுகிறோம் நாம்.

பாடுபட்ட பரம்பரையைச் சேர்ந்தவர் களாக இருந்தாலும், பலனை அனுபவிக்கும் தலைமுறையைச் சார்ந்தவர்களாக இருப்ப தால் அந்த முன்னோர்களுக்கேற்ற பின்னோர் களாக இருக்க மறந்து வருகிறோம்-அல்லது மறுத்து விடுகிறோம்.

சேவையாக இருந்த அவர்களுடைய செயல்களெல்லாம் இன்று நமக்குத் தேவையா என்று வினாக்குறி எழுப்பிக் கொண்டு விடுகி றோம். அவர்கள் கட்டிய மாளிகை தேவை, ஆனால் அவர்கள் காட்டிய மார்க்கங்கள் தேவையில்லை. அவர்கள் வைத்த மரத்தின் நிழல் தேவை. ஆனால் அவர்கள் காத்த தரத் தின் நிலைதேவை இல்லை.
என்ன நியாயம்?

நாடக மூவரான அவர்களை நெஞ்சார நாடும் ஆவலை வளர்த்துக் கொள்வோம். நன் றிக்காக மட்டுமல்ல! நாம் நாடகத் தொழிலில் நன்று செய்யவும் — வென்று வாழவும்தான்!

சுவாமிகள் என்றாலே தமிழ்க் கலைஞர் களுக்கு சங்கரதாஸ் சுவாமிகளின் நினைவு தான் வரும். அவரது நாடகப் பாடல்களை யும் வசனங்களையும் பாடி, பேசி நடித்தோரும் நடிப்போரும் ஏராளம். தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள்தான் தமிழ்நாடக உலகில் திருப்பு முனையை ஏற்படுத்தியவர் எனலாம். நாடகக் குழு அமைப்பிலும் தயாரிப்பு முறையிலும், ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் உயர்வையும் புகுத்தி வெற்றி கண்டவர் இவர். நாடக ரசனையைத் தரமாக்கிய பெருமை இவருக்கு உண்டு.

இவருக்கு முன்பு இசைப்பாடல்களும் ஆங்காங்கே ஒரிரு சிறு உரையாடல்களுமாகத் தான் நாடகங்கள் இருந்தன. இவர்தான் பெருமளவு வசனம் என்ற வகையில் உரை யாடல்களைப் பயன்படுத்தி நாடகங்களை எழுதித் தயாரிப்பதில் முதன் முதலில் ஈடுபட்டார். இவர் இயற்றிய நீண்ட உரையாடல்கள் அக்கால மக்களால் 'தமிழ் வசனம்' என்று அழைக்கப்படுமளவுக்கு புகழ் பெற்றிருந்தது. பண்டிதர் முதல் பாமரர் வரை கண்டு களிக்கும் நாடகங்களைப் படைத்தவர் இவர்.

இவரே நடிகர்-நாடகாசிரியர் பயிற்சி யாளர்-தயாரிப்பாளர் சந்தங்கள் நிறைந்த எளிய செந்தமிழ்ப் பாடல்களைக் கொண்டு சிறந்த நாடகங்களைத் தந்துள்ளார். தென் தமிழ் மாவட்டங்களில் இன்னும் இவரது நாடகங்கள் இணையிலாப் புகழோடு நடந்து

கொண்டிருக்கின்றன. அக்காலத்தில் நாடக உலகில் தமிழிசையைப் பரப்பிய தொண்டர் தான் தவத்திரு சுவாமிகள்.

இவரது தலைமாணாக்கர் — கலைமாணாக்கர் தான் அவ்வை டி. கே. சண்முகம். இன்றும் இவருக்கு சீடர்கள் ஏராளமாக இருக்கின்றனர். இவரது நாடகங்களில் நடித்து பண்பட்டவர்கள் தமிழ்த் திரைப்படங்களில் தலை சிறந்தவர்களாக இருந்தனர்-இருக்கின்றனர்.

இருபதாம் நூற்றாண்டின் முதற் காலகட்டத்தில் இவர் மூலம் ஏற்பட்ட நாடக எழுச்சி தான் இன்றைய தமிழ் நாடக வளர்ச்சிக்கு ஆணிவேராகும்.

தமிழ் நாடகப் பேராசிரியர் என்ற தகுதி மிக்க புகழுக்குரிய பரிதிமாற் கலைஞர் தமிழார்வமிக்க தகை சான்றோர். தம்முடைய சூரியநாராயண சாஸ்திரி என்ற பெயரை தமிழ்ப் பெயராக மாற்றிக்கொண்டவர். தமிழ் பேராசிரியராகப் பணியாற்றிக் கொண்டே தமிழ் நாடகத் தொண்டுகள் செய்து வந்தவர்.

வடமொழியிலும் ஆங்கிலத்திலும் உள்ளது போல் வளமார்ந்த தமிழிலும் நாடகம் வளர்ச்சி பெறவேண்டுமென்று விரும்பியவர் பரிதிமாற் கலைஞர். அதற்காக அவரே நாடகங்களை எழுதினார். ஆங்கில வடமொழி நாடக மரபுகளைப் பின்பற்றி தமிழில் புதியநாடக இலக்கியங்களைப் படைத்தார்.

வடமொழி நாடகாசிரியர்களான காளிதாசன், பவபூதி போலவும் மேலைநாட்டு நாடக ஆசிரியர்களான சேக்ஸ்பியர், இப்சன், மோலியர் ஆகியோரைப் போன்றும் தமிழகத்தில் நாடகாசிரியர்கள் தோன்ற வேண்டுமென்று ஆர்வத்தோடு செயல்பட்டார் அவர் அவருடைய ரூபாவதி, கலாவதி, மானவிஜயம் என்ற நாடக இலக்கியங்கள் அவரது இத்தகைய ஆர்வத்தின் எதிரொலியாக எழுந்தவைகள்தான்.

நாடக இலக்கியங்களைப் படைத்ததோடு நிற்கவில்லை அவர். அவைகளை அரங்கேற்றினார். அவரும் அதில் பங்கேற்று நடித்தார். கல்வி கற்றுத் தேர்ந்தோர் மத்தியில் கலை ஆர்வத்தைப்பெருக்கக் கருதி கடுமையாக உழைத்தார். நாடகவியல் என்ற நாடக இலக்கண நூல் ஒன்றும் எழுதினார். அது ஒன்றே இன்று நம்மிடையே எழுத்து வடிவில் இருக்கும் தமிழ் நாடக இலக்கண நூலாகும்.

தமிழ் நாடகத் தந்தை என்று அழைக்கப்படும் பம்மல் சம்பந்தமுதலியார் தான் தமிழில் மறுமலர்ச்சி நாடக யுகம் தோன்ற காரணமாவார். இன்றைய நவீனத் தமிழ் நாடக உத்திகளின் ஆதிகர்த்தாவே அவர் தான். அமெச்சூர் நாடகக் குழுக்களுக்கு தமிழகத்தில் பிள்ளையார்சுழி போட்டவரே அவர்தான். ஆனால் இன்றைய அமெச்சூர் குழுக்கள் அந்தக் கலைத் தந்தையின் வாரிசு உரிமைக் கொண்டாடும் அருகதையில் இருக்கிறார்களா என்று யோசிக்கும் கட்டத்தில் இன்றைய தமிழ் நாடக உலகம் இருப்பதை இங்கே நினைக்காமல் இருக்கமுடியவில்லை.

அன்றைய தமிழ் நாடக உலகில் இருந்த குப்பைக் கூளங்களை அகற்றி அக்கலைக்கு அந்தஸ்து ஏற்படுத்தி அதற்கு மக்களிடையே அழியாத மதிப்பு மரியாதையை வாங்கித் தந்தவர் அவர்.

நீதிபதி பணியோடு நாடகப் பணியையும் நன்கு திறம்பட செய்தார். சுகுண விலாச சபாவைத் தொடங்கி அதன் மூலம் சிறந்த நாடகங்களை அரங்கேற்றினர். இவர் 94 நாடகங்களை எழுதியுள்ளார். கேளிக்கை நாடகங்கள், நையாண்டி நாடகங்கள், துன்பியல் நாடகங்கள் ஆகியவற்றை தமிழ் நாடக உலகிற்கு அறிமுகப்படுத்தியவர்அவர்.

உரையாடல்களைப் புகுத்தி ஒன்றிரண்டு பாடல்களோடு நாடகங்களை எழுதி உலவவிட்டு தமிழ் நாடக அமைப்பிலும் போக்கிலும் புதுமையைச் செய்தார். அவருடைய சுகுண விலாச சபா நாடகங்களின் அறிஞர் ஆர். கே.

சண்முகம் செட்டியார், சி. பி. ராமசாமி ஐயர், சத்திய மூர்த்தி போன்றவர்களெல்லாம் நடித்துள்ளனர்.

முதன் முதலில் நாடக விளம்பரங்களை சுவரொட்டிகளில் வந்ததே சம்பந்தனாரின் நாடகங்களுக்குத்தான் 'லீலாவதி சுலோசனா' என்ற நாடகத்திற்கு இருபத்தையாயிரம் துண்டு பிரசுரங்களை அச்சடித்து விநியோகித்தார் அவர்.

1944ம் ஆண்டு ஈரோடு நகரில் தமிழ் மாநில நாடகக் கலை வளர்ச்சி மாநாடு நடந்தது. அந்த மாநாடு நடைபெற காரணமாக இருந்தவர்கள் டி.கே.எஸ். சகோதரர்கள் அதுதான் நாடகததிற்கென்று நடந்த முதல் மாநாடாகும். 1945ம் ஆண்டு சென்னை நகரில் சம்பந்தனாரின் சுகுணவிலாசசபைக் கட்டடத்தில் 'தமிழ் நாடகக் கலை' மாநாடு நடந்தது.

கூத்தாடி என்று கேலி செய்த நடிகர்களைக் கலைஞர்கள் என்று கூப்பிட வைத்த பெருமை சம்பந்தனாருக்கே உண்டு. அவர் எழுதிய நாடகங்களை சுகுண விலாச சபை நாடக மேடையில் அரங்கேற்றிய பின்னர்தான் வெளிக் கொட்டகைகளில் நடைபெறுமாம்.

இதிகாச புராணங்கள் - காவியங்கள் - நாடோடி கதைகளையே நாடகங்களாக நடித்துக் கொண்டிருந்த தொழில்முறைக் கலைஞர்கள் சம்பந்தனாரின் மனோகரா, சபாபதி, லீலாவதி சுலோசனா, மாக்பெத், ஹாம்லெட் போன்ற நாடகங்களை நடித்துப் புகழும் பொருளும் ஈட்டினர்.

பம்மல் சம்பந்தனாரின் நாடகங்கள் 5500 முறை நடந்திருக்கின்றன. அவற்றில் அவர் மட்டும் 500 க்கும் அதிகமாக மேடை ஏறியுள்ளார். அவர் 'மனோகரா' நாடகத்தில் பலமுறை மனோகரனாக நடித்தார். மனோகரனின் தந்தை புருஷோத்தமராகவும் நடித்திருக்கிறார். மனோகரா நாடகத்தில் 'மனோகரன்' பாத்திரத்தை ஏற்று நடிக்க ஆசைப்படாத நடிகர்களே அந்தக் காலத்தில் இல்லை எனலாம். சுகுண விலாச சபையில் சி. பி. ராமசாமி ஐயர், ஆர். கே. சண்முகம்செட்டியார், சத்தியமூர்த்தி போன்றவர்கள் கூட மனோகரன் வேடம் பூண்டு நடித்து மக்களின் பாராட்டைப் பெற்றிருக்கின்றனர்.

தொழில்துறை நடிகர்களில் அவ்வை டி.கே.சண்முகமும், நடிப்பிசைப் புலவர் கே.ஆர். ராமசாமி போன்ற பெரும் நடிகர்களெல்லாம் மனோகரன் வேஷம் பூண்டு நடித்து புகழ் பெற்றுள்ளனர். நடிகர் திலகம் சிவாஜிகணேசன் திரைப்படத்தில் மனோகரனாக நடித்து புகழ் பெற்றதும் அனைவரும் அறிவோம்.

சம்பந்தனாரின் மனோகரா, சபாபதி, வேதாள உலகம்,லீலாவதி சுலோசனா, தாசிப் பெண், ஊர்வசியின் சாபம், காலவரிஷி, யயாதி, இரத்தினாவளி போன்ற நடகங்களெல்லாம் திரைப்படங்களாகவும் வந்துள்ளன 'சதிசுலோசனா' நாடகம் சினிமாப் படமாக்கப் பட்டபோது சம்பந்தனாரே இயக்குநராகவும் இருந்துள்ளார்.

அவருடைய 80-வது ஆண்டு நிறைவு விழா 1953ஆம் ஆண்டு பிப்ரவரி முதல் தேதி சென்னையில் அன்றைய கலைஞர்கள் அனைவராலும் அறிஞர் பெருமக்களாலும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அப்போது நாடகத் திரைக் கலைஞர்கள் எல்லாம் ஒன்றுகூடி ஒரு பெரிய ஊர்வலமே நடத்தினர்.

அவர் நாடகத் தந்தையல்லவா?

கூத்து நிலையில் இருந்த தமிழ் நாடகத்திற்கு கலைவடிவம் கொடுத்து ஒழுங்குபடுத்தியவர் தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள்.

தமிழ் நாடகத்திற்கு இலக்கணம் கண்டு- இலக்கிய அந்தஸ்து கொடுத்து மேடையேற்றியவர் தமிழ் நாடகப் பேராசிரியர் பரிதிமாற் கலைஞர்.

மக்கள் மத்தியிலே மட்டுமல்ல, மக்கள் மடிக்கே நாடகக் கலையைக் கொண்டு வந்த மாபெரும் சாதனையாளர் பம்மல் சம்பந்தனார்.



# தமிழ் இசை வளர்த்த கடவுளர்கள்

தவத்திரு சுந்தரசுவாமிகள்

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளான பரமேஸ்வரன் திருவாலவாயில் வாழ்ந்த ''தருமி'' என்னும் அந்தணனுக்குப் பாடித் தந்த ''கொங்கு தேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி. காமம் செப்பாது கண்டது மொழிமோ, பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற் செறி எயிற்று அரிவை தன் கூந்தலின் நறியவும் உளவோ நீ அறியும் பூவே'' என்னும் பாடலும், உமாபதி சிவத்துக்கு அனுப்பிய

''அடியார்க் கெழியவன் சிற்றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதிய நீட்டு - படிமீதிற்
பெத்தான்சாம் பான்றனக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை''

என்னும் பாடலும்

பாணபத்திரருக்காகச் சேரமான்பெருமாளுக்கு

''மதிமலிபுரிசை மாடக்கூடற்-பதிமிசை நில்வும்
பால்நிற வரிச்சிற கன்னம் பயில் பொழில் ஆலவாயில் மன்னிய
சிவன்யான் மொழி-தரு மாற்றம்-பருவக் கொண்மூப்படிஎனப்
பாவலர்க்கு-உரிமையின் உதவி ஒளி திகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச் செருமா உகைக்கும்
சேரலன்காண்க-பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்-
தன்போல் என்பால் அன்பன் தன்பால்-காண்பது
கருதிப் போந்தனன்-மான்பொருள் கொடுத்துவரவிடுப்பதுவே''

என்னும் பாடலும், ஆதிபரம்பொருளே தமிழிசையை வளர்த்துள்ளார் என்பதற்கான சான்றுகளாகும்.

மூத்தபிள்ளையாராகிய விநாயகரும், மெய்கண்டாருக்கு உபதேசித்து பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் விளக்கமான தமிழ் வெண்பாக்கள் எண்பத்தி நான்கே ஆகும்.

நாராயணக் கடவுளான திருமாலும் ஆழ்வார்களது-தமிழ்ப் பாடல்களை எல்லாம் விரும்பி ஏற்று எத்தனையோ அற்புதங்கள் செய்துள்ளார். தமிழ்கடவுள் எனப் பலராலும் போற்றும் குறிஞ்சித்தலைவராகிய முருகப் பெருமானும் பகழிக் கூத்தர், பொய்யா மொழிப்புலவர், அருணகிரிநாதர் முதலான பல பெரியோர்களுக்குத் தமிழ்ப் பாடலாலேயே அருள் செய்துள்ளார்.

## தேவார ஆசிரியர்கள்

தேவாரம் பாடி அருளிய ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர் முதலியோர் காலத்துக்குப்பின் தேவாரப் பாடல்களுக்குப் பண் அமைத்த வரலாறு

திருமுறை கண்ட புராணத்தில் வருகின்றது சிவபெருமான் அசரீரியாக ராஜ ராஜ சோழருக்கு அருளியதாக

'நல்லிசை யாழ்ப் பாணனார் நன்மரபின் வழிவந்த
வல்லி ஒருத்திக்கிசைகள் வாய்ப்ப அளித்தோம் என்று
சொல்ல அவள்தனை அழைத்துச் சுருதிவழிப்பண்தழுவும்
நல்லிசையின் வழி கேட்டு நம்பி இறை உள் மகிழ்ந்தார்
'ஆங்கவனை அம்பலத்துள் ஆடுவார் திரு முன்பே
பாங்கினுடன் கொடுவந்து பண் அடைவு பயில் பாடல்
ஓங்கருளால் முறைபணித்தற் கொடுக்கும் என ஒரோசை
நீங்கரிய வான்ின்கண் நிகழ அரசன் கேட்டான்'

இவ்வகையாக 'செவ்வழி' முதல் 'காமரம்' ஈருக 23 பண்களில் தேவாரப் பாடல்கள் எல்லாம் பண் அமைந்துள்ளது இந்த 23 பண்களும் தற்காலம் சங்கீத வித்வான் பாடி வரும் பைரவி, கேதாரகௌளை ஆகிரி, சங்கராபரணம், அரிகாம் போதி, காம் போதி, நாட்டக்குறிஞ்சி, நீலாம்புரி, சௌராட்டிரம், மலகரி, நாத நாமக்கிரியா, சுத்தசாவேரி போன்ற பலராகங்களாகும்.

## வேங்கடமகி

சங்கீதத்தில் சரிகமபதநி என்று ஏழு சுரங்கள் உள்ளன. இதில் ரி, க, டி, த, நி என்னும் ஐந்து சுரங்களும் ஒவ்வொன்றும் இரண்டிரண்டாகி மொத்தம் பன்னிரண்டு சுரங்கள் ஆகின்றன இந்தப் பன்னிரண்டு சுரங்களும் குறைந்தும், மிகுந்தும், வக்கிரமாகியும் ஆரோகனத்தில் ஒருவிதமாகியும் அவரோகணத்தில் ஒருவிதமாகியும் மாறி மாறி வந்து எண்ணிடங்காத பலபல ராகங்களை உண்டாக்குகின்றன. 'வேங்கடமகியால் ஒழுங்குபடுத்தப்பட்ட ராகங்கள், 'கர்த்த' ராகங்கள் என 72 உள்ளன. (ஜன்யராகங்கள் கணக்கில் அடங்காதன) இந்த அமைப்பு முறையில் ரி என்ற சுரத்தையும் த என்ற சுரத்தையும் மூன்று மூன்ருக அமைக்கப்பட்டு உள்ளது. அதாவது ரி என்ற ரிஷபத்தை சுத்த ரிஷபம் 1, சதுர்சுருதி ரிஷபம் 2 ஷட் சுருதிரிஷபம் 3 என்றும் த என்ற தைவதத்தை சுத்த தைவதம் 1 சதுர்சுருதி தைவதம் 2 ஷட் சுருதிதைவதம் 3, என்றும் ஆக்கி உள்ளது. ஷட் சுருதிரிஷபம் என்பது புதிதாக வேறு உண்டானதல்ல, சுந்த காந்தரம் என்னும் முதலாவது க என்ற சுரமே. இதே போல ஷட் சுருதி தைவதம் என்பது கைஷகி நிஷாதம் என்னும் முதலாவது நி என்ற சுரமே, ஆதலால் மும் மூன்று ரித வருவது இயற்கையல்ல, வேங்கடமகியின் கர்த்தாராகங்கள் ஆரோகன அவரோகனத்தில் ச, ரி, க, ம, ப, த, நி, ச சநிதபமகரிச என்று சம்பூர்ணமாகவரும் இந்த 72 ராகங்களில ஷட் சுருதி ரிஷபம் வரும் சம்பூர்ணராகம் ச, ரி, க, ம, ப, நி, நி, ச என்று வாராது (சககம பதநிச) என்று தான் வரும். இதே போல ஷட் சுருதி தைவதம் வரும் ராகங்கள் (சரிகம பநிநிச) என்றுதான்வரும் ஆதலால் கர்த்தா ராகங்கள் 72 என்பது இயற்கையல்ல. 32 ராகங்கள் தான் இயற்கையானவை.

## மதுரை பொன்னுச்சாமி பிள்ளை

நாதசுர வித்வான் பொன்னுசாமி பிள்ளை இந்த விவரங்கள் எல்லாம் யாவரும் புரிந்து கொள்ளும் வகையில் நன்கு விளக்கி பல வருடங்களுக்கு முன்பே ஒரு புத்தகம் வெளியிட்டுள்ளார். பழந்தமிழர்கள் இசை மரபை எல்லாம் அதில் தெளிவு படுத்தி உள்ளார்.





# அமரர் கி. வா. ஜ.

எஸ். வி. ரமணி
இணை-ஆசிரியர் 'கலைமகள்'
19/13 பீட்டர்ஸ் சாலைக் குடியிருப்பு
இராயப்பேட்டை
சென்னை-600 014

சங்க காலத்துக்கு முன்பிருந்தே, தொன்மை வாய்ந்த தமிழ் மொழி தோன்றிய காலத்திலிருந்தே, அதன் இலக்கிய வளத்தைக் கொழிக்கச் செய்த பல புலவர்ப் பெருமக்கள் இருந்திருக்கிறார்கள். ஆனால் இருநூறு ஆண்டுகளுக்குள் தமிழ் வளர்த்த, செழுமை வாய்ந்த ஓர் அரிய தமிழ்ப் புலவர் மரபு இன்று சிதைந்து காணப்படுகிறது. திருசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை பல தல வரலாறுகளையும் சிறு பிரபந்தங்களையும் பாடிய தமிழ்வள்ளல். தமிழாலே வாழ்ந்த தமிழ்ச்செம்மல் இறையருளால் மகா மகோ பாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவருடைய மாணக்கராக விளங்குகிறார். காலத்தால் மறைந்த, புலவர் வீட்டுப்பரண்களில் செல்லரித்துக் கவனிப்பாறற்றுக்கிடந்த சங்க இலக்கியங்களையெல்லாம் தெளிவாகப் பதிப்பித்து உதவிய அறிஞர் சிலர். தாம் வாழ்ந்த எண்பத்தேழு ஆண்டுகளும் தமிழ் தமிழ் என்று வாழ்ந்த உத்தமர். அவருடைய மாணவராக விளங்கும் பேறு பெற்றவர் அண்மையில் மறைந்த அமரர் கி வா. ஜகந்நாதன் அவர்கள். தம் ஆசிரியர் பதிப்பித்த இலக்கியங்களுக்கெல்லாம் எளிய தெள்ளிய நடையில் விளக்கவுரை எழுதிய தமிழ் மேதை இவர்.

ஒரு பத்திரிகையில் ஆசிரியர் பதவியில் ஓர் அரை நூற்றாண்டுக்காலம் விளங்குவது என் நினைத்தும் பார்க்கமுடியாத ஒரு செயல். அமரர் கி.வா.ஜ.வின் பண்பும் எளிமையுமே அதற்குக் காரணம். கலைமகள் பத்திரிகையின் தரத்தையும் இலக்கியவளத்தையும் கட்டிக் காத்து வளர்த்த பத்திரிகையாசிரியர் இவர். நூற்றுக்கணக்கான தரம் வாய்ந்த எழுத்தாளர்களை உருவாக்கிய இலக்கியச் சிற்பி. வைதாரையும் வாழ வைக்கும் நிலம்போல், எந்த நிலையிலும், எத்தகைய சந்தர்ப்பங்களிலும் கோபம் என்ற கடுகடுப்பை, தம் பேச்சிலோ, செயலிலோ காட்டத் தெரியாத காந்தீயவாதி. அரசியலில் ஈடுபாடு இல்லாவிட்டாலும் மகாத்மா காந்தி, ஜவஹர்லால் நேரு போன்ற தலைவர்களிடமும், காந்திஜியின் நிர்மாணத் திட்டமான கதர் உடுப்பதில் தீவிர ஈடுபாடும் கொண்ட தேசீயவாதி. கதரைத் தவிர மற்றத் துணிகளை உடுத்தாத கதர் பக்தர்.

பதினொரு வயதில், தாம் பிறந்து வளர்ந்த கிருஷ்ணராயபுரத்து மக்கள், கோயிலுக்குச் சென்று தரிசனம் செய்துவரும் காட்சியை எண்சீர் விருத்தத்தில் கடுமையான பாடலாகப் பாடினார். 'ஜோதி' என்ற பெய

ரில் அமரர் கி.வா.ஜ. பாடியுள்ள பாடல்கள் கீர்த்தனைகளுக்குக் குறைவில்லை. பேனாவைத் திறந்தால், கவிதை ஊற்றுப் பெருக்கெடுக்கும், கற்பகத் தருவாக உதிரும் ''மேக மண்டலம்'' என்ற அவரது கவிதைத் தொகுப்பு. இவருடைய கவிதைத் திறனுக்கு சான்றாக விளங்குகிறது.

சிறுகதை, பயணக் கட்டுரைகள், இலக்கியக் கட்டுரைகள், திருத்தல வரலாற்றுக் கட்டுரைகள் முதலியவற்றில் அமரர் கி. வா. ஜ. அவர்களின் நாடகம் போன்று சித்தரிக்கும் உத்தியைக் காணலாம். அவர் எழுததில் உள்ள தெளிவையும், எளிமையையும் போல, அவர் பாடம் சொல்லக் கேட்கவேண்டும்; அவ்வளவு தெளிவாக இருக்கும். ஆழ்ந்த, அகன்ற அவரது தமிழ் அறிவு, யார், எந்தச் சந்தர்ப்பத்தில ஐயங்களைக் கேட்பினும், விளக்கமான பதிலைக்கொடுக்கும் அளவுக்குக் கூர்மையாக இருந்தது.

எண்பத்திரண்டு ஆண்டுகள் வாழ்ந்த அமரர் கி.வா.ஜ. அவர்கள் ஓர் நிறைகுடம். எழுத்தைப் போல் பேச்சிலும், கொச்சையைக் கேட்க முடியாது. அமைதியான, தெளிந்த நீரோட்டம் போல் அவர் பேச்சு விளங்கும். இலக்கிய கூட்டமானாலும், பாரதி, கம்பன் விழாக் கூட்ட அரங்கமானாலும், பட்டிமன்ற நடுவர் தீர்ப்புரையானாலும், இலக்கிய வளம் செறிந்த சிலேடை நயம் மிகுந்த பேச்சைக் கேட்டுப் பரவசமடைய முடியும்.

தமிழகத்தில் மட்டுமல்ல, கடல் கடந்த அந்நிய நாடுகளிலும், தமிழர் வாழ்ந்துவரும் இடங்களில் எல்லாம் கி.வா.ஜ. என்ற மூன்றெழுத்து அன்போடும், அரவணைப்போடும் வரவேற்கப்பட்டு வந்தது. தம் இளம் வயதில் வாழ்ந்த சூழ்நிலையால், துறவு மனப்பான்மை கொண்டிருந்த கி. வா. ஜ. வை முருகன் அருள்தான், இல்லறத்தானாக, இலக்கியவாதியாக, இறைய நுபூதி பெற்ற பக்திமானாக விளங்க வைத்தது.

திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, கந்தரநுபூதி, கச்சியப்ப சிவாசாரியார் இயற்றிய கந்தபுராணம் போன்ற குன்றுதோறாடும் குமரனின் அருமை பெருமைகளைப் பேசும் பக்திப் பாமாலைகளுக்கெல்லாம், கி.வா ஜ. அவர்களின் விளக்க வுரைகளைப் படிக்கவேண்டும்; அவர் சொல்லக் கேட்க வேண்டும்.

ஒரு சமயம் இருபது ஆண்டுகளுக்கு முன்பு கார்ததிகை சோமவாரம் காலை நேரம் ஏழு மணி இருக்கும் சென்னைக் கந்த கோட்டத்தில் திருமுருகனின் அவதாரத்தைச் சொல்கிறார்.

அருவமும் உருவும் ஆகி
அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப்
பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறும்
கரங்கள்பன் னிரண்டும்
கொண்டே
ஒரு திரு முருகன் வந்தாங்
குதித்தனன் உலகம் உய்ய

கந்தபுராணத்திலுள்ள இந்தப் பாடலுக்கு இரண்டு மணி நேரத்துக்குமேல் விளக்கம் கூறியிருக்கிறார். கோயிலில் கூடியிருந்த ஐந்நூறுக்கும் மேற்பட்ட மக்கள் இங்கு அங்கு நகரவில்லை. திருமுருகன் அவதாரம் செய்யும் காட்சியை அப்படியே நாடகம்போல், தம் பேச்சாலேயே நடித்துக் காட்டி விட்டார், 'கருணை கூர் முகங்களாறும்' என்ற வாக்கியத்துக்கு அவர், அன்று விளக்கம் கொடுத்தது இன்றும் காதுகளில் ஒலிக்கிறது. 'கூந்தல் உள்ளது சிறத்தல்' என்ற தொல் காப்பிய மேற்கோளைக் கூறி, அருள்வடிவான சில பெருமான் அளவற்ற தன் கருணையையெல்லாம் ஒரு வடிவமாக்கி, அந்தக்கருணையை ஐந்து முகமும், பத்துக் கரங்களும் உடைய தாக்கி, எல்லா உயிர்களும் கந்தக்கருணை

யினல் பயனடைய வேண்டும் என்ற தயை யினல் கூர்மையானதாக கருணை உலகளாவிய ஒளியாகப் பிரகாசிக்கும்படி, முருக வேளை உதயம் செய்யச் செய்தானும் எம் பெருமான்.

திருக்குறள் தெளிவுரை - கோவை ராம கிருஷ்ண வித்தியாலயம் வெளியிட்டது அவருடைய பொறுமையான ஆராய்ச்சிக்கு சான்ருக விளங்குகிறது. நாடோடி இலக்கியம் அவருடைய ஆராய்ச்சியினல் பிரபலம் அடைந்தது. தம் குருநாதர் எழுதிய ''என் சரித்திரத்தை'' முழுமையாக்கிய முழு மனிதர் அமரர் கி.வா.ஜ. அவர் பல்லாண்டுகளாய்த் தொகுத்து வந்த, போகும் ஊர்களில் எல்லாம் மக்கள் சொல்லி வந்த பழமொழிகளை எல்லாம் தொகுத்து, ஆயிரம் பழமொழிகளை விளக்கத்துடன் வெளியிட்டிருக்கிருர். பெரிய புராண விரிவுரை மூன்று பாகங்கள் வெளி வந்துள்ளன. மற்றவை வெளிவரவேண்டும். தமிழ், தமிழ் என்றே வாழ்ந்த அமரர் கி.வா.ஜ அவர்களின் வாழ்க்கை புகழ் பெற்ற ஒரு புலவர் பரம்பரையின் சிறப்பு வாழ்க்கையாகும்.

சுமார் முப்பத்தெட்டு ஆண்டுகாலம் அவருடன், அவர் இல்லத்திலும், அலுவலகத்திலும் பணிபுரியும் வாய்ப்புக்கிட்டியதைப் பெரும் பேருகக் கருதுகிறேன். இதனைக் கூட்டுவித்த இறையருளை வழுத்துகிறேன். எந்தச் சந்தர்ப்பத்திலும் முகம் கோணுத அவருடைய நல்லியல்பை, தாமும் சிரித்துப் பிறரையும் சிரிக்க வைத்த அவருடைய நாவன்மையைக் கேட்டுச் சுவைத்தவன் நான். இந்தப் பேறு பல அன்பர்களுக்கும் கிட்டியிருக்கும். நாம் சிரிக்கச் சிரிக்க, பக்தியில் திளைக்கத் திளைக்க, இலக்கியத்தை ரசிக்க ரசிக்கப் பேசிய அந்த வாய் இன்று மௌனமாகிவிட்டது. ஆனல் அந்த ஒலி, அந்தச் சொல்லோவியம் நம் மனப் பெட்டகத்திலிருந்து மறைய முடியாது. என்றும் வாழ்ந்து, நம்மை மகிழ்ச்சிக் கடலில் திளைக்க வைத்துக்கொண்டிருக்கும்.

| | |
|---|---|
| 11—4—1906 | கிருஷ்ணராயபுரத்தில் பிறப்பு தந்தையார் வாசுதேவஐயர் |
| 1921 | எஸ்.எஸ்.எல்.சி. மோகனூர் வாசம் |
| 1924 | முதல் முதல்-மோகனூர் காந்தமலை முருகன் சந்நிதியில் பேச்சு |
| 8—12—1927 | டாக்டர் உ.வே.சாமிநாதையரவர்களைச் சென்னையில் சந்தித்தது |
| 1928 | தக்கயாகப் பரணிப் பதிப்பில் உதவியது |
| 1932 | ஐயாவர்கள் சிபாரிசினல் கலைமகள் பத்திரிகையில் உதவியாசிரியராகச் சேர்ந்தது. இதே ஆண்டில் திருமணம். மனைவி பெயர் அலமேலு அம்மாள். |
| 1933 | வித்துவான் பரிட்சையில் முதல்வகுகத் தேறியது. பிறகு பி. ஒ. எல்; எம். ஏ. பட்டம்பெற்றது. |
| 1934—36 | சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'தமிழ்க்காப்பியங்கள்' பற்றி ஆராய்ச்சி |
| 1942 | ஐயரவர்கள் மரணம்; கலைமகள் ஆசிரியர்பதவி |
| 1960 | உலகத் தமிழ் மகாநாட்டில் கலந்து கொண்டார் |
| 1966 | மணிவிழா |
| 1986 | சதாபிஷேகம் |

அமரர் கி. வா. ஜ. அவர்கள் பெற்ற பட்டங்கள் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் அளித்த 'வாகீச கலாநிதி' தர்மபுரம் சந்நிதானம் அளித்த 'செந்தமிழ்ச் செல்வர்' தமிழக அரசு அளித்த 'கலைமாமணி,.

அவர் பெற்ற சிறப்புக்கள் : சாகித்திய அகாதமிப் பரிசு, ராஜாசர் அண்ணாமலைச் செட்டியார் நினைவுப் பரிசு, தமிழகப் பரிசு இரண்டு சிறுகதைத் தொகுப்புகளுக்கு.

ஸ்ரீ லங்கா, பர்மா, சிங்கப்பூர், பிரான்சு இங்கிலாந்து ஆகிய அந்நிய நாடுகளுக்குச் சென்றிருக்கிருர். 250க்கும் மேல் நூல்கள் எழுதியுள்ளார். மூன்று குமாரர்களும் ஒரு பெண்ணும் உள்ளனர். எல்லாருக்கும் திருமணம் ஆகிவிட்டது. பேரன் பேத்திகள் உள்ளனர்.

சாகித்திய அகாதமி, ஞானபீட பரிசுத் தேர்வுக்குழுவில் உறுப்பினர், தமிழ் எழுத்தாளர் சங்கம், தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு நூல் பதிப்புச் சங்கத் தலைவர், சினிமாப்படத் தணிக்கைக் குழு, தஞ்சைப் பல்கலைக்கழக சிண்டிகேட் உறுப்பினர், திருக்கோயில் கமிட்டி உறுப்பினர்.



---

## நாரதர் பாட்டு

சரிகம பதநியாம் எழு சுர நிலை லய
சங்கீத சுகமே பெரியசுகம்.

## எமதர்மன் பாட்டு

திக்கெட்டுமென் சட்டத்திற்குட்
பட்டடுத்து நிற்பதற்குக்
கர்த்தனிட்ட கட்டளையெணக்கு
அதற்குத் தக்கபடி துஷ்டர்களைக்
கண்டு பிடிப்பேன் பிடித்து வந்து
வெட்டிக் குத்திக் குத்திக் தண்டிப்பேன்

—சங்கரதாஸ் சுவாமிகள்



# பதமும் இயற்றுவார் பரதமும் ஆடுவார்

**அ. நடராஜன்**
செயலர்
திருப்பதி கலாச்சார சங்கம்
திருப்பதி (ஆந்திர பிரதேசம்)

அன்று நகரமே விழாக்கோலம் பூண்டு, பொன்னிறப் பொலிவுடன் காட்சியளித்தது. அரண்மனை வளாகமோ மலர் மாலைகளி னாலும் மாவிலைத் தோரணங்களினாலும், வண்ணக்கொடிகளினாலும் வாழை மரங்களி னாலும் சரிகைத் தொங்கல்களினாலும் அலங் கரிக்கப்பெற்று எழில் நிறைந்து ஒளிர்ந்தது.

இலக்கியத்தில் தேர்ச்சி பெற்ற புலமை மிக்கவர்கள், அருங்கலைகளில் ஆழ்ந்த இயல றிவுடையோர், எழில் சிந்தும் ஆடல் நங்கை யர் இன்னிசையில் வல்ல இசை வாணர்கள், கவின் கலைகளில் ஆர்வம் மிகுந்த இரசிகப் பெருமக்கள் எல்லோருமே அரண்மனைக் கலையரங்கில் மன்னனின் முன்பாக நடை பெறவிருக்கும் சிறப்புக் கலை நிகழ்ச்சி ஒன்றினைக் காணக் கூட்டம் கூட்டமாகச் சென்ற வண்ணமிருந்தனர். அரசவை அமைச்சர்களும் அறிஞர்களும், நுண்கலை வல்லுநர்களும் பிரதானிகளும் புலவர்களும் பொதுமக்களும் அவரவர்களுக்கு ஒதுக்கப் பெற்றிருந்த இடங்களில் அமர்ந்திருந்தனர். மன்றம் முழுவதும் பார்வையாளர்களினால் நிரம்பி வழிந்தது.

இலக்கியத்தையும், கலையையும் இரு கண்கள் என மதித்துப் போற்றி ஆதரித்து வந்த மன்னவன் கலைக்கூடத்தினுள் நுழைந்துஅரியணையில் அமர்ந்தான் நிகழ்ச்சி பொறுப்பாளனை அழைத்தான். மெல்லிய குரலில் அவனிடம் ஏதோ கூறியது தெரிந்தது குறிப்பறிந்த அவனும் மேடையை நோக்கிச் சமிக்ஞை செய்தான். பட்டுத்திரை விலகியது.

மேடையின் மையத்தில் அழகெல்லாம் திரண்டு வந்தாற்போல் ஆரணங்கு ஒருத்தி ஒயிலாக நின்றிருந்தாள்.

மதிவதனம். கறுத்தடர்ந்த கூந்தல். கதை சொல்லவல்ல கரிய நீண்ட விழிகள். சந்தன மேனி அளவாகவும் அழகாகவும் அமைந்து கருத்தினை ஈர்க்கும் செழுமையான அங்கங் கள் பூண்டிருந்த பொன் அணிகலங்களினும் பொலிவுடன் துலங்கும் புன்னகை. இணைந்து

நின்ற இருகால்கள் நேராக அமைந்த முகமும் உடலும் எழில் சிந்தின. இடுப்பில் இடது மணிக்கட்டு. தொங்க விடப் பெற்றிருந்த வலது புஜம்.

கண்டவர் கண்ணிமைக்க மறந்தனர்.

மத்தளம் முழங்கிற்று. இசைக் கருவிகள் இயங்கின. தேனினும் இனிய தீங்குரலில் பாடகி பண்ணிசைத்துப் 'பதம்' பாடினாள். தாளங்களும் ஜதிகளும் இசைந்தன. இலக்கணம் வழுவாத நேரிய முறையில், எழிற்கையும் தொழிற்கையும் சேர்த்து, கை செல்லுமிடத்தே கண்ணும் கண்போன இடத்தே மனமும் மனம் சென்ற இடத்தே பாவமும் ரஸமும் வெளிப்படும் வகையில், பாட்டினில் பொதிந்துள்ள உணர்ச்சிகளைச் சுவை கெடாது அபிநயித்து அந்த நர்த்தகி ஆடினாள்

அதனைக் கண்ணுற்றோர் ஊணை மறந்தனர், உலகை மறந்தனர்; தம்மையே மறந்தனர். மன்னனும் மக்களும் ஒரு சேர மகிழ்ந்தனர்.

ஆட்டம் நின்றது, கனவுலகினின்றும் விடுபட்ட பார்வையாளர்களின் கரவொலி விண்ணைப் பிளந்தது.

நாட்டிய நங்கைக்கு நானிலத்தின் நாயகன் புகழாரம் சூட்டினான். ''நீ கோரியதைக் கேள், தருகிறேன்'' என்றான். ''பொன் வேண்டுமா, பொருள் வேண்டுமா, பூமி வேண்டுமா, எது கேட்டாலும் கொடுக்கிறேன்'' என்று வேந்தன் உறுதி கூறினான்.

''கலைகளுக்கு ஆதரவளித்து வரும் அரசர் பெருமானே! தாங்கள் உவந்தளிப்பதாக கூறியது எதுவும் எனக்குத் தேவையில்லாத ஒன்று. எனக்கு வேண்டியது, நான் தங்களிடம் யாசிப்பது உமது அந்தப்புரத்தின் பூஜை அறையில் ஆராதிக்கப்பெற்றுவரும் சிறிய கிருஷ்ண விக்கிரகமே!''

அரசனுக்குப் பெரும் வியப்பு. நாள் தோறும் பொன்னையும், பொருளையும் வேண்டி அவனிடம் வருபவர்களே மிகுதி. ஆடல் நங்கையிடம் அவன் மீண்டும் கேட்டான் ''ஏராளமான செல்வம் தருகிறேன் என்ற போதும் அதை ஒரு பொருட்டாக மதிக்காது, சிறியதொரு, கிருஷ்ண விக்கிரகமே போதும் என்பதன் காரணத்தை நான் அறியலாமா?''

அப்போதுதான் எவரும் எதிர்பாராதது நிகழ்ந்தது. அந்நாட்டிய நங்கை தனது கூந்தலைக் களைந்து கையில் எடுத்தாள்! மேலே இருந்த அணிமணிகளையும், ஒப்பனையையும் அகற்றினாள். அங்கு ஒர் ஆணழகன் நின்று கொண்டிருந்ததை அவையினரும், அரசனும் கண்டனர்! வியப்பில் ஆழ்ந்தனர்! இதுவரை நாட்டியமாடியது பெண் வேடம் புனைந்த ஆண்மகனா?

அவன் அரசனை நோக்கிக் கூறினான்: ''மன்னவரே! உமது நல்லாட்சியின் காரணமாகவும், நான் போற்றி வணங்கும் மன்னார்குடி இராஜகோபால சுவாமியின் கிருபையினாலும் எனது வாழ்விற்குத் தேவையானது என்னிடம் இருக்கிறது. நான் என் தெய்வத்தை 'மதுரபக்தி' முறையில் வழிபடுபவன். உலகிலுள்ள எல்லா ஜீவராசிகளுமே மாந்தர் உள்பட பெண்களே. நம் அனைவருக்கும் புருஷன் ஜகன்னாதனாகிய கிருஷ்ணனே. பல்வேறு நாயகியரின் நிலைகளில் என்னை இருத்திக்கொண்டு, அந்தப் புருஷோத்தமனின் புகழ்பாடும் 'பதங்கள்' பலவற்றை இயற்றியும் அவற்றைப் பாடி ஆடி அபிநயத்தும் வழிபடுவதையே என் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டிருக்கிறேன். எனவே தான், நான் ஆராதிக்கும் பொருட்டு, அவ்வரிய அழகிய கிருஷ்ண விக்கிரகத்தைப்பற்றி கேள்வியுற்று, அதைத் தரும்படி தங்களை வேண்டினேன். எனினும், இந்நாட்டிலுள்ள இத்தகைய கலைஞர்கள் அனைவரிலும் நான் மிக மிகச் சிறியவன் என்பதையும் உணர்கிறேன்''.

அவ்விசித்திரக் கலைஞனின் ஈடிணையற்ற கலைப்புலமையைப் போற்றுவதா? அவனது எளிமையைப் புகழ்வதா, அவனது உயரிய சிந்தனையையும், பக்தியையும், பாராட்டுவதா என அரசனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. கலைஞனை நோக்கி 'ஐயா, உம்மைப்போன்றதொரு கலைஞர் என் நாட்டில் இருப்பது நான் பெற்ற பெரும்பேறேயாகும். நீர் கேட்ட கிருஷ்ண விக்கிரகம் உம்மிடம் இருப்பதே பொருத்தமானது. அதைக் கொடுப்பதோடு, வேறுபல பொருள்களையும் பக்தியைப் பரப்புவதற்காகவும் இவ்வரிய கலையின் வளர்ச்சிக்காகவும் தாங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றும் கோருகிறேன். கலையின் வளர்ச்சி கலைஞனின் மகிழ்ச்சி, நாட்டிற்கும் அதுவே பெருமை'' எனப் புகன்று வணங்கினான்.

இந்நிகழ்ச்சியின் பிரதான பாத்திரம் முவ்வாநல்லூர் சபாபதி அய்யா. அவரைப் பாராட்டிய மன்னன் தஞ்சையை ஆண்ட மகாராஷ்டிர அரசன் இரண்டாவது சரபோதி.

உறவு, பிரிவு, ஊடல், கூடல், உவகை துயரம், ஏக்கம், எதிர்பார்ப்பு போன்ற பல நிலைகளிலுள்ள பெண்ணாகப் பக்தன் தன்னைப் பாவித்துக்கொண்டும், தான் வாழும் முறைகள் மற்றும் கடைப்பிடித்துவரும் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை அநுசரித்தும் பாடி ஆடிப் பரமனைப்பரவும் பக்தி வகையே 'மதுர பக்தி' எனக் காலம் காலமாகப் போற்றப் பெற்று வந்துள்ளது. இவ்வெளிய அன்பு வழியைப் பின்பற்றிய ஆழ்வார்கள், நாயன்மார்கள் முதல் ஜயதேவர், லீலாசுகர், சூர்தாஸ், சைதன்யர், அன்னமாச்சாரியர், ஷேத்திரய்யா போன்றோரின் வரிசையில் வந்தவரே நமது கதையின் நாயகர் சபாபத்ய்யா.

தஞ்சை நாயக்க மன்னர்களின் காலத்தில் தெலுங்கைத் தாய் மொழியாகக் கொண்ட ஆந்திரக் கலைஞர்கள் பலர் பாதுகாப்புத் தேடித் தமிழகத்திற்குக் குடியேறினர். வளமான தஞ்சை மண்ணில் ஆந்திரக் கலைகள் செழித்து வளர்ந்தன.

அவர்களுள் கி.பி. 17 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஷேத்திரய்யா எனப்புகழ் பெற்றவர் தமிழகத்தில் தஞ்சை, மதுரை, செஞ்சி முதலிய இடங்களில் தங்கி 'மதுர பக்தி' வகைப் பதங்களைப் புனைந்தார். 'பதம்' எனப்பெறும் இசைப்பாடல் வகைக்குப் புதிய தோர் இலக்கணத்தை வருத்த பெருமை அவரையே சாரும் மெய்ப்பாடுகளின் பல்வேறு நிலைகளைக் கற்பனை மிளிர அழகுபட விரித்து விளக்குவதற்கான இயல்புடையதும். பலராலும் சுவைக்கக்கூடிய காதல் சுவையினை அதன் பற்பல கூறுகளிலும் — பிரதானமாகக் கொண்டு விளங்குவதுமானதும் ஆன இசைப் பாடல் வகையே 'பதம்' எனப்பெறுவதாகும். அணியியலார் வரையறுத்துள்ள வகைகளை எல்லாம் விஞ்சும் வகையில், ஷேத்திரய்யா நாயக,நாயகி நிலைகளைத் தமது பதங்களில் படம் பிடித்துக்காட்டியிருக்கிறார் அவரைப் பின்பற்றி அத்தகைய பதங்களைப் பலரும் புனைய முற்பட்டனர். அவற்றுள் மிகச் சிறந்தவர்களுள் ஒருவர் முவ்வாநல்லூர் சபாபதி அய்யர் ஆவார்.

'பதங்கள்' புனைவதில் ஷேத்திரய்யாவிற்கு அடுத்தவராகக் கருதப்படும் சபாபதய்யா தஞ்சை மாவட்டம் மன்னார்குடி வட்டத்தைச்சேர்ந்த முவ்வாநல்லூர் என்னும் கிராமத்தைச் சேர்ந்தவர். தஞ்சையிலும் மன்னார் குடியிலும் வசித்தவர். தாய் மொழி தெலுங்கு முலகநாடு பிரிவைச் சேர்ந்த வைதிகப் பிராம்மணர். இவருடைய பெற்றோரைப்பற்றியோ இவரது இளமைக்கால வாழ்க்கை குறித்தோ எதுவும் தெளிவாகத் தெரியவில்லை. தியாகராஜரின் சம காலத்தவர். கி. பி. 18 ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 19 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும இவர் வாழ்ந்திருக்கக்கூடும்எனக் கருதப்படுகின்றது.

தெலுங்கில் தேர்ந்த புலமை, சமஸ்கிருத அறிவு, இயல், இசை மற்றும் அபிநயக் கலையில் சிறப்பான தேர்ச்சி, 'சிருங்காரஇரஸ மஞ்சரி', 'சந்திரலோகம்' போன்ற அணியியல் நூல்களில் ஆழ்ந்த அறிவு, இஷ்ட தெய்வமான மன்னார்குடி இராஜகோபால ஸ்வாமியின் பால்ஆராக்காதல், காவியக் கற்பனை ஆகியவை மிகுந்தவராக இவர் இருந்திருக்க வேண்டும் என்பதை இவருடைய பாடல்களிலிருந்து தெரிந்து கொள்ளமுடிகிறது. மேலும், இவர் தமது படைப்புகளுக்கு முன்மாதிரியாகக் கொண்ட ஷேத்திரய்யாவின் 'பதங்களுக்கும், இவரே புனைந்த பதங்களுக்கும் வேறுபாடு அதிகம் இல்லாதிருப்பதிலிருந்து ஷேத்திரய்யாவின் தாக்கத்தை இவரது பாடலகளில் காணமுடிகிறது. 'மதுரபக்தி' யின் இலக்கணமான 'வெளிப்படைக் காதல் உள்ளார்ந்த பக்தி' என்னும் இரு நோக்கிலும் இவரது பாடல்களுக்கு விளக்கம் கூற இயலும். ஆன்மீகக்காதல், இனிமையான நடை, உயர்ந்த இசை நிரம்பிய இவரது பாடல்களை மக்கள் பெரிதும் விரும்பியதாகத் தெரிகிறது.

ஹரிகதைக் கலைஞர்களுக்குப் பயன்படும் வகையில் பல நிருபணங்களையும், அதாவது இசை நாடகங்களையும் சபாபதய்யர் இயற்றியுள்ளார். இவருடைய 'சீதா கல்யாணம்' நிருபணம் ஹரிகதைப் பாகவதர்களிடையே பெரும் செல்வாக்குப் பெற்றிருந்ததாகச் சொல்லப்படுகின்றது.

இவருடைய பதங்கள் ஐம்பது கி. பி. 1884ம் ஆண்டில் திருப்பதி வேங்கடாச்சாரியார் அவ்வப்பதங்களுக்குரிய நாயக, நாயகி பற்றிய குறிப்புகளுடனும், பாநுதத்தர் இயற்றிய 'இரஸ மஞ்சரி' என்னும் நூலிலிருந்து இசைவான எடுத்துக்காட்டுகளுடனும் பதிப்பித்ததாகத் தெரிகிறது.

இவரது இசைப்பாடல்களில் நாட்டிய நிகழ்ச்சிகளில் அடிக்கடி இடம் பெறுபவை 'ஏமாடலாடின' (ஏது குலகாம்போஜி-சாபு) மற்றும் 'தாரி சூசுசுன்னதி' (சங்கராபரணம் மிச்ரம்)

'தாரி சூசுசுன்னதி' என்னும் பாடலில் வரும் தலைவி, காதலன் தன் வீடு வருவதை எதிர்பார்த்து, அவனை வரவேற்கவேண்டிய எல்லா ஏற்பாடுகளுடன் காத்து நிற்கும் வகையிலான 'வாஸக ஸஜ்ஜிதை' நாயகி. பாடலின் பாவ இனிமைக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் இப்பதத்தினையும் அதன் பொருளினையும அறிந்துகொள்வது அதனை முழுமையாகச் சுவைத்து மகிழ்வதற்குத் துணைபுரியும் அல்லவா?

பாடல் :

தாரி சூசுசுன்னதி நீது ப்ரிய
தரளாக்ஷி யௌ சின்னதி...
வாரிஜமுகி நீவு வச்சுவேளனு கொனி
கோரிகதோ ராஜகோபாலஸாமி
(நீ தாரி)

வென்னெல காயக வேட்கமீர மஞ்சி
ஸன்னஜாஜி விரிஸருலனு கந்தமு
பன்னீரு செம்புலு படகிண்டி லோநுஞ்சி
வன்னெலாடி தலவாகிட நலிசி (நீ தாரி)

ஏவகனைனனு எந்து சப்புடைன
நீவோ யனியெஞ்சி நிலிசி திரிகிசூசி
ஈவக சித்தமுநிசட நிலிபினட்டி
பாவம் பெவரிகி பயலு கானீக (நீ தாரி)

பச்சி பச்சிகா பதமுலு பாடுசு
வச்சி ராஜகோபல ஸாமி நீவு
முச்சடலாடுசு முத்துலு பெட்டுசு
குச்சி கௌகிட கேர்ச்சி கூடுட தலசி (நீ தாரி)

பொருள் : இராஜகோபால ஸாமி, உன் காதல் நங்கை அலையும் கண்களை உடையவளாய், செந்தாமரை முகத்தினள் நீ வரும் நேரம் என எண்ணி ஆசையுடன், நீ வரும் வழிதனைப் பார்த்தவாறு இருக்கிறாள். வெண்ணிலவு வீச, நல்ல மல்லிகை மலர்ச்சரங்கள், சந்தனம், பன்னீர்ச் செம்புகள் தனைப் பள்ளியறையில் வைத்து எழில் மங்கையவள் தலைவாசலில் நின்றுகொண்டு, உந்தன் வழி தனைப் பார்த்தவாறு இருக்கிறாள்.

எவ்வகையிலோ, எங்கோ, ஓசை ஏற்பட்டால் நீ என எண்ணி, நின்று திரும்பிப் பார்த்து இவ்வகைமனத்தை இங்கு நிறுத்தி வைத்தாற் போன்ற பாவம் எவருக்கும் வெளியே தெரியாமல் உந்தன் வழி தனைப் பார்த்தவாறு இருக்கிறாள்.

இராஜகோபாலஸாமி, பச்சை பச்சையாகப் பதங்கள் பாடிக்கொண்டு, கொஞ்சும் மொழிகள் பேசியும் முத்தம் தந்தும் கட்டித் தழுவியும் கூடியதை நினைந்து உந்தன் வழி தனைப் பார்த்தவாறு இருக்கிறாள்.

---

## பபூன் பாட்டு

விகடனை ஒரு கோமாளி என்று
விளம்புவார்கள் தெரியாதவர்கள்
வித்வான் கர்வம் மட்டம் தட்ட வந்த
வீரனாம் என்பார்கள் தெரிந்தவர்கள்
சகடம் ஓடந்தனிலேறும் ஓடம்
தானுமோர் நாள் சகடமேறும்
சாத்திர வாதத்தில் எந்த நாளும் வெற்றி
தானடைந்தாருண்டோ நீர் கூறும்
பத்துப்பேர் குஸ்தியில் முன்னமே பீட்டடி
பட்டவனே பின் பயில்வானாம்
பாரிலே வெற்றியும் தோல்வியு முண்டு
பதற்றம் கொள்ளாதவன் வித்வானும்.

– சங்கரதாஸ் சுவாமிகள்

---





பொள்ளாச்சி திரைப்படக் கழகத்தில் ''விசு'' பாராட்டு விழா. இயக்குநர் T. P. கஜேந்திரன், விசு துணைத்தலைவர் Dr. S. முருகய்யன், தலைவர் திரு. N. நமச்சிவாயம், செயலர் திரு. RM.V., Dr. சிற்பி



மறைந்த இசை மேதை டாக்டர் சீர்காழி கோவிந்தராஜன் திருஉருவப் படத்தை
திறந்து வைத்த பிறகு, ஆண்டு விழாவில் நடந்த
டாக்டர் சீர்காழி G. சிவசிதம்பரம் குழுவினர்
இன்னிசை.



பொள்ளாச்சி திரைப்படக் கழகத் தலைவர்
நமச்சிவாயம்,
திரைப்பட இயக்குநர் T. P. கஜேந்திரனுக்கு
பரிசு வழங்குதல்.



பொன்னாடை போர்த்தி பாராட்டப் பெற்ற
கலைமாமணி V. கோபாலகிருஷ்ணன்
நன்றி நவிலும் காட்சி.
அருகில் செயலாளர்



திருமதி மாரியம்மாள் மகாலிங்கம் பதினேழாம் ஆண்டு விழாவில்
திருமதி மணி கிருஷ்ணசாமி அவர்கட்கு
பொன்னுடை போர்த்தி சிறப்புச் செய்கிறூர்.



தல் மலரைப் பெற்றுக்கொண்டு
ாழ்த்துரை வழங்கிய அரிமா சங்க முன்னுள்
ளுநர் MJF. A. S. சுப்பையன் அவர்கட்கு
ரிமா சங்க செயலர்
ாக்டர் C. ரமேஷ் சந்திரன்
ாலை அணிவிக்கிறூர். அருகில் செயலர்,
லவர்.



பதினேழாம் ஆண்டு விழாவில்
திருமதி மணி கிருஷ்ணசாமி இசை விருந்து
வழங்குகிறூர்.
கோவை திரு. பாலு — வயலின்
இராமனுதபுரம் திரு. M. N. கந்தசாமி
— மிருதங்கம்
கோவை திரு. சுகுமாரன் — கடம்





தொலைபேசி
அலுவலகம் **4594** வீடு **4146**
Tel EMESS

# M. சுப்ரமண்யம் & பிரதர்ஸ்
# &
# சக்தி சா மில்ஸ்

**134 மீன்கரை ரோடு பொள்ளாச்சி**

மரம் — ஓடு — மூங்கில்
மொத்தம் & சில்லறை வியாபாரம்
பாரஸ்ட் — டிரான்ஸ்போர்ட் — அறுவை மில்
காண்டிராக்டர்ஸ்

*

எல்லாவிதமான
மரங்களும் — சைசுகளும்
நல்லவிதமாகக்
குறித்த நேரத்தில் சப்ளை செய்கிறோம்

தமிழிசைச் சங்கத்தின் பதினெட்டாம் ஆண்டு விழாவிற்கு வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்





பொள்ளாச்சி தமிழிசைச் சங்கத்தின்
பதினெட்டாம் ஆண்டு விழாவிற்கு
எமது இதயங்கனிந்த நல்வாழ்த்துக்கள்!

போன் 3673

# B. மன்னார் ராமுடு செட்டியார்

ராமகிருஷ்ணா ஜுவல்லரி மார்ட்
**31 கடைவீதி பொள்ளாச்சி**





**எங்களிடம் உத்திரவாதமுள்ள தங்க நகைகளும்**
**வெள்ளிப் பாத்திரங்களும் குறைந்த விலையில் கிடைக்கும்.**

---

- கைத்தறி ஆடைகள்
- தலையணை உறைகள்
- படுக்கை விரிப்புகள்
- பர்னிஷிங் பேப்ரிக்ஸ்

இவைகளுக்குப்
பெயர் பெற்றவை

இந்தியாவிலேயே
அதிக விற்பனையாளர்கள்

அகில
உலகமெங்கும்
ஏற்றுமதி செய்பவர்கள்

எங்களது இதயங்கனிந்த நல்வாழ்த்துக்கள்!

# அமர்ஜோதி பேப்ரிக்ஸ்

**AMARJOTHI FABRICS**

தயாரிப்பாளர்கள்
அமர்ஜோதி பேப்ரிக்ஸ்
தபால் பெட்டி எண். 22
கரூர் 639 001
தமிழ்நாடு போன் 20451

சென்னை ஏஜெண்டுகள்
அமர்ஜோதி டிரேடர்ஸ்
36 கிடங்கு தெரு
சென்னை 600 001
போன் 28438

தங்கப் பதக்கமும் முதல் பரிசும் பெற்றவர்கள்!







நல்வாழ்த்துக்கள் !




# ஆனைமலைஸ் ரிட்ரெடிங் கம்பெனி

தலைமை அலுவலகம்

472 டாக்டர் நஞ்சப்பா ரோடு
கோயமுத்தூர் 641 018
போன் 34500

கிளை அலுவலகம்

10-A/1 திருவனந்தபுரம் ஹைரோடு
திருநெல்வேலி 627 002
போன் 24860 தந்தி 'ARC'

ABT UNIT

உங்களின்
டிரக் டயர்களை
நவீன
பிரிக்கியூர்டு
முறையில்
MRF தொழில்
நுட்பத்துடன்
இணைந்து புதுப்பித்து
தருகிறோம்.
ஸ்கூட்டர் முதல்
டிராக்டரின் பின் சக்கர
டயர்கள் வரை அதி நவீன
முறையில் புதுப்பிக்க
அணுகுங்கள்





இரண்டாம் நாட்டிய விழாவில் திருமதி ராதாவிற்கு திருமதி சந்திரகிஷோர் பொன்னாடை அணிவிக்கும் காட்சி



இரண்டாம் நாட்டிய விழாவில்
திருமதி சந்திரகிஷோர் அவர்கட்கு திருமதி கருணாம்பாள் கிருஷ்ணராஜ் மாலை அணிவிக்கும் காட்சி
அருகில் DIG திரு. சந்திரகிஷோர் & சங்கத் தலைவர்



பொள்ளாச்சி திரைப்படக் கழகத்தின் நான்காம் ஆண்டு விழாவில்
நடிகர், இயக்குநர் திரு. ''விசு'' அவர்கட்கு
தலைவர் திரு. ந. நமச்சிவாயம் பொன்னுடை போர்த்தும் காட்சி
அருகில் துணைத் தலைவர் டாக்டர் சிற்பி



இரண்டாம் நாட்டிய விழாவைத் தொடங்கி வைக்கிறார் திருமதி ராதா.



பொள்ளாச்சி தமிழிசைச் சங்கத்தின்
பதினெட்டாம் ஆண்டு விழா மலருக்கு நல்வாழ்த்துக்கள்




## சுவை சுவை

ஆவக்காய், மாங்காய் தொக்கு, கத்தரி, காய்கறி கதம்பம்
இஞ்சி தொக்கு, பூண்டு, எலுமிச்சை, மாங்காய்
இனிப்பு மாங்காய், மாவடு, பச்சை மிளகாய்
பழ மிளகாய், வெங்காயம், தக்காளி
காளான் மற்றும் பச்சை குறுமிளகு
ஊறுகாய் வகைகள்

பொருட்காட்சியில் எங்கள் ஸ்டாலுக்கு
வருகை தாருங்கள்.

## ஏ. ஆர். டிரேடர்ஸ்

தூலக்கல், பொள்ளாச்சி-642 110
தமிழ்நாடு, இந்தியா
போன் : 33 வடக்கிபாளையம்
STD : 04259-84-33

---

## AARESS AGENCIES

38, தர்மு பில்டிங்
கோவை ரோடு, பொள்ளாச்சி
தொலைபேசி : 3602

எங்களிடம் கெல்வினேட்டர் ரெப்ரிஜிரேட்டர்கள்
எல்லா கலர்களிலும், சைஸ்களிலும் கிடைக்கும்.

பஜாஜ் கம்பெனியின் பல்புகள், ட்யூப் லைட்டுகள்
மின் விசிறிகள், வாஷிங் மெஷின்கள்
மொத்தமாகவும், சில்லறையாகவும் கிடைக்கும்.

ரூட்ஸ் ஹாரன்கள் மற்றும் உதிரிபாகங்கள்
எப்பொழுதும் கிடைக்கும்.





WITH
BEST COMPLIMENTS
FROM



# BHARATI COTTON COMPANY

27/51 Arokyasamy Road (East)
R S Puram
COIMBATORE-2

Grams
"BHARTICOT"

For
Quality Cotton
Contact

Phone Office 33176
Resi 22701

பதினெட்டு ஆண்டு காலம் கலைச்சேவை செய்யும் பொள்ளாச்சி
தமிழிசைச் சங்கத்திற்கு நல் வாழ்த்துக்கள்

# P Ramaswamy & Co

**P ராமசாமி & கோ**

Timber Merchants & Dealers in
All Kinds of Timbers
82-B Meenkarai Road
POLLACHI

Sawing Contractors
**BHARATH
AUTOMATIC SAW MILLS**
Pollachi

Head Office
348 Mettupalayam Road
Coimbatore-641 002
Telephone
24022





# Hearty Congratulations
# And
# Best Wishes to
# Pollachi Thamizhisai Sangam
# on their
# 18 th Anniversary Functions



**From the Erode Friends of**
*Mr Rm V Vellayappan*
*Mr GM d Thaj*
*Mr S P Srinivasan*
*And*
*Mr P Murugaiyan*





பொள்ளாச்சி தமிழிசைச் சங்கத்திற்கு எங்களது நல்வாழ்த்துக்கள்

கோவை நீலகிரி பெரியார் மாவட்டங்களின் அங்கீகாரம் பெற்ற விற்பனையாளர்கள்



TATA
DIESEL VEHICLES

# ஸ்ரீ கவுண்டர் & கம்பெனி

**11/475 Dr நஞ்சப்பா ரோடு**
**கோயமுத்தூர் 641 018**

**Grams**
**GOUNDERCO**

**Phone**
**25591 25592 25593**

கிளைகள்

உதகமண்டலம்
பொள்ளாச்சி
ஈரோடு

டாடா சர்வீஸ் ஸ்டேசன்
கோவை ரோடு
பொள்ளாச்சி





பொள்ளாச்சி தமிழிசைச் சங்க
பதினெட்டாம் ஆண்டு விழாவிற்கு
எனது மனமார்ந்த நல்வாழ்த்துக்கள்



P S சீதா
(D/o P S மோகன்பாபு)
திரைப்படக் கலைஞர்
18 சந்திரபானு தெரு
சிந்தாதிரிப் பேட்டை சென்னை 600 002
தொலைபேசிஎண்
833092









## அசைக்கும் நாடகம்

அசைவினால் ஒரு பொருள் பெருமை அடைகின்றது. அணு அசைகின்றது. கதிர் அசைகின்றது. மதி அசைகின்றது. உலகம் அசைகின்றது. நாமும் அசைகின்றோம். நாம் அசைகின்ற தன்மையை இழந்த போது, நான்கு பேர் சேர்ந்து நம்மை அசைத்து விடுகின்றார்கள். நாடகத்தில் கண் அசையும்; உடம்பு அசையும்; உணர்வு அசையும்; அந்த அசைவுகளினால் மக்களின் உள்ளங்கள் அசையும்.

- கிருபானந்த வாரியார்



## திருவள்ளுவரின் நாடகம்

திருவள்ளுவர் காமத்துப் பாலிலே அமைத்துள்ள 250 பாடல்களும் ஒரு நாடகமே. இந்த 250 பாடல்களிலும் பாத்திரங்கள் பேசுமேயொழிய திருவள்ளுவர் இடையே புகமாட்டார்.

- கி. வா. ஜ

PRINTED AT



PANDIAN
PRINTING WORKS
CBE 641 002

